# ஸ்ரீமந் நாராயணீயம்

புலவர் க. நாகேசுவரன் எம். ஏ.

அருள்மொழிப் பிரசுரம்
எண் 2, வேது குறுக்குத் தெரு உவது டாடி
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்
சென்னை-600 024.

முதற்பதிப்பு : 1994

பிரதிகள் 1000



விலை ரூ 65-00



"This Book is Published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams Under Their Scheme aid to Publish Religious Books"

அச்சிட்டோர்:
கவிக்குயில் பிரிண்டர்ஸ்
47, நல்ல தம்பி தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-5.

# முகவுரை

இந்நூலின் கடைசி பாசுரத்தில் கூறியபடி வேதங்களில் பிறந்து இதிகாச புராணங்களால் வளர்ந்து ஸ்ரீமந் நாராயணனைப் பற்றிக் கூறுவதாலும் நாராயண பட்டதிரி என்ற கவிஞன் எழுதியதாலும் 'நாராயணீயம்' என்ற பெயர் பெற்று அடியார்களுக்கு அருளாசி வழங்குகிறது.

இந்நூல் ஸ்ரீமத் பாகவத்தை 1036 கவிகளில் இனிய சந்தத்துடன் இசைக்கிறது.

இது பாடப்பட்ட இடம் கேரளத்தில் மிகச் சிறந்த கோயிலான குருவாயூரப்பன் கோயில். அங்கு கோயில் கொண்டுள்ள கிருஷ்ணனிடம் நேரில் பேசுவதுபோல இந்நூல் அமைந்துள்ளது.

பாடியவர் மேல் புத்தூர் நாராயண பட்டதிரி என்ற நம்பூதிரி பிராமணர். அவர் பிறந்தது. கி.பி. 1560-ஆம் ஆண்டு பாரதப் புழை என்ற நதியின் வடகரையில் திருநாவா என்ற தலத்தில் அருகில் மேல்புத்தூர் இல்லம் அமைந்துள்ளது. நாராயண பட்டதிரியின் தந்தை மாத்ருதத்தர். பெரும்புலவர்; இவர் சிறு வயதில் தம் தந்தையிடமே கல்வி பயின்றார். மாதவசாரியார் என்பவரிடம் வேதங்களைப் பயின்றார். வியாகரணங்களை அச்சுதபிஷாரட என்பவரிடம் கற்றுப் பதினாறு வயதிலேயே பெரும் புலமை பெற்றார்.

சிறிது காலத்திற்குப் பிறகு இவருடைய ஆசான் அச்சுத பிஷாரடி வாத நோயால் துன்புற்ற போது பட்டதிரி அவருக்குத் தொண்டு செய்ததுடன் அந்த நோயையும் யோக பலத்தால் தாமே ஏற்றுக் கொண்டு அங்கங்கள் முடங்கினார். குருவாயூரில் சென்று தவம் செய்ய நிச்சயித்துத் தன்னை அங்கு எடுத்துப் போகச் செய்து நாள்தோறும் பத்து சுலோகம் பாடினார். நூறு நாள்களில் பாடி முடித்தபொழுது (1587-ஆம் ஆண்டு விருச்சிகம் 28, 27-11-1587) நோயிலிருந்துவிடுபட்டார். அவர் வயது அப்போது 27. அவர் 106 வயது வரை வாழ்ந்தாரென்று சிலர்

கூறுகிறார்கள். அவர், பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம் வியாகரணம் முதலிய சாத்திரங்களில் புகழ் பெற்ற மேதையாக விளங்கி நீண்ட நாள் வாழ்ந்தார் என்பதில் ஐயமில்லை.

இந்நூலின் வாயிலாகப் புகழுடம்புடன் என்றும் நின்று நிலவி வருகிறார். இத்தமிழ் மொழி பெயர்ப்பு பெரும்பாலும் மூலத்தை யொட்டி யமைந்துள்ளது.

பாகவதத்தைப் படிக்க இயலாதவர்கள் இந்நூலைப் படிப்ப தால் பாகவதம் முழுவதையும் படித்த மனநிறைவு உண்டாகும்.

இந்நூலைப் படித்துக் குருவாயூரப்பன் பேரருளை மக்கள் சமுதாயம் பெற்றுய்ய எல்லாம் வல்ல குருவாயூரப்பனை இறைஞ்சு கிறேன்.

17, செட்டித் தெரு
திருத்தணி-631206

அன்பன்,
க. நாகேசுவரன்

Dr. P. SOURIRAJAN
Prof. of Tamil-Emeritus
48, Prakasam Nagar
S. V. U. Campus

Phone: Resi: (08574)-23600.
TIRUPATI-517502.

# அணிந்துரை

உயிர்களை உய்வித்து உயர்நிலைக்கு ஏற்ற, இறைவன் தன் நிலையிலிருந்து இறங்கி வருகிறான். தன் அறக்கருணையாலும் மறக் கருணையாலும் அழகாலும் உயிர்களை ஆட்கொண்டு உயர்த்துவதை 'அவதாரம்' என்ற சொல் சுட்டுகிறது. இப்படி இறை இறங்கி வந்து எடுத்த எண்ணற்ற அவதாரங்களுள் ஒன்று ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்—கண்ணன் பிறப்பு. இத்தகு இறை நிலையின் இயல்பை ஸ்ரீமந் நாராயணீயம், பாகவதம் சிறப்பாகப் புராணப் போக்கில், கண்ணன் அவதாரச் சிறப்பைக் குருவாயூரப்பன் வடிவில் எடுத்துரைத்துச் சிறப்பிக்கின்றது.

தமிழில் திருவாய்மொழி அடியொற்றிப் பத்துக்களாக அமைந்துள்ள இந்த ஸ்ரீமந் நாராயணீயத்தை நண்பர், புலவர், கவிஞர், நாகேஸ்வரன் இயற்றியுள்ளார். கவிஞர் கம்பரைப் போல விருத்தம், துறை பாவினங்களைப் பல்வேறு சந்தங்களில் சொல்லுகின்ற கருத்துக்கேற்பப் பொலிவுற அமைத்துள்ளார். பகவத் மகிமை வரலாற்றை உரைக்கும் முதல் மூன்று பத்துக்களில் பகவத் மகிமை, பகவத் கருணை, பகவத் இலக்கணம் ஆகியவற்வை எழுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைத்திருப்பது இதனைப் புலப்படுத்தும். அன்றியும் இத்தகு விருத்தப்பாக்களின் எதுகை, மோனைகளே தமிழ் யாப்புக்குச் சிறப்பு தருவன; கவிஞர் கருத்தை எடுத்துரைக்க எளிதாய் அமைவன.

இந்த நூலின்கண் கண்ணனின் குழந்தைமைப் பருவம், சிறுவனாந்தன்மை, இளைஞனாம் ஏற்றம், மணாளனாம் மாண்பு, தலைவனாம் தகுதி, நண்பனாம் மென்மை, ஞானியார் பொன்மை, இறைவனாம் ஏற்றம் இவையெல்லாம் முறையாகவும் புராணக் கதைகளின் மேற்கோள்களுடன் தெளிவாகவும் கவிஞர் உளங்கனிந்து, உவந்து உவந்து பாடுகின்றார், இறுதிப்பத்து (நூறாவது தசகம்) திருப்பாணாழ்வார் திருவரங்கத்து அமுதின்

கமலப் பாதந்தொட்டுக் கருணைக் கண்கள், வரை—அடிதொட்டு முடிவரை கண்டு அதிலேயே நின்று, அமலன் ஆகுவான் என்னும் பதிகத்தின்வழி அமலன் ஆகுபிவின் என்னும் பதிகத்தின் வழி கற்போரையும் நிலையுறுத்துமாபோலே காயாம்பூ வண்ணனின் கேசாதி பாத எழிலில் தன்னை இழந்து, அவனைப் பெறும் வித்தகம் செய்துள்ளார்.

ஓய்வாக உணர்ந்து கற்குமாறு தமிழர்க்கு வாய்த்த நூல்களுள் இதுவும் ஒன்று. 'கற்றலின் பயன் நற்றான் தொழில்' என்ற திருவள்ளுவத்தைக் குறிக்கோளாகக் கொண்ட இந்த நூல் தமிழர்களால்—தமிழ் கூறும் நல்லுலகத்தால் சிறப்பாகத் தெய்வத் திருத்தமிழறிஞர்களால் — அருளாளர்களால் — அன்பர்களால் — அறிஞர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்பது என் நம்பிக்கை.

இதனை முதலில் கற்கும் வாய்ப்பளித்த நண்பர் திரு. நாகேஸ்வரன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

**பொன். சவரிராஜன்**

**டாக்டர் K. K. பத்மநாபன்** எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
சென்னை-601 302.

# அணிந்துரை

நாராயணீயம் என்னும் இந்நூல் கேரளாவைச் சேர்ந்த நாராயண பட்டத்திரி என்பவரால் 1034 சுலோகங்களால் சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. இது பாகவதத்தின் சுருக்கமே எனலாம். தனக்கு ஏற்பட்ட வாத நோயைப் போக்கிக் கொள்ளும் நிமித்தமே குருவாயூர் கிருஷ்ணன் சந்நிதி முன்னிலையில் இந்நூலைப் பாடினார் என்பது கர்ண பரம்பரைச் செய்தி. இவரது காலம் கி. பி. 1560. இவரது காலத்திற்கு முன்பே முடக்குவாதம் போன்ற நோய்களைத் தீர்த்திடும் புண்ணிய தலமாக குருவாயூர் பெயர் பெற்று விளங்கியது. தம் பிணி நீங்க இவர் இந்நூலில் பல இடங்களில் இறைவனை வேண்டுவதைக் காணலாம்.

குருவாயூர் கோயிலில் இந்நூலை நாளும் பாராயணம் செய்து நல்வாழ்வும், பிணி நீக்கமும் பெறுவது கண் கூடு.

இந்நூல், 100 தசகங்களையும், தசகத்திற்கு 10 பாடல்களையும் கொண்டுள்ளது. சில தசகத்தில் பத்துக்கு மேலும் பாடல்கள் உள்ளன.

இந்நாராயணீயத்தை நண்பர் திரு. க. நாகேசுவரன் எம்.ஏ, அவர்கள் நல்ல தமிழ் விருத்தப்பாவகையில் தமிழ் மக்கள் படித்து அனுபவிக்கக் கொடுப்பத்துடன் தமிழ் இலக்கியத்திற்கும் பெருமை சேர்த்திருக்கிறார். தமிழ் ஆர்வம் மிக்க இவர், தெலுங்கு மொழியில் இருந்த 'பாஸ்கர சதகம்' என்னும் நூலையும் தமிழாக்கம் செய்திருக்கிறார்.

'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்' என்னும் பாரதியாரின் மொழியைச் செயலாற்றி வருகிறார் நண்பர். அவரது தமிழ்ப் பணி இனியும்

தொடர்வதாக. அதற்கு ஆண்டவன் அவருக்கு நீண்ட ஆயுளும் ஆரோக்கியமும் அருளும் தருவதாக.

நாராயண பட்டத்திரி தம் வாழ்நாளில் 18 பிரபந்தங்கள் எழுதியுள்ளதாகத் தெரிகிறது. அவற்றுள் சிலவற்றையாவது நமது நண்பர் தமிழாக்கம் செய்து தமிழ் உலகுக்கு அளித்திடுவார் என்று நம்புகிறேன். நாராயண பட்டத்திரியின் இலக்கியப் பணி பற்றி ஒரு வரலாற்று நூல் எழுதி வெளியிட்டாலும் அவரைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ள ஒரு வாய்ப்பாக அமையும்.

பெரியாழ்வார், தமக்குக் கிருஷ்ணாவதாரத்தில் இருந்த ஈடுபாட்டினை 'திருமொழி'யில் கண்ணனுக்குப் பிள்ளைத்தமிழ் பாடி, 'பிள்ளைத் தமிழ்' என்னும் சிற்றிலக்கிய வகைக்கு அடிகோலி னார். அது போலவே, நாராயணபட்டத்திரியும் தமக்கு கிருஷ் ணாவதாரத்தில் இருந்த ஈடுபாட்டினை 'நாராயணீயம்' பாடித் தம் உள்ளக் குறையைத் தீர்த்துக் கொள்ளுவதோடு உடல் நோயையும் தீர்த்துக் கொள்கிறார்.

நண்பரின் தமிழாக்க நாராயணீயத்தைப் படித்து, மூல நூலினைப் படித்து மூல நூலினைப் படித்த உணர்வினைப் பெற முடியும். இந்நூலில் துதிப்பாடல்களாக அமைந்த பாடல்களுடன் கடைசியில் கண்ணனின் உச்சி முதல் உள்ளங்கால் வரையுள்ள வருணனைப் பாடல்களும் பாராயணத்திற்கு ஏற்ற பாடல்களாக அமைகின்றன. அவற்றுள் இரண்டு எடுத்துக்காட்டுகள்.

சிந்தையிலே நாள்தோறும் உனையெண்ணும்
வேளைகளில் சித்தியெலாம் வந்து சேரும்
சிந்தைமிகும் சித்திகளால் நினையடையல்
ஆவதிலை நேயமுடன் அன்பர்கள் துயரம் நீப்போய்
விந்தைமிகும் உன்னுருவம் அல்லாமல்
வேறொன்றும் என்னாளும் விரும்பமாட்டேன்
வந்தவரை வாழ்விக்கும் வள்ளலே குருவாயூர்
வாழ்கின்றமாதனே வாழ்வருள்வாம். 95—10

ஐந்துருவாய்க் கூறுகின்ற அழகுமிகு
வடிவங்கள் உன்றனுடை—வடிவமன்றோ
பந்தமற நோற்பவர்கள் வணங்கிடவே
பரமபதம் தருவோய் நீயே
தொந்த மற்றோர் தொழும் ஈசன்
நீயன்றி வேறொருவர் உண்டோ இங்கே
சொந்தமெனப் பணிபவர்கள் துயர்
தீர்க்கும் குருவாயூர் கோமானே நீ. 96—2

பக்தி மேலீட்டால் உள்ளம் தூய்மை அடைந்து, தத்துவ ஞானம் ஏற்பட்டு முக்தி நிலையைப் பெற வேண்டும் என்பதையே இந்நூல் உணர்த்துகிறது. இந்நூலின் பாகமாக விளங்குகின்றன கடைசி ஐந்து தசகங்கள்.

மூல சுலோகத்தை வரிவரியாகத் தமிழாக்கம் செய்யாமல், மூல சுலோகத்தின் பொருளை அறிந்து—உணர்ந்து அதனைத் தமிழுக்கேற்ப அளித்திருக்கிறார் நண்பர். எனவே மூல நூலைப் படிப்பது போன்ற உணர்வையே இந்நூலைப் படிப்பதால் உணர முடிகிறது. இந்நூலுக்கு 1978ல் திரு. ரா. பத்மநாபன் என்பவர் ஒரு தமிழாக்கம் செய்து வெளியிட்டிருக்கிறார். அதைக் காட்டிலும் நண்பர் க. நாகேந்திரன் தமிழாக்கம் சிறப்பாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

அந்நூலின் முன்னுரையில் ''மூல நூலில் உள்ள அழகு முழுவதும் வரும்படி மொழி பெயர்ப்பது அருமையிலும் அருமையானது. பட்டத்திரி அவர்களே மீண்டும் அவதரித்துத் தமிழ்ப் புலவராகி நாராயணீயத்தை மொழி பெயர்க்க முற்பட்டாலும் மூல நூலின் அழகை மொழி பெயர்ப்பில் கொண்டு வர முடியாது'' என்று கி. வா. ஜகந்நாதன் குறிப்பிடுகிறார். அதற்குச் சவாலாக அமைந்திருக்கிறது நண்பர் க. நாகேசுவரனின் இத்தமிழாக்கம்.

தமிழ் அறிந்தவர்கள் இந்நூலைப் படித்துப் பயன் பெறுவார்களாக நண்பர் மேலும் பல நூல்களைத் தமிழாக்கம் செய்து தமிழ் உலகுக்கு அளிக்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன் வேண்டுகிறேன்.

**டாக்டர் K.K. பத்மநாபன்**

44, 8வது மெயின் ரோடு
ராம் நகர் வடக்கு விரிவு
வேளச்சேரி, சென்னை-609 042,
20-12-1994

# பொருளடக்கம்

தசகம் 50 முதல் 64 வரை



தசகம் 65 முதல் 73 வரை (பத்தாவது ஸ்கந்தம் நாலாவது பாகம்
பிருந்தாவன லீலை தொடர்ச்சி

தசகம் 74 முதல் 77 வரை (பத்தாவது ஸ்கந்தம் ஐந்தாவது பாகம்)
மதுரா லீலை



தசகம் 78 முதல் 90 வரை (துவாரகா லீலை)



தசகம் 91 முதல் 97 வரை (பதினோராவது ஸ்கந்தசாரம்)

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 18 | தனம் | தினம் |
| 19 | 5 | பார்ப்பலரும் | பார்ப்பரும் |
| 21 | 11 | கிலருறு | இலகுறு |
| 11 | 23 | உகந்த் | உகந்த |
| 28 | 3 | ரசாதந்தின் | ரசாதலந்தான் |
| 33 | 12 | பொய்த்தனர் | மொய்த்தனர் |
| 36 | 4 | சென்றனர் | சென்றனிர் |
| 48 | 3 | தோறுமான | தோயுதவ |
| 48 | 7 | சென்ற | சென்று |
| 54 | 10 | சிரந்த | சிறந்த |
| 56 | 11 | தாவலிற்றி | தாவலின்றி |
| 59 | 6 | பற்றி | பெற்றி |
| 60 | 1 | அஜாமிகுளோ | அஜாமிளோ. |
| 62 | 19 | பாரித்தால் | பாரித்தல் |
| 62 | 13 | கருமேகங்களை | கருமங்கள் |
| 67 | 19 | கென்றிட்ட | நன்றிகெட்ட |
| 73 | 1 | மோஷம் | மோக்ஷம் |
| 76 | 12 | சொற்றற்தார் | சொற்றார் |
| 77. | 2 | நீளும் | நீயும் |
| 225. | 1 | தொண்ணூற்றோறாவது | தொண்ணூற்றோராவது |
| 228. | 1 | பாதங்கள் | பாதகங்கள் |

# ஸ்ரீமந் நாராயணீயம்

## முதல் தசகம்—பகவத் மகிமை

1. உலகெலாம் போற்றிடும் அறிவுடன் ஆனந்த
உருவுடன் உவமை யின்றி
இலகிடும் பந்தங்கள் இல்லதாய் வேதங்கள்
என்றென்றும் அறியொணாதாய்
மலமதை யறுத்திடும் பிரமதத்துவ மாகி
மாந்தர்கள் கண்ட போதே
நிலவிடும் இன்பங்கள் தங்கிடவும் என்றென்றும்
குருவாயூரில் வாழுமதுவே.

2. யாவர்க்கும் அடையொணாப் பரம்பொருள் எளிதாக
இலங்கிடக் கண்டிருந்தும்
பாவிகள் உடலாலும் வாக்காலும் மனதாலும்
பரவிடும் தன்மை நீங்கித்
தேவை யென சிற்றின்பம் தேடியே மாந்தர்கள்
திரிந்திடல் அற்ப மன்றோ
சேவை செய உயிர்க்குலம் அனைத்திற்கும் உயிரான
குருவாயூர் சென்றடை வமே.

3. குணங் களில் கலவாத மலமற்ற சத்துவம்
பூதங்கள் உந்தன் உருவாம்
இணங்கியே வியாசமுனி சொன்னவுரை பலமுறையும்
என் செவியில் ஒலிக்குதையா
வணங்கிடும் தூயதாய் ஆனந்த முடன்ஞானம்
மறையாமல் ஒளியை நல்கும்
மணங்கமழ் திருவுருவில் கேட்கவும் எண்ணவும்
இனிமைதரும் உனது வடிவே.

4. அசைவின்றி என்றுமே நிறைந்திடும் எல்லையறும்
மூத்தெனும் நதிக லக்க
இசைவுறும் பரப் பிரம வாரிதியில் உண்மைசேர்
உமதுஉரு அலையாகியே
நசையுடன் விளையாடும் முழு உருவ மானநீ
குற்றமுடன் குறையிலாமல்
வசமுறும் நற்குணம் வாய்ந்தவன் என்றநிலை
வள்ளலுன தவதாரமே.

5. பிறப்பிலாய் இல்லாத ஒன்றுபோல் பிரபஞ்சம்
உம்மிடம் லயித்தி ருந்தும்
அறப்பெரிய கற்பத்தில் அனைத்துமே வெளிப்படல்
நடப்ப தொன்றாம்
உறப் பெரும் பிரகிருதியின் தன்மை சேர் சத்துவப்
பெரும்பகுதி கைக் கொண்டனை
மறப்பினும் யோக மகிமைதனைக் கொண்டநீ
மாபெரும் வடிவு கொண்டாய்.

6. குருவாயூர் தன்னிலே குடிகொண்ட தேவனே!
குலவிடும் மேக மெனவும்
மருவிவரும் அழகுடன் காயாம்பூ நிறமுடன்
மாபெரிய புண்ணி யர்க்குப்
பெருகொளிக் கண்ணாகி பரிபூரணானந்த
பிழம் பெனத் திருமகட்கு
மருவவரும் திருவுருவம் நினைப்பவர் மனதிலே
அமுதமருள் உனது உருவே.

7. வென்றிடற் கரியவா, உலகுயிர் அனைத்திற்கும்
விளைத்திடும் துன்பம் மெல்லாம்
நின்றிடும் உன்னுருவில் நிகழ்ந்தவை என்மனம்
நிகழ்த்தியது ஒரு காலையில்
நன்று நீ உலகுயிர் படைத்திடும் ஞாயமென
நானின்று கண்டு கொண்டேன்
நின்றிடும் உண்மையுடன் ஞானமும் நீதரும்
உணர்வெனும் கடலில் கண்டேன்.

8. வணங்கு வோர் முன்னின்று வாழ்த்துவோர் உள்ளத்தில்
வரதனாய் நிலைத்து நின்றே
இணங்கவே வீடருளி இனியகற் பகமாக
இலங்கியும் மாந்த ரெல்லாம்
குணங்கெட்டு வானுலகில் உள்ளதொரு தருவான
கற்பகத் தருவை நாடி
இணங்கிடும் பொருள் வேண்டி களைந்திடும் நிலைதன்னை
என்னென்று சொல்வ தந்தோ.

9. கருணையால் உலகிடைப் பிற தெய்வம் யாவையும்
காமுறும் பொருளை நல்கும்
பெருமைமிகு முன்னையே பேணுவார்க் கருளிடும்
பெரும நின்புகழ்க் கெல்லையோ
அருமை மிகு மட்டமா சித்திகளை அவனியில்
அளிப்பவர் பலர் உண்டு காண்
திருமிகும் ஆனந்தம் அடியவர் பெறுவார்கள்
தேவனே அடிகள் போற்றி.

10. குருவாயூர் தன்னிலே கோயில்கொண் டுள்ளவா
குலவு முனை தனம் சங்கரர்
பரவுவார் பலர்போற்ற பாவங்கள் தீர்ந்திடும்
பண்புடன் இலங்கு மன்றோ
அரவணைப் பதனால் நல் கானிருள் தன்னிலும்
அதிகமுறு அருளின் உருவே
திருமிகும் உனது புகழ் ஆசையறு முனிவரரும்
தினந்தினம் புகழ்வர் மன்னோ.

# இரண்டாவது தசகம் — பகவத் கருணை

1. பரிதியின் ஒளியினும் ஒளிவிடும் மணிமகுடம்
 பாரெலாம் புகழும் திலகம்
 கருணை பொழி கண்களுடன் கசிவுமிகு புன்னகை
 கமழ்கின்ற நாசி கன்னம்
 உருளவரும் குண்டலம் கழுத்தில் ஒளிர் கவுத்துபம்
 வனமாலை முத்து மாலை
 பெருமைமிகு ஸ்ரீவச்சம் இவைபெற்ற உன்வடிவை
 பேதையேன் பரவு கின்றேன்.

2. அங்கதம் கேயூரம் கங்கணம் இரத்தின மிழை
 மோதிரம் விளங்கு கைகள்
 சங்குடன் சக்கரம் கதை தாமரை தங்க
 தகுதிமிகும் அரை ஞாணுடன்
 பொங்கிவரும் அழகுமிகு பீதாம்ப ரத்துடன்
 மாசற்ற பாத கமலம்
 எங்கெங்கும் நிறைந் தொளிரும் இனியநின் திருவுருவை
 என்றென்றும் நினைவு கூர்வேன்.

3. எங்கெங்கும் நிறைந்துளாய் மூவுலகு தன்னிலும்
 ஏற்றத்தின் ஏற்ற மாகி
 பொங்கிவரு மனந்தனால் கவர்வதினும் மேலான
 பொலிவெலாம் அமைந்து நிதமும்
 தங்கிடும் இனிமையில் அழகினில் ஒப்பின்றி
 தாரணி புகழ்ந் தேத்திடும்
 இங்கிதம் கொண்டொளிரும் உன்னுருவம் உலகிடை
 என்றென்றும் இன்பம் அருளும்.

4. அழகினில் மயங்கியே திருமகள் வதிந்திடவும்
அங்கும் நீ இருப்பதில்லை
பழகுறும் உன்னழகில் திருமகள் மயங்கியே
பருகிடும் நிலைமை யுடனே
இழையோடி நிற்பதால் உலகினர் திருமகளை
என்றென்னும் சபல சித்தம்
நிகழ்ந்திடப் பெற்றவள் என்று சொலும் சொற்களை
நித்தமும் கேட்க லுற்றேன்.

5. திருமகள் பிறரிடம் நிலையாமை நின்னுருவின்
திறமெனவும் கண்டு கொண்டேன்
உருகி உன் திருநாம மகிமையை உள்ளபடி
உரைத்திடும் அன்பர் குழுவில்
திருமகள் உறைகின்ற திறமையை நான் தினமும்
தியானமாய் உணர்வ தாலே
கருணையே வடிவான காட்சியே உன்றனைக்
கணமும் நான் மறத்த லறியேன்.

6. கண்டிடும் போதெலாம் புதுமையுறும் உன்வடிவம்
அழகுடன் கருணை பொழியும்
விண்டிடற் கரிதான பரத்சித்து ரூபமாய்
விளங்கிடும் உருவ மதனை
எண்டிசையி லுள்ளவர் பலமுறை கேட்டிடவும்
எண்ணுதல் இயற்கை யன்றோ
கண்டதும் உள்ளத்தைக் கவர்ந்திடும் அங்கங்கள்
மகிழ்வுடன் கண்கள் கவரும்.

7. இப்பெரிய நிலையினால் பத்தியெனும் யோகமே
எல்லவரும் போற்ற மிளிரும்
ஒப்பரிய கன்மமுடன் ஞான யோகங்களில்
உயர்வுடன் மிளிர்வதாகும்
செப்பரிய அழகுமிகு செம்மலே அன்பினால்
செகமெலாம் ஆளும் அண்ணல்
இப்பரிசு மிக்க வுன் வடிவமே உலகிடை
எல்லோரும் போற்றும் வடிவாம்.

8. பயனுக்குள் பயனின்றி கடமைகள் செய்திடும்
பண்புமிகு கரும யோகம்
நயனுறக் காலத்தைத் தாண்டியே தன்பயனை
நாளுமே தந்திடுவ தாம்
வியனுறும் உபநிடத ஞானமோ இந்திரிய
உணர்வினைத் தாண்டி நிற்கும்
பலன்மிகும் பத்தியே என்றென்றும் உயர் நலம்
பாலிக்கு மென வறிந்தேன்.

9. வருத்தமுடன் கருமத்தை மேற்கொண்டுபக்தியுடன்
ஞானமெனு மார்க்க மதனைப்
பொருத்தமுறு பக்தியெனும் மார்க்கத்தை இவ்வுலகில்
பெற்றவர்கள் சிலபேர்க ளாம்
திருத்தமுறு தர்க்கமார்க் கத்திலே சிரமமுடன்
பிரமத்தில் கண்டுய்வ ராம்
அருத்தியுற அன்பருக் கருள் செய்ய குருவாயூர்
அமர்ந்தருள் அருள் மேக மே

10. அமுதமெனும் வெள்ளத்தில் பத்திதான் மூழ்கியே
அனுதினம் திளைத் திடு தலால்
இமையேனும் வருந்தாமல் ஞானத்தை எல்லோரும்
ஏற்றிடச் செய்யு மன்றோ
சுமையான பிறவியின் பயனையே உணர்ந்திடும்
சுவையுறும் தன்மை யுண்டாம்
அமைதியுறும் திருவடியில் அன்பெனும் சுவையுடன்
அடைந்துய்ய அருள் செய்கவே.

## மூன்றாவது தசகம் — பக்தனுடைய லட்சணம்

1. உன்றனது திருநாமம் ஓதியும் ஆனந்தம்
உற்றுன்னை தியானம் செய்தும்
உன்றனது குணங்களையும் கதைகளையும் ஓதியும் -
உறுதிமிகு மனத்திண்மையால்
நின்றிடும் பக்தர்கள் யாவரோ அன்னவர்
நித்தலும் அனைத்து வரமும்
நின்றிடப் பெற்றவர் என்று நான் உளமார
நினைத்து வாழ்த்திடுவே னரோ.

2. ஆதிவிதி துயரிலே அடைவுறும் என்மனது
அண்ணலுன் பாத மலரைப்
பேதியா வகையிலே சேவிக்க விழையவிலை
பேதையர்க் கருளு கண்டாய்
ஓதியே உன்பாத மலர்களை வணங்கிநான்
ஒருவரும் இலா இடத்திலே
வேதனைகள் நீங்கியே வாழ்ந்திடவும் வழிகளை
வித்த காஎனக் கருள்வாய்.

3. உன்றனது கருணைதான் உற்றிடின் உலகினில்
உற்றிடா தேது முண்டோ
என்றனது துன்பமாம் குவியலை என்றுமே
உடனுடன் களைய வருவாய்
ஒன்றிய உளத்துடன் துன்பமே இல்லாமல்
எல்லையறும் அன்பர் கூட்டம்
பொன்றிடா வகைகண்டு முத்தராய் வாழ்கின்ற
பொற்பெலாம் காண விழைவேயோ.

4. உலகெலாம் புகழ்கின்ற முனிவரில் பெரியராம்
உருகெழும் நாரதர் முதல்
பலபல முனிவரரும் உன்றனது பாதமலர்
தியானத்தில் துன்பம் தீங்கி
இலகுறும் சச்சிதா னந்த மெனும் அத்துவித
வெள்ளத்தில் கவலை யின்றி
வலம் வரக் கண்டனம் வையத்தில் இதனினும்
வாழ்வென்றும் ஒன்று முண்டோ.

5. என்றனக் குன்னிடம் இணையிலா பக்திநிலை
என்றென்றும் இலக வேண்டும்
பொன்றிடச் செயும்துன்ப மூட்டையைப் போக்கினால்
போதமெல் லாம் கிடைக்கும்
இன்றெனில் வியாசரது இன்னுரையும் உன்னுடை
இன்னுரையும் இவ்வுலகிலே
நின்றிடும் வழிப்போக்கன் சொன்னஉரை போன்றதொரு
நிலையாகிப் போகுமன்றோ.

6. பக்தியால் உன்றனைப் பரவிடத் தொடங்கிடின்
பரவு முன்குணம் தோன்றுமே
சித்தமுன் பால்வைக்க தீமைகள் யாவையும்
சிதறியே ஓடி மறையும்
உத்தமம தாகியே ஒளிவிடும் தூய்மையாம்
உயர்ந்த ஞானம் உதிக்கும்
எத்தனையும் பேதமில் பிரமத்தை உணர்கின்ற
இன்பமே சேரு மன்றோ.

7. கால்களால் உன்றனது கோயிலை வலம் வந்து
கைகளால் பூசை செயவும்
சாலவே கண்களால் உமது மூர்த்தந் தன்னை
கண்டு களிகூர்ந்து யாவும்
ஏலுமொறு துளவத்தின் நறுமணம் தன்மையே
என்னாசி நுகர்ந்திடவுமே
காலமெல்லா மெனது காதுகள் உன் பெருமை
கணக்கின்றி கேட்க அருள்வாய்.

8. அளவற்ற கவலைகள் நோய்களால் அலைகின்ற
அடியனேற் கருள் சுரக்கவும்
உளமதில் ஆனந்த வெள்ளமே ஓடவும்
உடல் மயிர்க் கூச்செறியவும்
அளவிலாத் துன்பங்கள் யாவையும் இல்லாமல்
அகன்றிடவும் உன்ற னருளால்
குளமாக என் கண்கள் மாறவும் என்றென்றும்
குறைவற்ற வாழ் வருளு வாய்.

9. உன்னிடம் பத்தி இல்லாதவரும் உகிலே
உயர்வுடன் வாழ்தல் ஏனோ?
உன்னிடம் பக்தியைக் கொண்ட நான் உலகத்தில்
துன்பத்தில் உழலலுண்டோ?
உன்றனக் கென்னால் ஓர் கெட்ட பெயர் தானுமே
என்றென்றும் உறுதல் வேண்டா?
உன்றன் நல் வீரத்தில் கஞ்சனை அழித்தனை
உற்ற தொண் டாற்ற வருள் வாய்.

10. கருணை உனக் கென்றன்பால் எப்பொழுது கூடுமோ
அதுவரையில் அடியேனு மே
கருணைமிகு முன்பாத கமலங்கள் தம்மிலே
கவலைகள் அனைத்தும் விட்டே
வருணனைகள் செய்கிறேன் பூசனைகள் பலபலவும்
வழிபாடு செய்திடுகி றேன்
கருணை வடி வானவா குருவாயூர் கடவுளே
கடையனைக் காத்தருளு வாய்.

## நான்காவது —தசகம்

### வேறு

1. உன்றனைப் போற்றுகின்ற உடல்நலம் வேண்டுகின்றேன்
பொன்றலில் அட்டாங்க யோகப் பொலிவுகள் பலவும் பெற்றே
உன்றனை அடையும் அந்த உயர்வழி கிட்ட லாகும்
என்றனக் கருள வேண்டும் ஏற்றமார் குருவா யூரா.

2. இயமங்கள் பலவும் செய்து நியமத்தில் நிலைத்து நின்று
பயமிலா ஆசனங்கள் பலப்பல செய்து கொண்டு
உயர்வுறும் வீடு பேற்றை உற்றிடும் வழியை நல்கிப்
தயைதனைப் புரிவாய் எங்கள் குருவாயூர் வள்ளலே நீ.

3. பிரணவத்தைத் தினமும் ஓதிப் பிராணாயா மதத்தைச் செய்து
முரணுறு இந்திரியங்கள் முனைப்பினை அடக்கிக் கொண்டு
அரணென உனையே எண்ணி அனுதினம் பணிதல் செய்து
வரமருள் தேவே உன்னை வணங்கியே வாழ்த்தல் செய்வேன்.

4. உன்னுரு மனதின் கண்ணே ஒன்றாத வேளை தன்னில்
தன்னிலை மறந்து தியானத் தகவுடன் பணிதல் செய்வேன்
வன்னமார் உனது பாத வளமலர் பணிதல் செய்து
நன்னிலை நாடுகின்ற நாட்டத்தைக் கொள்வேன் அப்பா.

5. நின்னருள் பெற்ற நாங்கள் நீண்டதோர் தியானயோகம்
பன்னிடப் பெற்றே உன்றன் பார்புகழ் அங்கம் யாவும்
வன்னமாய்க் காணப் பெற்றே வளமுறும் உருவைக் கண்டு
என்றென்றும் தியானம் செய்தே இணையிலா இன்பம்
காண்போம்.

6. உன்றனல் உறுப்ப னைத்தும் உள்ளவா றுணரு வோர்க்கு
நன்றென அவற்றில் உள்ள நாட்டத்தைக் கொண்டபேர்க்கு
நின்றிடும் நிறைவு பெற்ற நின்னுறு மனதின் கண்ணே
குன்றென நிமிர்ந்த தோளாய்க் குருவாயூர் கோயிலோயே.

7. பிரமத்தின் வடிவ மான பேரருட் சமாதி யென்னும்
வரந்தனை உம்மிடத்தே வாய்த்திடப் பெற்ற நாங்கள்
நிரந்தரச் சமாதி நீங்கில் தாரணை நினைப்பு கொள்வோம்
புரந்தரன் முதலோர் போற்றும் குருவாயூர் புனிதக் கோவே.

8. பழகிடும் யோகந் தன்னால் பார்ப்பலரும் உமது மேனி
அழகினை நுகர்வேராகி பத்தரில் சிறந்தோ ராகி
விழைவரும் சுகரைப் போல நாரதமுனிவர் போல
தழைத்திடும் பத்திமேவி தரணியில் சிறப்பர் மாதோ.

9. உன்னிடம் ஈடுபட்டால் உயர்வுறுமுத்தி தன்னை
வன்னமாய் இகத்தில் பெற்றே வானுல கின்பங்கண்டு
பின்னமில் ஆறாதராப் பேற்றினை அடையப் பெற்றது
தன்னிலை மறந்தே உந்தன் தாள்களைப் பணிவார் மன்னோ.

10. முத்தியைப் பெற்ற மேலோர் உடலினை உதறிவிட்டுத்
தத்துவப் பொருளா முன்னைத் தகவுடன் அடைவார்
மன்னோ
முத்தியின் முதன்மைதன்னை முழுமையாய் உணர்ந்த
மேலோன்
தத்துவம் உணர்ந்தே ப்ரம்ம தனிநிலை காண்பான் மன்னோ.

11. அங்கியும் பகலும் சுக்ல பட்சமும் உத்தாராயணம்
தங்கிய அதிஷ்டானத்தின் தேவதை உலகந்தன்னில்
பொங்கிடும் உணவர்வால் மாய்ந்தோர் மனத்திடை யின்பம்
கொண்டே
மங்கலில் துருவன் பேற்றை மாண்புடன் பெறுவான் மன்னோ.

12. மகர் உலகடைந்த பின்பு மாண்புறும் ஆதிசேடன்
முகங்களில் பொலியும் அங்கி ஆவியில் வருந்தும் போதோ
தகவுற அதற்கு முன்போ பிரமாவின் உலகைக் கண்டு
புகலரும் பெருமைகாணும் புனிதத்தைப் பெறுவர் மன்னோ.

13. பிரமனின் உலகிலேனும் பிறழ்வில் உன் உலகி லேனும்
விரவிடும் மானுடன் தான் உலகியல் அழியும் வேளை
பரவிடும் உனது வீட்டைப் பற்றிடும் நிலையைக் கண்டே
திரமிகும் யோகத் தாலே பிரமாண்டம் தாண்டிச் செல்வான்.

14. எழுவகை ஆவரணங்கள் ஒவ்வொன்றாய்த் தாண்டிச் சென்றே
பழுதிலா சாயுஜ் ஜத்தைப் பார்த்திடும் பேற்றி னோடு
அழகுறும் நிலையைக் காணும் அற்புதம் தன்னைப் பெற்றே
முழுவதும் உன்றன் இன்பம் முகிழ்ந்திடப் பெறுவர் மன்னோ.

15. சச்சிதா னந்த மாகிச் சார்ந்தவர்க் கருளும் தேவே
இச்சையே இல்லாராகி வீட்டினில் இணைந்த பேர்கள்
இச்சைதான் மிகுந்த இந்த இகல் உலகத்னை நாடார்
மெச்சரும் வீடு கண்டோர் வேறொன்றைக் காணலுண்டோ.

## ஐந்தாவது தசகம் — விராட் புருஷ உற்பத்தி

1. ஊழியில் மாயை யுன்பால் ஒடுங்கியே செயலிழந்து
ஆழமாய் நிற்கும் வேளை காலமும் சூக்குமத்தின்
சூழலாம் உலகம் தன்னில் செயலின்றி துவண்டுபோகும்
பாழுறும் இராப்ப கல்தான் இன்றியே நீயே உள்ளாய்.

2. உண்மையோ டானந் தத்தில் உலவிடும் வேளை தன்னில்
திண்மைசேர் காலம் கன்மம் குணமுடன் ஜீவன் மற்றும்
வண்ணமார் உலகெலா முன் வயிற்றிடை யடங்கு மன்றோ
உண்மையால் அவைய னைத்து உள்பொருள் ஆகு மன்றோ.

3. உலகினைப் படைப்ப தற்கே உகந்திடும் மாயை தானும்
பலப்பல படைப்பைச் செய்து பாரிடைச் சலிப்பே யெய்தும்
இலகுறு மாயை தன்பால் காலமும் செயலும் தோன்றி
பலகுணம் படைப்பி னாலே மாயைக்கும் உதவும் மன்னே.

4. மாயையுன் அருகி ருந்தும் மாயையில் கலந்தி டாமல்
நேயமார் சாட்சி யாகிச் சீவனாய் நேர்ந்து நின்றாய்
மேயதோர் காலம் கன்மம் தன்மைகள் யாவும் மாயை
தோய்ந்திடும் படைப்பே நல்ல மகத்தெனத் துலங்கக்
கண்டோம்.

5. படைப்பது முக்கு ணத்தின் பகுதியைப் பெற்ற போதும்
இடைப்பட நான் என்றோதும் எண்ணத்தைத்தோற்று விக்கும்
கிடைத்திடும் பிறவி யின் கண் தமோகுணம் சிறந்து நின்றே
நடைபெறும் அகந்தை ஒன்றே வாழ்வினில் நயந்து தோன்றும்.

**வேறு**

6. அகந்தையது தோன்றுதலும் கைகாரிகம் தைஜஸம்
தாசமதமாய்
அடைவுற்ற மூன்றுவித அமிசத்தால் திசைகள் வாயு
உகந்த் சூரியன் வருணன் அஸ்வினிகள் அக்னி இந்திரன்
உலகளத்தான் பிரஜாபதி சந்திரன் பிரம்மா

சகம்புகழும் ருத்ரன் க்ஷேத்ரக்ஜன் முதலாக
சார்ந்த பல தேவர்களைப் படைத்தல் செய்து
மிகுதியுறு செயல்பலவும் இயற்றி மேனாள்
மேன்மையுறு செயல்பலவும் செய்த தங்கே.

வேறு

7. அகங்காரம் சாத்துவிக விகாரம் தானே
சார்ந்த மனம் புத்தி அகங்காரம் மற்றும்
மிகப் பெரிய மனம் புத்தி அகங்காரங்கள்
மேவிவரும் அந்தக் கரணங்கள் தம்மை
உகந்திடுமோர் ராஜசமாம் அகங்காரத்தில்
தைஜசமாம் பத்துவித இந்திரியங்கள்
இகத்தினிலே தாமதமாய் அங்காரத்தில்
எண்ணரிய ஆகாயச் சத்தம் தோன்றும்.

8. ஏழுவித தன்மாத்திரை தமிலிருந்து
எண்ணரிய ஆகாயம் தன்னை ஆக்கி
சூழுமோ வாயுவுடன் தொடுவுணர்வு
தோன்றுமொரு சாற்றுடனே உருவம் ஆக்கி
ஆழமுறு நெருப்பாக்கி சுவையுமாக்கி
அமைதி நிறைதண்ணீரும் ஆக்கித்தந்து
கேழ்கிளரும் ஐம்பூதத் தடவை யாக்கிக்
கேடிலா அகங்காரத் துணையால் செய்தீர்.

9. இவ்வனைத்தும் உலகத்தைப் போக்குகின்ற
இணையில்லாத் தன்கைதனை யெய்தவிலை
செவ்வையுறும் பிரமாண்டந் தன்னை யாக்கத்
திருவுளந்தான் கொண்டதனால் நீதான் இங்கு
எவ்வெவையும் தோன்று மொரு வழிவகுத்தாய்
ஏற்றமுறும் உலகனைத்தும் இயற்றி வைத்தாய்
அவ்வனைத்தும் செயல்படவே ஆற்றல்தன்னை
ஏள்ளியள்ளித் தந்தனையால் அண்ணல் நீயே.

10. அத்தகைய பிரமாண்டம் நீரின் கண்ணே
ஆயிரமாம் ஆண்டுகளாய் இருந்ததுண்டு
வித்தகனே அதைப் பிளந்து விராட் ரூபத்தில்
விந்தைமிகும் கைகால்கள் தலைகளோடு
உத்தமனாம் உருவுடனே சேர்ந்திருந்தீர்
ஊனமிகு நோய் நொடிகள் நீங்கும் வண்ணம்
எத்தனையும் எனைக்காக்க வாருமையா
என்னவனே குருவாயூர் ஏந்தலே நீ.

## ஆறாவது தசகம்—
## விராட் புருஷனனின் உலக வடிவம்

**வேறு**

1. ஈரேழு புவன மாகி இலங்கிடும் வடிவு கொண்டோய்
பேரெழில் உள்ளங் கால்கள் பிலமெனப் புகலலாகும்
கார்வண்ண பாதந் தன்னில் மேல்புறம் ரசாதந்தான்
தேர்வுறும் கணுக்கால் தம்மை மகாதலம் என்பர் மன்னோ.

2. உன்னுடைய முழந்தாள் கள் தாம் தலாதலம் மடிப்புமே
சுதலமாகும்
உன்னுடைய தொடையின் கீழ் மேல் உவப்புறும் விதலமோடு
பொன்னமர் அதலமாகும் நாபி ஆ காய மாகும்
வன்னமார் மார்போ அந்த வானவர் உலக மாகும்.

3. கழுத்தது மகர்உலகாம் முகமுமே ஜனலோ கங்கா ண்
விழுப்பெரு நெற்றி தானும் வியனுறு தபோலோ கங்காண்
முழுப் பொருள் சிரமும் சுத்த உலகென லாகுமன்னோ
பழுத்திடும் உலக மெல்லாம் உன் வடி வாகும் அன்றோ.

4. உலகத்தின் வேரை ஒத்தாய் உம்முடை உச்சி வேதம்
இலகிடும் மயிர்தான் மேகம், புருவங்கள் சத்யலோகம்
உலவுறும் இமைகள் தாமும் உகந்தநல் இராப்பகல்கள்
அலகிலோய் உன்றன் கண்கள் ஆதவன் வடிவம் கண்டாய்.

5. கடைக்கணின் நோக்கே என்றும் படைப்பாகும் காதுகள்தாம்
இடைப்படும் திசைகள் நாசித் துளைகளே அஸ்வினியாம்
அடைவுறும் இதழ்கள் லோப வெட்கமாம் பல்உடுக்கள்
மிடைந்திடும் தெற்றிப் பல்லோ இயமனின் கூறதாகும்

6. சிரிப்பது மாயை மூச்சு வாயுவாம் நாக்கு நீராம்
விரிவாக்கு பறவைக் கூட்டம் கரங்களோ சித்தாரவர்
பரிந்துரை வாயோ அங்கி கைகளோ தேவராவர்
பரந்தொளிர் மார்பு தானும் பாரவரும் தேவராவர்.

7. பின்புறம் அதர்ம மாகும் மனமது சந்தி ரன் காண்
உன்னுடை இதயந்தானும் உன்னரும் பிரதானமாகும்
உன்னுடை உதரம்தானும் உயர்கடலாகு மன்றோ
உன்னுடை பிறவுறுப்பு உலகத்தின் வடிவ மாகும்.

8. உன்னுடை இடைதான் உள்ள விலங்கின மாகும் காலில்
பன்னிய நகங்கள் யானை ஒட்டகம் குதிரையாகும்
உன்னுடை முகம் கைதொடைகள் கால்களோ
உலகின்கண்ணே
வன்னமார் வருண பேத வகையெனத் துலங்கு மன்றே.

9. செயலெலாம் வாழ்க்கை யென்னும் சக்கரச் சுழற்சி யாகும்
மயலிலா வீரியந்தான் மயக்குறும் அசுரக் கூட்டம்
வயமிகு மெலும்பு குன்று நாடிகள் நதி உரோமம்
வியன்மரம் உன்றன் மேனி வெற்றியை விளைக்குமன்றோ.

10. இத்தகு வடிவந்தன்னை இவ்வுல குள்ளோர் தாமும்
நத்திய கருமம் தீர்ந்தால் நாளுமே துதிப்பர் மன்னோ
உத்தம மாகி உள்ளத் துறைகின்ற பெருமான் உன்னை
பக்தர்கள் யாரும் போற்றிப் பரிவுடன் பணிகின் றோமால்.

# ஏழாவது தசகம்—ஹிரண்ய கர்ப்ப உற்பத்தி

வேறு

1. பதிநான்கு உலகிடைத் தோன்றிடும் பரமனே
பார் புகழும் பிரம்ம னானீர்
வதிகின்ற மூன்றான உலகிடை பிரமனும்
வாகுறும் இரண்ய கர்ப்பன்
துதிசெயும் ரஜோகுணத் தொந்தமொடு படைப்பினைத்
தொட்டுருதல் கண்டு கொண்டேன்
பதியெனும் குருவாயூர் தனில் வளர்பரமனே
பாதங்கள் போற்றி போற்றி.

வேறு

2. பிரமன் தான் படைப்பின் கண்ணே தெளிவினைப்
பெறாத காலை
பிரமனைத் தவம்செய் தற்குப் பெருமானே நீ பணித்தாய்
அரவணைத் துயிர்கள் தம்மை அன்புடன் காக்கும் தேவே
கரங்குவித் துன்னைப் போற்றக் கடையனேன்
எண்ணங் கொண்டேன்.

3. உலகெலாம் நீரில் மூழ்கி உற்பவம் நிகழ்ந்த காலை
இலகவே என்னிடத்தில் இன்னுரை பகர்ந்தோன் யாரென்
றுலகிடை பிரமன் கேட்க உம்மையே அவன் வணங்க
இலகிடும் வைகுண்டத்தை ஈந்தளிர் பிரமனுக்கே.

வேறு

4. எவ்விடம் மாயாவிகாரங்க ளற்றதோ
எவ்விடம் உலகின் அளவோ
எவ்விடம் சோகமும் கோபமும் நீங்கியே
அஞ்ஞான எல்லை யிலதோ

எவ்விடம் பய மெனும் இருளகல நின்றதோ
எவ்விடம் மகிழ்ச்சி மயமோ
அவ்விடம் வைகுந்த உலகென்று பிரமற்கு
அன்று நீ காட்டிவைத்தாய்.

வேறு

5· சிவந்த உன்பாதந் தன்னில் சேர்ந்திடும் அயன்த னக்கு
நிவந்திடும் படைப்பி னாலே நீளவே பந்த மில்லை
அயனே நீ கவல வேண்டா என்றுரை ஆதியேநீ
மயலறும் என்றனக்குன் மாண்புறு கழல்கள் நல்காய்.

# எட்டாவது தசகம் — ஊழியும் பிரளயமும் (சிருட்டியும் படைப்பும்)

வேறு

1. உலகிடை ஊழிதான் உதித்த பின்னரே
இலகிடும் பிரமனும் வேதம் ஓதியே
பலப்பல உயிரினம் பாரில் தோன்றவே
உலைவிலாப் படைப்பினை உஞற்ற லாயினான்.

2. ஆயிரம் பகலுடன் இரவும் சென்றபின்
பாயிர மாகியே பலவும் நீத்தபின்
தோயுறும் உலகுடன் உமது தோற்றத்தில்
மேயதோர் நிலைமையே நிமித்ய பிரளயமாம்.

3. மறுமுறை மாந்தரின் தன்மை மானவே
பிரமனும் படைத்திடும் தொழிலை மேவினான்
பிரமனின் முன்னுள படைப் பின் பெற்றியே
உறங்கியே விழித்திடும் உத்தி யாகுமே.

4. அயனவன் தன்னுடை ஐம்ப தாண்டிலே
பயனுறப் பாதியைக் கழித்துப் பார்த்தனை
அயனவன் பகலிலும் இரவு நேரத்தும்
வியனுற நிகழ்ந்தவை விளங்கக் கூறுவேன்.

5. பகலினது எல்லைதான் கழிந்து போனதும்
தகவுறு பிரமனும் தானு றங்கிட
இகலிலா உலகெலாம் உம்வ யிற்றிலே
புகலிட மாகியே உலகம் மூழ்குமே

6. உலகுதான் நீரின் கண் மூழ்க உத்தம
இலகுறு சச்சிதா னந்த மூர்த்தியாய்
மலமறு யோகமாம் தூக்க முற்றுநீ
இலகிடு சேடனாம் பள்ளி சேர்ந்தனை.

7. ஊழியின் முடிவிலே உனை யெழுப்பிட
ஆழமாம் காலமாம் சத்தி தன்னையே
கேழ்கிளர் அண்ணலே ஏவிப்பின்னரே
ஆழமாய் உறங்கிட அனுகினீரரோ.

8. ஆயிரச் சதுர்யுக உறக்கம் தீர்ந்தபின்
பயிர மாகியே காலச் சத்திதான்
மேயதோர் விழிப்பொடும் உமை யெழுப்பியே
தூயதோர் வழிதனைத் துணிய லாயதே.

9. துயிலெழுந் துலகெலாம் நீரில் மூழ்கியே
துயருறு நிலைமையைத் துணிந்து நோக்கியே
மயர்வறு மனமுடன் மற்றும் வையகம்
துயரற உன்னுடை துணையை நல்கினை.

10. உம்முடை கொப்பூழ்க் குழியி லிருந்துமே
உம்மிடம் லயித்திடும் பொருள் பலவற்றின்
செம்மைசேர் சூக்கும மொட்டு தோன்றியே
மும்மையும் அருள் மறைமலரும் தோன்றுமே.

11. தாமரை மொக்குதான் உமதுமேனியின்
தோமறு நீருடை பரப்பின் மேலதாய்
காமுறு திசையெலாம் ஒளிப ரப்பியே
நாமமார் இருளதை நலியச் செய்யுமால்.

12. மலர்ந்த நல் இதழ்கள் சேர் மறை மலர்க் கண்ணே
இலங்கிடு சத்திசேர் இதழ்கள் நாப்பணே
உலகிடை உயிர்க்குலம் ஆக்கும் பரமனும்
பலகலை ஆக்கிடப் பாங்கில் தோன்றினான்.

# ஒன்பதாவது தசகம்—சிருஷ்டி வருணனை
# (படைப்பின் பெருமை)

1. பிரமனும் உம்முடை உந்தி தோன்றிய
திரமுறு தாமரை தோன்றும் தன்மையை
உரமுடன் நாற்றிசை திரும்பி நோக்குங்கால்
பெருமைசேர் நான்முகம் எண்கை தோன்றின.

2. கடலிடை தாமரை தன்னைக் கண்டதும்
திட்முற அதனையே யாவர் தோற்றினார்
கெடலறும் அவர் நிலையாதென் றோர்தலும்
கடலிடை தாமரைத் தோற்றம் ஆய்ந்தனர்.

3. புந்தியில் புங்கவன் பிரம தேவனும்
வந்தவா றெதுவெனத் தாமரைத் தண்டிடை
தொந்தமார் வழியிடைசென்ற காலையே
உந்தம துருவினைக் காண லில்லையே

4. தாமரைத் தண்டிடை தோன்றும் துளைகளில்
ஏமமார் ஆண்டுகள் நூற்றின் மேலதாய்
சேமமாய்த் தேடியும் ஒன்றும் தேர்ந்திலன்
தாமரை மலரிடை தனித்து நின்றனிர்.

5. தாமரை மலரிடை தவமிருந்ததால்
சேமமார் உளமுடன் உமது சேவையை
ஆமுறை சேடனின் அமளி மீமிசை
காமுறும் அகக் கண்ணால் களித்தல் மேயினார்

வேறு

6. முடியுடன் கிரீடமும் வளைமுத்து மாலையும்
முழுக்கவே அழகு பெற்றே
எடுப்புறும் அரதனம் பதித்திடும் மேகலை
எழில்மிகும் பீதாம்பரம்
முழுவதும் காயாவின் நிறமுறப்பெற்றதும்
மூழ்ஒளிக் கவுத்துப முமே
அழகுடன் பிரமனைதான் காணுதற் கெளிதாகும்
அவ்வழகை சிந்தை செய்வேன்.

**வேறு**

7. உபநிடதப் பொருள்தனக்கே விளங்காத உத்தமனே
என்றனுக்குன் வடிவுகாட்டி
கபடமிலா மனமாக்கி உலகெல்லாம் படைக்கின்ற
வழியருளிக் கடையனேற்கு
சுபமிகுந்த புந்தியினைத் தகுந்தருள வணங்குகிறேன்
தூயவனே காக்கவென்று
கபடமிலாப் பிரமனவன் துதி பாடும் உமதுருவைக்
கடையேற்கும் காட்டவேண்டும்.

8. அயனிடத்தில் குறையேது மில்லாமல் மூவுலகும்
படைத்தளிக்கும்
ஆற்றல் பெற்றே
வியனுறுமென் கருணைபெறு கென்றருளி தவந்தன்னை
மேவி நின்றே
அயராமல் அனைத்தையுமே ஆக்குகின்ற ஆற்றலினை
அடைவாயென்றே
அயன் மனதில் மகிழ்வதனை அடைவித்தாய்
குருவாயூர் அண்ணல் நீயே.

9. தேவருடை ஆண்டுகளில் நூறாகத் தவம் செய்தே
அயனு மாங்கே
மேவிநின்ற தவவலிமை மனவலிமை அடைந்துலக
மூழ்குமந்த நேரந்தன்னில்
தாவவரு நீர்தன்னில் தாமரைதான் அலைகையிலே
உமதாற்றல் தன்னாலங்கே
ஓவலின்றிக் காற்றினையும் நீரினையும் உட்கொண்டே
வாழ்ந்தாரங்கே.

10. உம்முடைய கருணையினால் அயனாங்கே
தாமரையின் துணையைக் கொண்டு
செம்மைமிகு மூவுலகும் படைத்தனிர் காண்
உயிர்க்குலங்கள் தம்மை யாக்கி
வெம்மை மிகு பிறவியிலே வேதனைகள்
படுமென்னை விளங்கச் செய்தே
மும்மையுமே பெறச் செய்வாய் குருவாயூர் கோயில்கொளும்
முதல்வா நீயே.

# பத்தாவது தசகம் — சிருஷ்டிபேதம் — படைப்பு வேற்றுமைகள்

வேறு

1. உன்னுடை சக்தியால் அயனும் ஆங்கனே
நன்னர் சேர்உலகுயிர்க் குலங்கள் ஆக்கியே
இன்னிலை பறவைகள் மரங்கள் யாவையும்
சென்னிலை யுறும்பல செயல் செய்தனரோ.

2. மதியது மயக்கமும் அகந்தை ஆசையும்
கதுவுறு கோபமும் பயமுமாகிய
விதமுறு மைந்தையும் உலகில் வித்தியே
பதமலர் நினைத்தனர் பாத கத்தினால்.

3. நால்வராம் முனிவரைத் தோற்றுவித்தனர்
நால்வரும் அவர்நவில் நல்லவற்றையே
ஏலவே இல்லையாய் இழிவு செய்தனர்
சாலவும் பிரமனைத் தாழ்த்த லாயினர்

4. அத்தகை சினத்தினை அயன் அடக்கியே
நத்தியே பரமனும் நின்ற காலையே
சித்திசேர் புருவத்து நடுவில் மிருடரும்
உத்தம உருத்திரர் என்னத் தோன்றினர்.

5. பதினொரு உருத்திரர் என்னப் பட்டவர்
பதிதனக் குதித்தனர் பத்தினிப் பெண்கள்
பதினொரு ருத்திரர் பாரின் படைப்பினை
இதமுடன் செய்திட ஏவினா ரரோ.

6. உருத்திரர் கணங்களைப் படைத்த காலையே
வருத்தமார் பிரமனும் உம்மை வேண்டியே
உருத்திரர் படைப்பினை விடுக வென்றுமை
ஒருத்தமாய் வேண்டியே வழிபட் டாரரோ.

7. படைப்பினில் விருப்ப மார்பிரமன் தன்னிடை
திடமுறு மரீசியும் அத்தி அங்கிரஸ்
கெடலறுக்ரது புலர் புலத்தியர் ப்ருகு
அடலுறு வசிட்டரும் தக்கர் நாரதர்
உடனுடன் தோன்றியே உலகைக் காத்தனர்.

8. தருமரைப் படைத்தபின் வாணி தன்னையே
பெருமையாய்ப் படைத்துபின் காதல் கொண்டனன்
திருவுறும் உம்முடை படைப்பில் தோன்றிய
உருவுடை சனகரும் தட்சர் தாமுமே
தெரிவுறச் செய்ததால் தெளிவு பெற்றனர்.

9. நான்முகன் நால்வகை வேதம் தன்னையே
தானொரு தேவனாய்த் தோன்றிச் செய்துமே
வான்வெளி யடைந்தனன் படைப்பை முற்றியே
தேனெனும் உம்முடை பதம டைந்தனன்.

10. மக்களின் இனமது வளர வேண்டியே
தக்கதாம் தமதுடல் இரண்டு கூறதாய்
புக்கதாம் மனுசத ரூபை யாக்கியே
இக்கதி உயிர்க்கருள் இறைவ போற்றியே.

## பதினோராவது தசகம்—சனகாதியர் வைகுண்ட ப்ரவேசம்

1. படைப்புதான் முறையுறப் படியுங் காலையில்
இடைப்படச் சனகமா முனிவர் போன்றவர்
புடைப்புற உன்னையே காண வேண்டியே
அடைப்பிலா வைகுந்த நகர டைந்தனர்.

2. கோட்டையின் வாயில்கள் தமைக் கடந்ததும்
சேட்டமார் நைரேசல் நந்த னத்துடன்
தேட்டமார் குணங்களும் மாளி கைகளும்
நாட்டமாம் உமதிருப் பிடத்தை நாடினர்.

3. உம்முடை விருப்புடன் உமது மாளிகை
செப்மையா யடைந்திட முயலும் வேளையில்
மும்மையின் வினைப்பயன் ஜயனும் விஜயனும்
உம்மையே யடையொணா திருந்து பொய்த்தனர்.

4. நாரணன் பதிதனக் கெதிரு நீரதாய்
நீரிதைப் புரிந்ததாய் அரக்க ராகுவீர்
சோர்வுறு நிலைதனை யுறுக வென்றலும்
நாரணனன் தனை நணும் நாட்டம் வேண்டினர்.

5. இத்தகு நிலைமையை யறிந்து நீவிரும்
சித்திசேர் திருமகள் துணையி ருக்கவே
முத்தியை வழங்கிடும் கருடன் ஏறியே
இத்தரை போற்றிடும் வடிவு பெற்றனர்.

6. முனிக்கணம் வணங்கிட வரத்தை நல்கியே
இனிக்கதி யிலையெனும் அசுரர் தம்மையே
புனிதமார் தவமதைப் புகழச் செய்துமேல்
எனதிடம் எய்துக என்று ரைத்தனை.

7. உம்முடைய பணிபுரி உத்தமர்கள் தாம்
செம்மைசேர் திதிவயிற் றசுரராகியே
எம்மையும் சந்தியில் இயற்றும் தீமையால்
வெம்மைசேர் இயமனிற் கொடுமை யாக்கினார்.

8. இரணியன் என்றொரு பெயரை யெய்தினான்
அரணிலாக் கசிபெனத் தம்பி தோன்றினான்
முரணுற இருவரும் அறிவிழந்து போய்
அரணற உலகினை அழித்தலாயினர்.

9. பொன்கணன் போர்புரி வோர்களின் மையால்
உன்னுடை பத்தினி உலக மாதினை
வன்மையாய்க் கடலிடை வலித்துச் சென்றனன்
தன்னுடை வலிமையைத் தரித்தல் மேவினான்.

10. கருணையே வடிவுடை கடவுள் நீயன்றோ
வருணனால் அவனுடை வலிமைக் கேற்றவன்
ஒருவன் நீஎன உணர்ந்துலவ லாயினான்
வருபவர்க்கருள் செயும் வள்ளல் நீயன்றோ.

## பன்னிரண்டாவது தசகம்—வராஹவதாரம்

1. உலகெலாம் நீரிடை மூழ்கி மாழ்கையில்
அலகிலா மனுமுதல் தேவர் யாவரும்
இலகுறும் சத்திய உலகந் தன்னையே
புலத்திடை நினைத்தனர் புகுதல் மேயினர்.

2. மனுவெனும் மானவன் உலகை யாக்கிடும்
இனிப்புறு செயலை நான் தொடங்கும் வேளையாய்
பனிப்புற உலகுதான் கடலில் மூழ்கிடத்
துனிப்புடன் அலகிறேன் என்று சாம்பினான்.

3. முன்னொரு ஊழியில் நீரைப் பருகினேன்
இன்றுல கதுகடல் இடையில் மூழ்கிற்றே
என்செய் வேன்என்றயன் ஏங்குங்காலையில்
அன்னவன் நாசியில் வெள்ளைப் பன்றியாய்
சென்னியை யுற்றிடத் தோன்றலாயினர்.
(வெள்ளைப் பன்றியாய்த் தோன்றியமையாய் ஸ்வேதவராக கல்பம் என்று பெயர் வந்தது)

4. கட்டை விரலள வாகத் தோன்றினீர்
நெட்டையாய் வானள வுயர்ந்த நேர்மையால்
நிட்டைசேர் பிரமனும் புதல்வர் யாவரும்
எட்டரும் நின்னருட் கேங்கி னாரரோ!

5. என்னுடைய நாசியில் தோன்றும் இவ்வுரு
வன்னமார் விண்டுவின் உருவமாகுமோ
என்றயன் எண்ணியே ஏங்குங்காலையில்
நின்றனை உலகெலாம் நினதுருக் கொடே.

6. ஒலியினால் உலகெலாம் உனைத்து தித்திடக்
கலிகெழும் உனதுருக் கண்ட மாத்திரை
நலிவெலாம் நீங்கியே நானிலத் துளோர்
பொலிவுடன் போற்றிட உயர்ந்து பொங்கினாய்

7. புகைவண்ண மயிர்க்குலம் பொங்கித் தோன்றவும்
வகையுறும் வாலுடன் கீழில் நோக்கிய
தகைபெறு நாசியும் மேகமண்டலம்
புகையுறும் கண்ணுடன் கடலில் சென்றனர்.

8. கடலிடை உயிர்க்குலம் கலங்கி யோடவும்
கடலது கொந்தளித் தார்ப்ப ரிக்கவும்
கடலிடை மூழ்கியே காதற் பாவையை
அடலுடன் தேடிடல் அதிசயங் கொளோ.

9. கொடியவன் கடலிடை யொளித்த பூமியை
அடலுடன் அரக்கர்கள் எதிர்த்த வேளையில்
திடமுடன் அழித்துமேல் வந்ததீயரை
உடனெழுத் துலகினை மீட்க லாயினீர்.

10. பன்றியின் உருவமும் பார்விளை யாட்டதாம்
ஒன்றிய பூமியை வெளிக்கொ ணர்ந்தனை
நன்றெனப் போற்றுவோர் நலிவ கற்றியே
இன்றுணை யாயருள் என்றும் செய்கவே

## பதின்மூன்றாவது தசகம்—ஹிரண்யாட்ச வதம்

(வேறு)

1. முழந்தாளின் அளவான நீரின்கண்உமைத் தேடிஇரண்யாட்சன்
உலவும் வேளை
இழந்த அருள் அரக்கனிடம் உமைப்பற்றி நாரதரும்
இழிவாய்க் கூறி
குழந்தையென உம்பெருமை யறியாத கொடியவனைப்
போற்றி செய்தே
தொழுந்தகையாம் உன்னிடத்தே பகையுணர்வு தோன்றும்
வகை செய்தார் மன்னோ.

2. மாயங்கள் பலபலவும் செய்கின்ற மாயவனும் நின்றனுக்கே
உரிமையாகி
மேயதொரு உலகினையே கவர்ந்து செலல் மேன்மைகொலோ
என்று கூற
ஆய அவன் எங்குள்ளான் என அலறிப் பூமியுடன்
வெளியில் வந்த
தூயவனாம் உமைத்தேடி வெளிவந்து தன்னுருவைத்
தோற்றி நின்றான்.

3. காட்டிடையே வாழ்கின்ற விலங்கென்று கடுஞ்சொற்கள்
பற்பலவும் சாற்றிக்கொண்டு
மேட்டிமையாய் சுற்றிவரும் அன்னவனை மேன்மையுறு
பொருளெனவே மதித்தலின்றி
கோட்டிடையே நடுங்குகின்ற பூதேவி தனைக் கடலில்
நிலைத்திடவே குலவச்செய்தே
நாட்டியே மிகப் பெரிய போர்புரியும் நோக்குடனே
போர்தன்னை நாடல் ஆனாய்.

4. இரண்யாட்சன் வானத்தே இடிஇடித்த வகையெனவே
கதை யேந்தி வன் போரைச் செய்ய
அரணெனவே நீயுந்தான் கதையேந்திப் போர்செயவும்
அயனு மாங்கே
இரண்யாட்சன் தனை இரவு வருமுன்னே வீழ்த்திடுக
என்றானாங்கே
முரணின்றித் துதித்திடுவோர் துயர் தீர்க்கும் முன்னவனே குருவாயூர்
முதல்வா போற்றி.

5. கதையுடனே அசுரனுடன் மோதுங்கால் கதைதவறித்
தரையிடையே வீழ்ந்தகாலை
அதைச் சற்றும் பொருட்டாக எண்ணாமல் ஆண்மையுறு
சுதர்சனமாம் சக்கரத்தைக் கையில் ஏந்தி
சிதையுறவே அசுரர்குலம் சீறிநின்றாய்ச் சித்தமெலாம்
உன்பால்வைத் தேன்
புதைவுற்ற வாழ்வதனைப் புதுக்கிடுவோய் குருவாயூர்
பூர்ணமூர்த்தி.

6. சூலமெனும் படைதன்னைக் கொடியவனும் ஏவிவிட
உன்பாலுள்ள
ஞாலமெலாம் வணங்க வரு சக்கரமாம் படைதன்னை
ஏவிவிட்டாய்
ஏலாமல் அரக்கனவன் கைமுட்டி கொடுதாக்க
இயைந்த காலை
ஞாலமெலாம் மயங்கும் வகை மாயைதனை உன்னிடத்தில்
ஏவினானே.

7. சக்கரமாம் படைதொடுத்தே சடுதியினில் தோன்றிவந்த
தீப்பொறியால் அசுரன் தன்னை
திக்கு முக்காய்ச் செய்தசுரன் திறமறித்தே திருவிளையாட்
டயர்ந்த வேளை
எக்கணமும் இடரற்றே மனக்கண்தான் குருடாகி
முட்டியுடன் உம்மைத் தாக்க
அக்கணமே கைநுனியால் காதடியில் சுண்டிவிட்டே
வதைக்கலானீர்.

8. பருத்தஉடல் படைத்திட்ட பாதகனும் உம்முடைய
மலர்க்கையால் அடிபட்டே பதைபதைத்து
வருத்தமுடன் வாய்வழியே இரத்தமது வழிந்தோட
விழுந்த காலை
அருத்தியுடன் முனிவருடன் தேவரெலாம் அளவற்ற
மகிழ்ச்சியோடு
திருத்தமுறக் குருவாயூர் பெருமானே உனைப் போற்றித்
திகைத்து நின்றார்.

9. உன்றனுடை தோலிடையே சந்தங்கள் உரோமத்தில்
தர்ப்பைகள் கண்ணில் நெய்தான்
குன்றென்னும் கால்களிலே ரித்விக்கு முகத்தினிலே
ஹோம பாத்ரம்
ஒன்று முன்றன் வயிற்றினிலே ஹோமபாத்ரம் நாவினிலே
க்ரகமென்ற பாத்திரங்கள்
உன்றனது வீரியமே சோமரசம் உன்கழுத்தில்
உடசந்த இஷ்டியாகும்.

10. மதுவென்ற அசுரனுக்குப் பகையான குருவாயூர்
மருவும் தேவே!
எதுவரினும் இடரில்லை எனப் போற்றும் முனிவர்பால்
இன்பம் தந்தே
பொதுவான போற்றரிய பேருருவாய் மாசற்ற
இதமான கீர்த்திமேனி
நொதுமலதாம் வைகுந்தம் தனைமேவி நிலைத்தருளும்
புங்கவனே
உன்பாதம் போற்றி போற்றி!

## பதினான்காவது தசகம் - கபிலாவதாரம்

வேறு

1. பிரமனின் மகனாய்த் தோன்றி பேதமில் சுரம்புதானும்
அரனென உனது பாதம் பற்றி யுன் புகழைப் பாடி
பிரமன் வந்த ரத்தைப் பிழையின்றி கழித்து வந்தான்
திரமிகு மன்பர் காக்கும் தெய்வமே குருவா யூரா.

2. பிரமனின் நிழலில் தோன்றிக் கர்த்தமர் பிரமன்சொல்ல
வருமுல கனைத்தும் ஆக்கி வாமன உம்மைப் போற்றிப்
பெருமையாய் வாழ்ந்தான் பல்லாயிர மாகு மாண்டுகள்தாம்
கருவினில் கருவாய் நிற்கும் கர்த்தனே குருவாயூரா.

3. கருடன் மேல் எழுந்தி ருந்து கார்மேகம் தன்னைப் போல்
திருமிகும் உருவந் தன்னைத் தாமரைக் கைகளோடு
உருவளர் கர்த்தமர்க்கே காட்டினை உலகமுய்ய
பெருமநின் பெருமை தன்னை பேதையேன் பேச லொன்றோ.

4. மெய்சிலிர்த் துமைத்துதித்த அன்னவர் மனைவி யாக
உய்வருள் மனும கள்தான் உதவிடச் செய்து மேலும்
தெய்விகத் தன்மையோடும் ஒன்பது பெண்கள் தோன்ற
உய்வருள் கபிலர் தாமும் உதித்திட வரம ளித்தீர்.

5. சுயம்புவாம் மனுவும் உம்மால் நாரதர் சென்ற டைந்தே
உயர்வுறும் உபதேசத்தை உற்றனர் மனைவி யான
அயர்விலா சதரூ பைதான் மகளான தேவஹூதி
மயர்வின்றி வரவை எண்ண கர்த்தமர் தமைய டைந்தார்.

6. கர்த்தமர் மனுவி னாலே கன்னியாம் தேவஹூதி
உத்தமி தன்னைப் பெற்றே உம்மையே வணங்கி வாழ்த்தி
உத்தமப்பூசை செய்தே உலவிட மனமுவந்தே
எத்துணைப் பேதமின்றி இன்புடன் இருந்தார் மன்னோ.

7. உமையவள் வணங்கி நின்ற உத்தமத் தொண்டினாலே
இமையவர் போற்றும் வண்ணம் இன்பமார் மனைவி யோடும்
அமைவுறு தேவ மாதர் தோழிக ளாக நிற்க
இமையவர் உலகந் தன்னில் எங்குமே சஞ்சரித்தான்.

8. ஒன்பதாய்ப் பெண்கள் தம்மைப் பெற்றபின் உம்மை நாடித்
துன்பமே நீங்கி இன்ப வாழ்வினை யடைய எண்ணி
அன்புடன் இருந்த போதும் மனைவியின் விருப்பி னுக்காய்
உன்னுடைய வரவை நோக்கி நூறாண்டு காத்திருந்தான்.

9. கணவரால் உபதே சிக்கப் பட்டதோர் கார ணத்தால்
இணைப்புறும் உமது தோற்றம் தன்னையே உன்னி உன்னி
கணமேனும் ஓய்விலாமல் காத்திருந் துன்னைக் காண
குணமுறு தேவஹூதி காலத்தை எண்ணினாளே

10. மகிழ்மிகு கர்த்த மர்தாம் வனம்சென்ற பின்றை தூய
அகமகிழ் மதத்தின் காரம் முழுவதும் தாய் தனக்கு
மிகமிக உபதே சித்த குருவாயூர்கோவே என்னை
மிகமிக வருத்து கின்ற நோயின்றிக் காப்பாய் இன்றே.

# பதினைந்தாவது தசகம் — கபில கீதை

### வேறு

1. இவ்வுலகில் முக்குணத்தில் பற்றுக் கொண்ட மாந்தருடைப்
புந்தியுறும் பந்தத்தைத்தோற்றிற் றன்றே
வவ்வலுறு பற்றற்றே வீட்டினையே அடையுமுறை தனைகண்டு
காட்டிற்றன்றே
இவ்வுலகில் உத்தமமாம் வழிதேடியடைகின்ற பத்தியொன்றே
சாதனத்தை
இயற்ற வேண்டும்.
அவ்வகையை தேவஹூதிக் குபதேசம் செய்தீர்கள் அன்றொரு
நாளி
அடைவி னோடு.

2. மூலமாம் ப்ரகிர்தி மகத்வம் அகங்காரம் தன்மாத்திரை
பூதங்களோடு
ஏலுமனம் இந்திரியம் எனக்கூறும் இருபத்து நான்காகும்
தத்துவங்கள்
சாலுமொரு புருடனெனும் தத்துவந்தான் எனப்பிரித்து
ஜீவனவன் பிரகிருதி பந்தந்தன்னில்
மூலமுறு மந்தத்தில் விடுப்பப்படுவான் எனதேவஹூதிக்
குபதேசித்தீர்.

3. உலகத்தில் உதித்துள்ள உயிர்க் கென்றும் களங்கமில்லை
சிலவேளை உலகத்தின் வாதனையால் களங்கம் தோன்றின்
இலகுமெனைத் துதிப்பதனால் களங்கம் போய் இன்பம் சேரும்
மலமகலுமென தேவ ஹூதிக்கு மகிழ்வுடனே அருளினாயால்

4 மாசற்றமனத்துடனே தினந்தினமும் மனஒருமைப்பாடு
கொண்டே
ஆசனங்கள் தமையியற்றிக் கருடன்மேல் காட்சிதரும் அண்ண
லென்றே
தேசுபெறு மென்னுருவைத் தியானித்துப் பணிவதொன்றே
பணியாக்கொள்வோன்
பேசரிய தேவஹூதி என்றவனும் உரைத்தான் மன்னோ.

5. என்புகழைக் கேட்பதனால் என்பெயரைப் பலமுறையும் ஒத்திக் கொண்டு
நன்னயமாம் கங்கையெனப் பத்தியொடும் போற்றி செய்தால்
புன்மையுறும் இல்வாழ்க்கைத் தொடர்பதுதான் நீங்கப் பெற்றே
என்னுடைய பேறடைவாய் என்றனைநீ தேவ ஹூதிக்கன்றே.

6. துன்பங்கள் பல செய்தே பொருள் தேடித் துணையை நாடி
இன்பமெனப் பிள்ளைகளைப் பெற்றிந்த உலகந்தன்னில்
என்னிடத்தே பத்தியிலான் நரகத்தின் வாயிலதை நாடுகின்றான்
நன்னலமார் தேவஹூதி இதையறிக என்றாய் மன்னோ.

7. பெண்வயிற்றில் இருந்திட்டு உலகதனில் பிறந்தபின்பு
மண்வயிற்றில் மதிமயங்கி உண்மைநிலை மறந்து மாந்தர்
புண்ணெனவே வதைகின்ற புழுவொத்த புன்மை நிலை புகலப் போமோ
உண்மையுணர் தேவஹூதி யுணர்காவென உரைத்தாயன்றோ

8. கணங்களையே வழிபடுவோன் தெற்கேகிப் புண்ணியந்தான்
இணக்கமுற முடிந்தபின்னர் உலகத்தில் மறுபடியும் பிறக்கின்றானால்
எணங்களையே நீக்கி நிதம் எனைப் பணிவோன் வீட்டுலகை அடைகின்றானால்
குணங்குறிகள் கடந்துள்ள தேவஹூதி இதை உணரென் றுரைத்திட்டாயால்

9. தேவஹூதிக் கருள் செய்ய அன்னவனும் முத்திநெறி சேர்ந்தானன்றோ
பாவமுறு முயிர்க்குலங்கள் பரமபதம் தனையடையப் பரிவு காட்டி
ஓவலின்றி உனைப் பணியும் தொண்டருளக் கோயிலினகன் உலவின்றே
தேவருக்குத் தேவனென குருவாயூர் அமர்ந்தருளும் தேவ தேவே.

10. உன்னிடத்தில் பத்திகொளும் அது ஒன்றே வினைகள் ஓட்டும்
வன்மனத்தை மென்மனமாய் வாட்டமிலா நன் மனமாய் மாற்றுவிக்கும்
என்மனத்தில் குடிகொண்ட குருவாயூர்க் கொற்றவனே உலகமெல்லாம்
புன்மையற நன்னெறியைக் காட்டென்றே போற்றுகின்றேன்.

## பதினாறாவது தசகம் — தட்சயாகம்

1. பிரமனுடை மைந்தனெனும் தட்சப்பிரசாபதி தானும் சுயம்பு
மனுமகளான பிரசுதி தன்னை
விருப்பமுறு மனைவியெனப் பெற்றவனாய்ப் பதினாறு
பெண்கள்தம்மைப் பெற்றுக்கொண்டே
அருத்தியுறும் தருமமெனும் தேவருக்கே பதின்மூன்று
பெண்களையும் மணந்துவந்து
விருப்பமுடன் ஸ்வாதா வாம்மகள் தங்கை பிதிருக்கும்
ஸ்வாகாவை
அங்கிக்கும் சதியவளை கிரீசருக்கும் கொடுத்தானன்றோ.

2. மூர்த்தியெனும் பெண்ணவளும் நாராணனாம் மகவீன்று
நரனென்ற ஒருவரையும் பெற்றெடுத்தாள்
ஆர்த்தனராம் முனிவரர்கள் உம்முடைய நரநாராயண
அவதார மகிழ்ச்சிகண்டே
மூர்த்தி மிகு தேவகணம் முரசுகளை முழங்கினவாய்ப்
மழையைப் பொழிந்து போற்றும்
சேர்த்தவர்க்குத் துணையான குருவாயூர் வித்தகனே
விண்ணவனே விமலா போற்றி.

3. நரனென்னும் நாரணனாம் பெயர் பெற்றும் நானிலத்தே
நவிலரிய
செயல்கள் செய்தே
பரவரிய பெருமையுடன் பாரினிலே ஆயிரமாம் ஆண்டுகள்தாம்
தவத்தைச் செய்தே
விரவுமொரு வெற்றிபெறும் ஆயிரமாம் கவசங்கள் கொண்
டுள்ள
அரக்கன் தன்னை
காவொலியைத் தேவரெலாம் செய்திடவே கட்டோடும்
அழித்திட்டீர்
கவலை நீங்க.

4. உடன்பிறப்பின் துணையுடனே தவமியற்றிப் பத்திரிகா சிரமம் தன்னில் உலவிடவும்
புரந்தரன்தான் பொறாமை யோடு
கட்டனாற்றும் உமதாற்றல் தனைக்கலைபுக்கும் நோக்கத்தில் கடமைதனை
மறந்தே யும்பால்
அடலெல்லாம் அகன்றவனாம் மன்மதனை தேவுலகில் ஆடுகின்ற
அணங்குகளின் துணையுடனே அனுப்பினானால்
உடற்பற்றும் உளப்பற்றும் நீக்குகின்ற குருவாயூர் உத்தமனே உமதுபதம்
போற்றி போற்றி.

5. வசந்தமுடன் மலயமெனும் உறவினரைத் துணைகொண்ட மாறனவன்
வானின் கண்ணே
அசைந்தாடும் மகளிருடை அழகுடனே கடைக்கண்ணின் பார்வைஎனும்
அம்பு தன்னால்
அசைவற்ற உமையசைக்க முயன்றவனாய் இயலாமல் பயங் கொண்டே
அவதி கொள்ள
இசைவுற்ற உம்முடைய புன்னகையால் மயங்கியவன் சிலவற்றை
மொழியப் பெற்றான்.

6. மன்மதனே வசந்தனுடன் தேவுலக வனிதையரே நீங்களெலாம்
பயங்கொள்ளாதீர்
என்னுடைய மனந்தனிலே உதித்தவரைப் பாருங்கள் என்றுரைத்துப்
பணிவிடைகள் செய்து நின்றும்
பொன்னுடல் சேர் கட்டழகுப் பாவைகளை அன்னவர்க்குக் காட்டி நின்றீர்
மன்மதனும் வணங்கிநின்று
என்னவனே குருவாயூர் எல்லையறு பரம்பொருளே என வுரைத்தே
ஏத்தி நின்றான்.

7. உமையயக்க வந்தவனாம் மன்மதனும் உம்முடைய பணிப்பெண்கள்
உயர்வு கண்டே
இமையேனும் தாழ்க்காமல் உம்முடைய பணிப்பெண்கள் யாவரையும் தேவருலகதனில் சேர்த்து
அமைவுற்ற ஊர்வசியைத் தேவசபை தனில்சேர்த்தே அமைதி காத்
தமைதி கண்டார்
சுமையானதுன்பத்தைப் போக்கவெனக் குருவாயூர் நின்றவனே
துணையேபோற்றி.

8. உம்படைப்பாம் ஊர்வசியின் அழகினையே கண்டவனாம் இந்திரனும் உவகைமிகக்
கலங்கி நின்றான்
செம்மைமிகு குருவாயூர்ச் செல்வாஇவ் வவதாரச்சிறப்பில் உன்
சிறுமை நீக்கி
மும்மையுமே அருள்கின்ற கண்ணனென அவதரித்த முதன்மையுறு
வடிவந்தன்னைச்
செம்மையுறும் வடிவமெனச் செகமெல்லாம் புகழ்கின்ற
செம்மை கண்டேன்

9. தக்கனவன் பரமனுடைச் செல்வாக்கால் ரசோகுணந்தான்
மிகவும் கொண்டே
மிக்கதொரு ஞானக்கண் ணில்லாது உம்மிடத்தே பத்திதனை
மறந்தானாகி
எக்கணமும் உமைமதியா திருந்திட்டே பரமனையே மறந்தவனாய்
வெறுத்திருந்தான்
அக்கணமே தன்மகளாம் சதிதேவை தனைமதித்தல் செய்யானாய்
அவமதித்தான்

10. தக்கனுடைத் தருக்கடக்கி யாகத்தைய ழித்தவுடன் பரமனவன்
தயவு காட்டித்
தக்கனையே உயிர்பிழைக்கத் தயைகாட்டி அன்னவன்தான்
யாகத்தை முடிக்கச் செய்தான்
மிக்கநிலை சதிதேவி உயிர்விட்டாள்; அனைத்திற்கும் சாந்திதனை
அள்ளி வீசும்
தக்கவனே குருவாயூர் தனிமுதலே தமியேனைக்காத்தருளத்
தருண மிதே.

## பதினேழாவது தசகம் — துருவ சரித்

1. சுயம்புவெனும் மனுமைந்தன் உத்தானபாதனவன் சுருகி
யெனும்
மனைவிதன்பால்
வியப்புறவே வேட்கைதனைக் கொண்டவனாய்ச் சுநீதி
யென்னும் மூத்தமனை
தன்னை நீத்தான்
நயமிக்க உமது பதம் ஒன்றேதன் துணையென்ற எண்ணமுடன்
ஞானங்கொண்டே
நியமமுடன் நினைப்போற்றி நிதநிதமும் வழிபாட்டை
நிகழ்த்தினாளே.

2. தந்தையது மடியினிலே சுருகியுடைமைந்தனவன் உத்தமன்
வீற்றிருந்த
தனைக்கண் ணுற்றே
சிந்தனைதனில் தெளிந்த சுநீதியின்மைந்தன் துருவனுந்தான்
ஏறிடவே
முயன்றகாலை
நிந்தைசேர் சுருசியால் துருவனும் தான்அதட்டியே துரத்தி
விடும்
நிலையைடைந்தான்
சிந்தைதனில் தெளிவிலார் நின்பாத நினைக்கிலார்
பொறாமையையே
விடுதல் உண்டோ?

3. மனைவியின் சொல் மந்திரமாய் மதித்திட்ட
மதியிலான் உத்தானபாதன்
தினையளவும் அன்பில்லான் திருமகன் தன்னையவன்
திரும்பிப் பாரான்
மனம் நொந்த துருவனும் தன் தாய் மடியில்
புலம்பி வீழ்ந்தான்
புனை வுறுநின்பதம் புகலென்றுரைத்தனளாய்
மைந்தனையே தேற்றிநின்றாள்.

4. தாயுரை கேட்டதனையனும் உம்மைத் தன்மனத்தெண்ணியே
வழிபடு முணர்வில்
தோயுறுமான மேற்கொளும் உளத்தில்தொன்மை சேர் நகரினை
விடுத்தவனாகி
சேயுளந்தன்னில் நாரதர் சொன்ன சித்தமார் முத்திசேர்
மந்திர மார்க்கம்
நீயெனும் பெரிய நியதியை நாட்ட மதுவனம் சென்ற
நின்னயே நினைத்திருந்தானால்.

5. கவலையால் வருத்திக் கலங்கியதந்தையை நாரதன்
நேரில் தேற்றி
திவலையும் துன்பம் இல்லையாய்த் துருவன்
திண்மையாய்த் தன்மனந்தன்னை
அவலையே யுண்ட உன்னிடம் செலுத்தி
ஐந்துமா தங்களைக் கடந்தான்
எவளவு புகழ்ந்தும் இணையிலாப் பெருமை
என்னுடையப்பனே போற்றி.

6. துருவனின் தவத்தின் திறமையாய் எல்லாத் திக்குமே
திணறிய வேளை
உருவமர் தேவர் முனிவரர் பிறரும்
உன்றனை வேண்டியே வாழ்த்த
கருவிலே திருவைக் கண்டவனான
துருவனின் முன்னர் நீர்நின்று
உருவினைக் காட்டிக் கருவினில் வளர
உன்னத நிலை தனையளித்தீர்.

7. உன்றனைக் கண்டே அனைத்தையும் மறந்து
உளமெலாம் உன்னையே எண்ணி
நின்றிடு துருவன் நின்னையே நினைக்கும்
நிலைமையை நேரினில் கண்டே
உன்னுடைச் சங்கால் அன்னவன் கன்னம்
உற்றிட்டத் தொட்டனை யன்றோ
என்னுடைப் பிறவி இருவினை நீக்கும்
இறைவனே என்னருள் தேவே.

8. ஞானமிக உதித்தவனாய் மாசற்றே உமைத்துதிக்கும்
துருவனுடை நினைய ஓர்ந்தே
மோனமுறு தருவ இனி முனிவகன்றே உன்நாட்டில்
நீண்ட காலம்
தானமுடன் தருமமதால் மிகப்புகழை நிலைநாட்டித்
தகைமை மிக்க
தானஎன்றன் பேருலகை அடைந்துய்
என உணர்ந்தே வாழ்த்தினீரால்.

9. உன்னுடைய ஆசிபெற்றே துருவனவன் நீமறைந்த
உடனே சென்று
தன்னுடைய தந்தையவன் தவம்செய்ய வனம்நோக்கிச்
சென்றபின்னே
மன்னியதாம் ஆட்சியினை பல்லாண்டு பலர் போற்ற
மகிழ்ந்து செய்தான்
என்னவனே குருவாயூ ஏற்றவனே உன்பணியால்
இன்பம் கொண்டே.

10. உத்தமனை இயக்கர்தாம் கொன்றிடவே துருவன்தான்
உருத்தெழுந்தே
அத்தனைபே ருடன் போரைச் செய்திடலும் சுயம்புமனு
சொன்னதாலே
சித்தமிகத் தெளிவுற்றே போர்தவிர்த்தான் அவ்வேளை
குபேரனவன்
அங்குவந்தே
உத்தமமார் பக்தியுன்பால் உறுகவென அன்னவனும்
வேண்டிநின்றான்.

# பதினெட்டாவது தசகம்—பிருது சரித்திரம்

1. துருவனுடை மரபினிலே தோன்றியவன் புகழ்படைத்த
அங்கமனென்றுரைக்கு மேலோன்.
மரபினையே கெடுப்பவனாய் வேனனெனும் சொடியன்தான்
உதித்தலானான்
திருந்தாத வேனனுடைத்தீயசெயல் அங்கமனின் மனத்தினிலே
வருத்த அண்ணோன்
வரம்பெறவே உனைவாழ்த்தும் உள்ளத்தில்
வனம் நோக்கிச் சென்றான்மாதோ?

2. பாவியாய் இருந்தும் வேனனை மக்கள்
பாரினை ஆண்டிட வேண்டப்
பாவமே தனது செயலெனக் கொண்டு
பற்பல கொடுமைகள் செய்தே
ஓவலில் தனது தீமையால் உன்றன்
உன்னத நிலைதனை மறந்தே
பாவமே வித்திப் பாவமே விளைக்கும்
பயனிலாச் செயல் பலசெய்தான்

3. முனிக்கணம் வந்தே வேனன்பால் நல்ல
மூதுரை பற்பல சாற்ற
இனிவரும் காலம் எதுவென உணரா
எண்ணருங்கொடியவன் ஆங்கே
துனிவுறு செயலால் முனிவரர் தம்மைத்
துன்பத்தில் உழன்றிடச் செய்ய
முனிவரர் சாபத் தீயிடைச் சிக்கி
விளக்கிடை விட்டிலாய்த் தவித்தான்.

4. அன்னவன் இறந்தபின் அவனுடை அன்னை
அவனுடை உடல்தனைக் காத்துப்
பன்னெடுங்காலம் வைத்திருந்திட்ட
பாவியின் உடலிடைத் தொடையை
நன்னிலை சேர்ந்த முனிவர்கள் கடையப்
பாவமும் பறந்திட ஆங்கே
மன்னிய தண்டம் எனத்தகு கையைக்
கடைந்திட அவ்விடை உதித்தீர்.

5. பிருதுவென உலகம் போற்றிய நீயும்
பின்னிடாச் சூதரராம் முனிவர்
அருகினில் நின்றே உன்றனை வாழ்த்த
அழிவுசேர் வேனனின் கொடுமை
பெருமைசேர் உலகில் செல்வமாம் செழிப்பைப்
பேதுறச் செய்ததோர் நிலையை
உருவுறும் உனது வில்லினைஏந்திச்
சமநிலை உறும்வகை செய்தாய்.

6. விரும்பிய தளிக்கும்தேனுவை நிகர்த்த
பூமியைத் தேவரும் மனிதர்கள் தாமும்
மருவியே கன்றென ஊட்டிடச் செய்தே
அவரவர் மனத்திடைத் தோன்றும்
பெருகிய எண்ணம் யாவையோ அவையெலாம்
பெற்றிடும் பெற்றியையளித்தாய்
உருவிலே பெரியாய் கருவிலே உறுவாய்
உன்பதம் பணிந்தனன் போற்றி.

7. மூவராம் மூர்த்தி வடிவினைப் பெற்றோய்
முயன்றனை யாகங்கள் செயவே
தேவரின் தலைவன் நூறெனும் யாகம்
தெளிவுறச் செயுங்காலை
பாவியின் உருவாய்க் குதிரையைத்திருட
பரிந்து வந்துன்னுடை மைந்தன்
மேவரும் போரைச் செய்திட அவனும்
தோற்றனன் மேன்மைகள் இழந்தே.

8. பன்முறை இந்திரன் யாகப் புரவியை
மறைத்திடும் பாணியில் இறங்க
வன்முறை தாங்கா முனிவரர் அவனைத்
தீயிடைக் கொளுத்திட முனைய
இன்னிலை கண்ட பரமனும் தடுக்க
யாகத்தில் இறுதியில் நீவிர்
மன்னிய விண்டு வடிவமாய்க் காட்டி
மகிழ்ச்சியில் மூழ்கிடச் செய்தீர்.



9, அவர்கள் தந்திட்ட பத்தியாம் வரத்தை
அடைந்து நீர் கங்கையின் கரையில்
தவலரும் சத்ர யாகமதாற்றிய
தவசிகள் உணர்ந்திடும் வண்ணம்
புவனமதுணரப் புனிதமார் அறங்கள்
புகன்றிடு வேளையில் தூய
நவமுறு சனகனே முதலாம் முனிவார்
நன்கனம் வந்தனர் அன்றோ.

10. சனகனே முதலாம் முனிவரர் சொன்ன
சாற்றரும் ஞானத்தை யறிந்தே
வனமதை யடைந்தே உம்முடை உருவச்
சித்தியை உள்ளவா றடைந்தீர்
தினையளவேனும் பிசகிலாப் பிருகு
வடிவிடைத் தோன்றிய நீயும்
மனமதில் அமைதி மருவிடா என்றன்
வாட்டமும் மாற்றியே யருள்வாய்.

## பத்தொன்பதாவது தசகம் - தட்சகன் புனர்ஜன்மம்

1. பிருதுவின் மகனின் பேரனாய்த் தோன்றிப்
பிறழ்விலா அறவுணர் வுடனே
மருவிலப் ராசீன பர்கிஸ் என்பவன்
மனைவிபால் உம்முடைய கருணை
பெருகிய நிலையில் பிரதேசகர் என்ற
பிள்ளைகள் பெற்றெடுத்திட்டாள்
பொருவிலாப் புனித குருவாயூர் தன்னில்
கோயிலில் உற்றிடும் பெரும.

2. படைப்பினில் மனதை ஊன்றிய தந்தை
பரிவுறு கட்டளை ஏற்று
இடைவிடா துமையே எண்ணி நின்றேத்தி
எண்ண ருந் தவத்தினைப் புரிய
திடமுடன் அந்தப் பத்தோடு நான்காம்
பிரதேசகர் மேல் கடல் சென்றே
கெடலறுதவம் செய் இடமென எண்ணி
ஏரியைக் கண்டனரங்கே.

3. உம்முடைப் புனிததீர்த்தமாம் அங்கே
உருத்திரர் வந்தனர் அன்றே
செம்மைசேர் அவர்தாம் உம்முடைபத்தர்
தம்மையே கண்டிடும் நிலையில்
மும்முறை மருளும் பிரசேதகர் முன்னே
முகமலர்ந் தெழுதிருந் தருளி
எம்மையு மருளும் உம்முடைப் பெருமை
எடுத்தியம்பினர் காணன்றே.

4. நீரிடை நின்று நின்னுடைப் புகழை
நினைந்துதாம் பன்முறை துதித்தே
போரிடரின்றி நின்னையே வணங்கிப்
பேதமை நீங்கிய நிலையில்
ஓரிடந்தனில் எத்தனை காலம்
இருந்தனர் என்பதை மறந்தார்
சீர்பெறு துருவன்போல் பெருந்தவம் விரைவில்
முடிவுறும் நிலையினில் இல்லை.

வேறு

5. யாகங்கள் பற்பலவும் இனிதியற்றிப்
புனிதநிலை யெய்தலோடும்
சோகமுறும் செயல் செய்த
வேனனுமே புனிதநிலை மேவி நின்றான்
போகமுறும் இவர்தந்தை நாரதர்தான்
இவர் இல்லம் போந்ததாலே
மேகநிற வண்ணா உன் வீட்டு வகை
மேவுகின்ற மேன்மை பெற்றார்.

வேறு

6. கருடனையே ஊர்தியெனக் கொண்டுள்ள கருணைவள்ளல்
சக்கரமுடன் சிரந்தபல படைகளேந்தி
விருப்பமுடன் எண்தோள்கள் எவ்விடத்தும் பரவு ஒளி
கருணைமிகு பிரசேதஸர்முன்
அருத்திதரத் தோன்றி நின்றீர் குருவாயூர்
அண்ணால் நீர் அகிலம் பார்த்து
திருந்திடவே தோன்று மொருதிரு மார்ப
திண்மனத்தைத் திருத்து வீரே.

7. பிரமதேவர் எவ்வரமும் கேட்காமல் கருணையினால்
அன்னவர்க்கு வரங்கள் தந்தீர்
பரவுமொரு நினைவாலே உமைத்துதிக்கு மன்பர்க்கே
வரங்கள் தந்தீர்
நிரந்தரமாய் உமைத்து திக்கும் நீர்மையதே உடல் படைத்
தோர்
உற்ற பேறாம்
உருத்திரமாம் இக்கீதை வேண்டியவர் வேண்டியதை
எய்திட வேதுணையாகட்டும்.

8. வனமகளாம் வனிதையினை மணம் புரிந்தே
பத்து லட்சம் ஆண்டுகள் தாம் வாழ்ந்தின் புற்றார்
சினமிக்க தக்கனவன் மைந்தனெனத் தோன்றட்டுமே
அன்னவனால் எனைவந்தே நீரடைவீர்காண்
தினையேனும் ஐயமிலை எனச் செப்பிச்
செம்மை நெறி பெறவே செய்தீர்
புனத்துழாய் புனைந்துள்ள குருவாயூர் அன்பர்பணி
புங்கவனே போற்றி போற்றி.

9. பூவுலகை அடைந்தவர்கள் அடர்ந்து மறைத் திருந்திட்ட
மரங்கள் தம்மை
ஓவலிலாலக் கொடுமையினால் கோபத்தால் எரிந்திடவே
உருத்த காலை
சேவையுளப் பிரமனவன் தடுத்தவரைச் செய்யாமல்
செய்தார் ஆங்கே
ஆவலுடன் அம்மரங்கள் அளித்திட்ட பெண்களுடன்
அநேகநாள் வாழ்ந்தார் மன்னோ.

10. தக்கனையே பிரசேதர்கள் புத்திரனால் அடைந்தபின்பு
யாகங்கள் யாவும் செய்தே
மிக்க பெருநாரதர்பால் பெற்றிருந்த ஞானத்தால்
பிரமானந்தப் பதவி பெற்றார்
தக்கவனே குருவாயூர்தனிமுதலி தரையெலாம் காத்தளிக்கும்
தகைமை கொண்டோய்
புக்கென்னைக் காப்பதுன்றன் கடமையதாம் பெருமானே
போற்றி போற்றி

# இருபதாவது தசகம் - ரிஷபசரித்ரம்

1. பிரியவிரதம் மைந்தனெனும் ஆசையுறும் ஆக்னீதரன்
விருப்பமுறு மைந்தனவன் பிரீதிக் காய் எண்ணியாங்கே
பெருமைமிகு யாகத்தைச் செய்கையிலே நடுவில் உன்றன்
திருமிக்க உருவத்தைத் தரிசிக்கும் பேறு பெற்றான்.

2. முனிவரந்த யாகத்தில் உமைத்துதித்தே நாபிமகாராசனுக்கு
இனிமையுறப் புத்திரன்தான் உதித்திடவே வேண்டுமென்றே
உனைத்துதிக்க யானேவந் துதிக்கின்றேன் என உரைத்தே அங்கியின்கண்
எனைத்துலகும் வாழ்த்திடவே மறைந்தீர்கள் இறைவன் நீரே.

வேறு

3. நாபியுடை மனைவியெனும் மேருவிடம் நன்மைபெற உலகின் கண்ணே
மேவலரும் உயர்குணங்கள் பெருமையெலாம் மிளிரப்பெற்றே
தாவலிற்றி யனைவருக்கும் மகிழ்ச்சிதனை வளர்ப்பவராய் தகுதியோடு
ஆவலுடன் அவதரித்தே ரிஷபரென்ற பெயருடனே விளங்குகின்றீர்.

வேறு

4. மூவகை உலகையும் தாங்கும் உம்மிடம்
ஆவலாய் ஆட்சியை அளித்த பின்றையே
மேவிய நாபியாம் மேரு தேவியோடு
ஓவவில் தவம் செய்தே உமையடைந்தனன்.

5. இடபராய்த் தோன்றிய உமைக் கண்டிந்திரன்
திடமிலான் பொறாமையால் புவியிலெங்கணும்
கெடலறு மழைவளம் கெடுக்கலாயினான்
உடனுடன் மழைமிகும் உத்தி தந்தனீர்.

6. மனத்திடை மாசிலா மாண்பு மேவினும்
உனக்குயர்வற்றவன் இந்திரன் தரும்
மனத்தினுக்குகந்திடும் ஜயந்தி தன்சையே
உனக்கென உகந்தனை பரதன் தோன்றினான்.

ஒன்பது பேர்களும் முனிவராயினர்
ஒன்பது பேர்களும் ஒன்பதாகிய
துன்பமில் பதிகளையாள எண்பத்து
மன்னிய ஒருவரும் மறையவர்களாம்.

புதல்வர்களனைவரும் முத்தி பெற்றிட
இதமுறு வழிபல இனிது காட்டினை
பொதுவுறு நிலைமையில் நீ யிருந்தனை
எதிலுமே இருந்தருள் இனிய தேவனே.

வேறு

மைந்தர்க்கு ஞானத்தை மிகவூட்டி துறவு பெறும் கோலம் பூண்டு
சிந்தையிலே தெளிந்திருந்தும் மற்றவர்க்கே ஆண்டவனின் அருளை நல்க
சிந்தனைகள் பலப்பலவும் ஏற்றீர்காண் பூரணமாம் ஞானம் கண்டே
உந்தமது பெருமையினால் உலகெல்லாம் சஞ்சாரம் செய்தீர் மன்னோ.

ஐந்தறிவு படைத்தனவாம் உயிர்க்குலமாய் அலைந்தீர்கள் இறுதியாகச்
சிந்தையிலே உயிர்க்குலங்கள் செம்மைபெறும் வழிகண்டே பரமாத்மா உருவைப் பெற்ற
வெந்தீயால் காட்டினிடை உடலந்தான் மிகவெந்தே கருகிப்போக
எந்தெந்த திசைதனிலும் இல்லாமல் மறைந்தீர்கள் அண்ணல் காப்பீர்.

## இருபத்தோராவது தசகம் - வெவ்வேறு பூகண்டங்களின் ஆராதனை

1. இலாவிருதம் எனப் புகழும் பூகண்ட நடுவிலே உமையவளே முதலானோர்
உறையும் பாங்கில்
மலாதிகளை மாய்ப்பவனாம் மகேசனவன் உமை நாளும் மனமார
வாழ்த்துகின்ற
உலாவிவரும் சங்கர்ஷண உருப்படைத்த உத்தமனே
எமைக்காக்க குருவாயூரில்
சிலாவடிவில் இருப்பவனே செம்மை மிகுமுன்பாதம்
சேர்ந்தேன் மன்னோ.

2. இலாவிருத்த கிழக்கான பூகண்டப் பத்ராச்லத்தில் பத்ரசிவசர்
வணங்கிடலும் வடிவங்கொண்டீர்
பலாதிகளாம் பத்ரசிவர் வணங்கவரும் மாபெரிய பிரளயந் தன்னில்
ஜலாதிகளில் மறைந்திட்ட வேதத்தை வெளிகொணர்ந்த அயக்ரீவா நீ
இலாமலென்றன் பாவமெலாம் மறைந்திடவே என்றுமுனைவ
ஏத்துகின்றேன்.

3. இலாவிருத மெனுமிடத்தின் தெற்கினிலே அரிவர்ஷம்
கண்டமதில் பிரகலாதற்கே
குலாவலுறு மாபுருடர் வணங்கலுறு ஞானத்தைப்
புகட்டிடுவோய் வெண்மையாக
உலாவலுறு தூய்மைமிகும் உண்மைதனைப் போதிப்போய்
வெண்மையுடன் உயர்ந்தே ஓங்கும்
எலாம் துதிக்கும் நரசிங்க வடிவத்தில் உனைத்துதித்தே
ஏத்துகிறேன் குருவாயூர் குலவுவோனே!

4. இலாவிருதம் தன்மேற்கில் கேதுமால கண்டத்தில்
இன்பமிகு லீலை செய்யும்
குலாவலுறு புன்முறுவல் தன்னுடனே சோபிக்கும்
அவயங்கள் கொண்டகோவே
குலாவுகின்ற இலக்குமியால் பிராஜபதியின் மைந்தர்களால்
போற்றலுறும் பற்றிவாய்ந்து
உலாவிவரும் இலக்குமிக்காய் மன்மதனின் உருவேற்கும்
உமைப் பணிந்தேன்.

5. இலாவிருதம் தன்வடக்கில் இரமியமாம் பெயருடைய அழகான
பூகண்டத்தில்
உலாவலுறும் வைவஸ்த மனுவென்போர் வழிபடவே
பத்தரிடை
நிலைபெற்ற அன்பு கொண்ட
கலாமற்ற முனிவர்களின் உள்ளத்தே ஒளிர்கின்ற
பெருமகனே குருவாயூர் கோயில் கொண்டோய்
அலாதியுறும் உன்னடியே அடிநாயேன் அனுதினமும்
ஆராதித்தேன்.

6. உண்மையெனும் உருவுடையோய் வடதிசைசேர்
பூகண்டம் தனிலுறையும் உயர்வு மிக்கோய்
திண்மைமிகு மந்தரமாம் மலைதாங்கும் ஆமையது
வடிவுடனே திரியும் மேலோய்
உண்மை வடிவானவனாம் ஆரியமனும் வணங்கிவழி
பாடு செய்வான்
எண்ணரிய பெருமாளே குருவாயூர் எம்மரசே
ஏத்துகின்றேன்

7. ஞானிகளாய் போற்றலுறும் யக்ஞவராக வடிவுடையோய்
உத்தரமாம் குருகண்டத்தில்
மானமிகு சீதேவி வணங்கிடவே மோகனமார்
முழுமை பெற்றோய்
வானுலவு மேகங்கள் தமைத்தொடுமோர்
தெற்றிப்பல் தன்னைக் கொண்டோய்
ஈனமுறு மெனைக்காத்தல் உன்கடமை
ஏத்துகின்றேன்

8. கிம்புருடமென்றதொரு கண்டத்தில் அனுமனவன்
சேவை செய்ய
அம்புவியில் சீதைக்கே உரியவனாம் அற்புதமார்
வடிவுகொண்டோய்

நம்பியுனை நானடைந்தேன் உனையன்றி
எனக்கெனவோர் நாதியில்லை
வெம்பலிலா உனத்துடனே வேதனைகள் தீர்த்தின்றே
காத்திடென வேண்டுகின்றேன்.

9. பாரதகண்டந்தனில் பலர்கூடி நாரதரும்
போற்றிடவே நலன்கள் நல்கி
பரவுகின்ற தொண்டர்களை ஊழிவரை காக்கின்ற
பரிவு கொண்டே
விரவு நர நாராயணனென விளங்கிடுவோய்
வித்தகா நீ
பரவுமெனைக் காத்துன்றன் பதமலரில்
சேர்க்கவெனைப் பரவுகின்றேன்.

10. பலட்சமெனுட த்வீபத்தில் ஆதித்யவடிவன் என்றும்
சால்மலத்தில் சந்திரனெனும் வடிவனென்னும்
குசந்தனனில் அக்கியெனக் கிரௌஞ்சத்தில் நீரெனவும்
சாகத்தில் காற்றெனவும் புஷ்கரத்தில் பிரமமெனும்
வணங்குவாரே

11. பாற்கடலில் பள்ளிகொளும் பரந்தாமசந்நிதியிலே
முனிவரெல்லாம்
சிம்சுமார ரூபியாக
போற்றிடுவீர் உம்முடைய உறுப்புகளில் உடுக்கணங்கள்
உற்றவென உமைப்புகழ்வார் காண்
பாற்றரிய துன்பமெனும் நரகினின்றும் உன்னுடைய
அடியவனைக் காக்கவேண்டும்
போற்றுகிறேன் எளியவனின் புன்னுரையைச்
செவிமடுப்பாய் புங்கவா நீ.

12. பாதாளத்தின் கீழ்வாழும் ஒற்றையெனும் குண்டலத்தில்
ஆயிரமாம் தலை தன்னைப் பெற்றுயர்ந்த
தீதற்ற ஆடையுடன் கலப்பையெனும் ஆயுதமும் ஏந்திநின்று
நாகருல குறைகின்ற கன்னியரால் போற்றப்பெற்றே
ஓதுறும சேடனெனும் வடிவுடையோய் உத்தமனே
உன்பாதம் சேவை செய்தேன்
பேதமின்றி என்னோயைப் போக்கிடுவாய் வரமருளும்
குருவாயூர் பெருமான் நீயே.

## இருபத்திரண்டாவது தசகம் - அஜாமிளோ பாக்கியானம்

1. அசாமிளன் என்ற ஒருபார்ப்பனனும் இவ்வாழ்க்கை
தனில் இருக்கக் குருவான தந்தையுடைச்
சொல்லைக் கேட்டு
உசாவுமொரு எண்ணமின்றி காட்டிற்கே சமித்துக்களைச்
சேர்ப்பதற்காகச் சென்றபோதில்
அசதியினால் வெட்கமிலாக் குடிமகளாம் வேசியினை
வழியிடையே காணலுற்றான்
திசையெல்லாம் புகழ்கின்ற குருவாயூர் குணக்குன்றே
திருவடிகள் போற்றி போற்றி.

2. மனத்தின்கண் அமைதிகொண்டு மற்றவளின் பின்சென்றே
மனமும் கெட்டு
இனத்தினுக்கே ஈனமுறும் இழிசெயல்கள் பலசெய்து
கொடுமைக்கே இருப்பிடமாய் இருந்ததன்றி
மனத்தினுக்கே இனியவனாம் உன்பெயரைக் கொண்டிருந்த
மைந்தன்பால் பற்றுக்கொண்டான்
தினைத்துணையும் தீமையிலார் மனத்துறையும் தூயவனே
குருவாயூர் தேவதேவ.

3. மரணமெனும் வேதனைதான் வந்துறலும் வருந்திமிக
மனமெல்லாம் நொந்தவனாய் மனங் குழம்பி
உருமொரு நல்மார்க்கத்தை யறியானாய் அறிவிழந்து
உனை நினையும் உணர்வுகொண்டே
கருவிலே திருவுடைய நாரணனாம் மைந்தனையே
கவின்பெறவே அழைத்தலானன்
பெருமைமிக்கோர் போற்றியருள் குருவாயூர் பெருமானே
வணக்கம் செய்தேன்.

## இருபத்து மூன்றாவது தசகம் - சித்ரகேது உபாக்யானம்

1. தக்கனவன் பிரசேதரிடம் மனு தனைப்பெற்றே
வம்சந்தான் விருத்தியாக
தக்கவனாம் உமைப்பணிய எண்கைகளுடன் அவன்முன்னே
தோன்றிநின்றாய்
மிக்கபல வரமளித்தே அக்னி எனும் மனைவிதனை
யீந்து காத்தாய்
எக்காலும் உள்ளவனே குருவாயூர்ப் பெருந்தலைவா
ஏத்துகின்றேன்.

2. அன்பினால் பதினோராயிரம் புதல்வர்கள் அவனிடத்தே
அவதரித்தார்
இன்பமுடன் நாரதரின் இனியமொழிதனைக்கேட்டு
வழிபட்டார்கள்
துன்புறவே தக்கனவன் நாரதர்க்குப் புகலடைந்தான்
இல்லையாக
அன்றொருநாள் சாபமிட நாரதரும் அனுக்கிரகமாய்
அதனைஏற்றார்.

3. பெண்களறு பத்துப்பேரைப் பெற்றெடுத்து
வம்சத்தை வளரச் செய்தான்
பெண்வழியில் பேரனெனும் விஸ்வரூபன்
இந்திரர்க்கு நாரணனின் கவசமான
உண்மையுறு தோத்திரத்தால் பாதுகாப்பை
உவந்தே ஈந்து
எண்ணலறும் வெற்றியினை இந்திரன்தான்
எய்திடவே செய்தான் மன்னோ.

4. சித்ரகே தெனும் மன்னனவன் சூரசேனநாட்டினையே
ஆண்டபோது
புத்திரனுக்காய் ஏங்கியவன் புலம்புகையில்
அங்கிரசின் மகிமையாலே
புத்திரனைப் பெற்று மகிழ்வெய்தியகால்
மாற்றாந்தாய் பலரும் சேர்ந்து
மெத்தவுமே உம்முடைய மாயையினால்
மனமுடைந்து வருந்தினானே.

5. அன்புருவாம் நாரதரும் உம்மகனின்
சீவாத்மா தன்னைக்காட்டி
உன்துன்பம் அகற்றவென முனைகையிலே
மைந்தனவன் வியப்புமிக்கு
மன்னிநின்ற ஐயத்தால் யார்மைந்தன்
யானென்று வினவலோடும்
அன்றந்த நாரதரும் உனைவணங்கும்
வழியனைத்தும் ஓதிவைத்தார்.

6. சேடனுடை வடிவாகி நின்றன்னை
நாரதனின் துணையைக் கொண்டு
கேடில்லா உளம்படைத்த மன்னவனும்
பலகாலம் வணங்கிக் கொண்டு
தேடரிய பரமபதம் தனைப்பெற்றே
உய்ந்தானன்றோ
நாடுகின்ற அவ்வனைத்தும் நல்குகின்ற
குருவாயூர் நாதா போற்றி.

7. தாமரையின் தண்டெனவே ஆயிரமாம்
தலைகளுடன் முனிவர் போற்ற
சேமமுற எதிர்தோன்றி அன்னவனின்
சித்தத்தை மகிழச்செய்தே
காமுறுநல்வரம் பலவும் நல்கியவன்
கவலை போக்கி
ஓம் எனவே நின்றவனே குருவாயூர்
ஓதரிய பெருமான் நீயே.

8. உம்முடைய சேவை செய்யும் உத்தமனாம்
அன்னவன் தான் உவப்பு கொண்டே
செம்மைமிகு விஞ்சையரின் துணையோடு பலபலவாய்த்
துதிகள் பாடி

வெம்மைமிகு பிறவியுடை வேதனைகள்
யாவையுமே நீங்கப்பெற்று
மும்மலமும் போக்கியருள் உம்முடைய
பாதமலர் முன்னினானே.

9. மதிமயக்கம் நீங்கிடவே கயிலைக்குச்
செல்லுகெனப் பணித்ததாலே
துதிப்பாடிச் செல்கையிலே மன்மதனின்
பகையான தோன்றலானோன்
இதமுறு நல்விருப்புடனே உமைதன்னை
மடியினிலே வைத்திருக்க
மதிமயங்கிக் கேலிகளைச் செய்திட்டான்
மமதையாலே.

10. பயமேது மடையாமல் ருத்ரகேது சாபத்தின் விடுதலையை
யாசிக்காமல்
மயல்மிக்க விருத்திரனாய்ப் பிறந்ததுடன் புரந்தரனைப்
பகைத்துக் கொண்டே
துயர்மிக்க போர்புரிய உம்முடைய துணையதனால்
தூய்மை பெற்றே
உயர்வுமிகும் வைகுந்தப் பதவியெனும்
உன்பதவி யுற்றானன்றோ.

11. திதிதேவி இந்திரனை அழித்திடவே தன்மனத்தே
நினைத்தபோதும்
அதிகமுறும் அறிவுநிறை மருத்துகளைப்
பெற்றாளன்றோ
மதியீனம் உற்றவர்க்கும் உன்சேவை என்றென்றும்
மகிமை நல்கும்
எதுவரினும் காக்கின்ற குருவாயூர்
என்னவனே பெருமவாழி.

## இருபத்து நான்காவது தசகம் - பிரஹலாத சரிதம்

1. பன்றியென அவதரித்தே இரண்யாட்சன்
தனைவதைத்த பான்மையாலே
கென்றிட்ட இரணியன்தான் மதுவென்றும்
அரக்கனுடைப் பகைவனான
உன்றனையே வதம் செய்வேன் எனச் சபதம் தன்மனத்தே
உளுற்றலானான்
என்றுமுன்றன் திறமறிந்தார் இவ்வுலகில் எவ்விடத்தும்
இல்லைமாதோ.

2. அயனவன்பால் தவம்செய்த இரணியனும்
அளவில்லா வரங்கள் பெற்றே
வியனுலகில் வேதனைகள் விளைவித்தே
இந்திரனை விரட்டிவிட்டே
மயர்வில்லா வைகுந்தம் தனில்உம்மை
மதியாமல் அறிவுமங்கி
துயர்தன்னை மறந்தவனாய்த் திரிந்தானால்
தூய்மையின்றி.

3. உன்றனையே கொல்ல வெனவைகுந்தம்
தனையடைந்து உன்னைத்தேட
நன்றியிலான் உள்ளத்தே நீ தங்க
மற்றவனும் எங்கும்தேடி
பொன்றலிலா உன்பெருமை யறியாமல்
பயந்தோடி யொளிந்தாயென்று
கன்றிவரு சினத்துடனே கடிதேகிப் பயத்துடனே
மறைந்தான் மன்னோ.

4. இரணியனின் மைந்தனெனப் ப்ரகலாத பெரியவனும்
தோன்றலானான்
அரனெனவே வீணையுடன் சஞ்சரிக்கும் நாரதனும்
உன்பெருமை தன்னையன்னாள்
முரணின்றிக் கருவினிலே சொன்னதனை அன்னவனும்
முற்றுமேற்றுத்
திரணுமே தீதின்றித் தொழுதவனாய்
உன்தொண்டனாகி நின்றான்.

5. அசுரரெலாம் தூற்றுமுன்றன் திருவடியை
ஏளனமாய்த் தூற்றிக்கொண்டு
பரசுகின்ற நிலைநீங்கிப் பாதகமாம் சிந்தையுடன்
பாவம் செய்து
குருவினிடம் தன்மகனைத் தண்டிக்க எண்ணியவன்
தூண்டி விட்டான்
உருவினிலே சிறந்தவனாய் உனைப்பணிந்தே
உவப்புடனே உலவினானே.

6. தன்மகனை இரணியனும் உலகிடையே
சிறந்ததெது எனக்கேட்கப் பிரகலாதன்
உன்பெயரை உச்சரிக்க குருக்களிடம் இரணியன்தான்
கோபம் கொண்டே
தன் மகனைக் கொல்கென்று மற்றவர்க்குக்
கட்டளைகள் பிறப்பித்தானால்
பொன்மனமார் குருவாயூர்ப் புங்கவனே
போற்றி போற்றி,

7. குருவாயூர்க் கொற்றவனே அன்னவன்தான்
சூலத்தால் குத்தப்பட்டும்
பெருகிவரும் பாம்புகளால் பேதுற்றும்
பட்டினியால் விஷங்கலந்த உணவினாலே
உருவிழந்தும் பெரு மலையினுச்சியிலே
உருட்டப்பட்டும்
குருவாக உமையடைந்த கொள்கையினால்
குறையின்றி வாழ்ந்தான் மாதோ.

8. வருணனுடைப் பாசத்தால் கட்டிவைத்தே அன்னவனை
வதைத்த போதில்
கருணையுடன் அசுரர்களாம் சீடர்க்குக் கனிவுடனே
பிரகலாதன் உனதுபேரை
உருவேற்ற - ஆசான்தான் இல்லாத உவப்புமிக்க
வேளை தன்னில்
திருமிகுந்த உன்னாமம் தனைச் சொல்லி அவரெல்லாம்
தீமை தீர்ந்தார்.

9. அசுரரெலாம் உன்னாமம் தனையடைவாய் ஓதக்கேட்டு
கொசுவென்னும் இரணியன்தான் குலமைந்தன்
தன்னை நோக்கி
அசுரகுலப் பதரே உன்குருயார் என்ற தட்டலோடும்
பசுமையுடன் நின்பேரைப் பலமுறையும் பயமின்றிப்
பகர்ந்தானன்றோ.

10. வாளேந்தி இரணியனும் உனைக்கொல்ல வரம்பில்லாச்
சூழ்ச்சி செய்ய
தாள் பணிந்த பிரகலாதன் ''எவ்விடத்தும் நீ
உள்ளாய் என்றலோடும்
தாளாலே அங்குள்ள தூண்தன்னை அவுணன்தான்
உதைத்தலோடும்
மீளலிலாக் கொடுமையினால் அவனுற்ற துயரத்தை
உரைத்தலாமோ.

## இருபத்தைந்தாவது தசகம் - நரசிம்மாவதாரம்

1. தூணினைத் தனது அடியெடுத்துதை கொடுத்தலொடும்
   அதன் நடுவிலே
   நாணியேயவன் குருக சிங்க ஒலி
   நனிமிகுந்ததொலித்த நேர்த்தியினால்
   மாண்புமிக்க உலகனைத்துமே நிலைமை
   மருகியே மிக நடுங்கவே
   சேண்மிகுந்த ஒலி அசுர மன்னனையும் பிரம்மதேவனையும்
   வெருட்டுமால் திருவின் கேள்வனே.

2. கோபமுற்றவுணன் சுற்றிநின்றிருகையில்
   தூணில் நின்றனது உருவமும்
   பாபமிக்கவரை மாய்க்கும் எண்ணமுடன்
   பாய்ந்து வந்த நிலை கண்டதும்
   தீபமுற்றியுயர்தீயின் கங்கெனவுன்
   திவ்ய ரூபமது தோன்றலும்
   கோமென்றனலும் கொதித்துத் தெழுந்திடுமுன்
   கோர ரூபமதை என் சொல்வேன்.

3. பொன்னை ஒத்தொளிரும் கண்கள் காயமதை
   போர்த்தெழுந் தொளிரும் பிடறியும்
   வன்மைமிக்க பிலமொத்த வாயும் கூர்
   கத்தியொத்தொளிரும் நாவுடன்
   மென்று கொண்டு வரும் பற்களின் வரிசை
   மேவி நின்ற நின் உருவமே
   என்னவென்றவரும் புனையும் தன்மையிலை
   ஈசனே எனது நேசனே.

4. கருச்சனை செய்யும் வேளைதன்னில் உன்
கன்னந்தன்னில் உறும் மடிப்புகள்
அர்ச்சனை செய்துன் அன்பர் ஏற்றுமுன்
கழுத்தும் கைகளும் கர்ஜனை
பெருத்தெழுந்ததொரு இடிமுழக்கமென
பிரளயத்தினை நிகர்த்தே
அருத்தி கூறுமுன்றன் அருளின் நீழலில்
அனுதினம் உனைப் பணிவேன்.

5. விண்டுவே இவனை விட்டொழிப்பதிலை
எனவெகுண்டவன் மேல்வரக்
கொண்ட தோர் கதையில் தாக்க உன்னுடைத்
தோள்களால் வளைத்தாக்கலும்
பண்டு போலவன் வாளும் கேடயப் படைகளும்கொடு
தாக்கவே
விண்டுவே உனது போர்த்திறத்தினால்
விண்ணெலாம் அதிர்ந்து போனதால்.

6. சுழன்று வந்துனைச் சுற்றிவந்த அக்கொடியனை
உன்றன் தொடையின்மேல்
அழன்றெழுந்து நீகிடத்தி அன்னவனின்
மார்பினைப் பிளந்தூறியே
சுழன்று வந்த அவன் இரத்தமத்தனையும்
துச்சமென்றுறுஞ்சிமேலுமே
அழன்றெழுநீ கர்ச்சனை தனைச்
செய்த பான்மைதனைச் சொல்லவோ.

7. இரத்தமெங்கணும் பரவிநின்றதொரு
இனிய தோற்றமுடன் நீயுமே
பெருத்த தானவர் அனைவர் கூட்டமும்
பிறழ்விலாமலே அழியவே
உருசிப் பார்த்தவன் திரியும் வேளையில்
உலகும் கடல்களும் மலைகளும்
திருவழிந்து மேல்கீழுமாகியே உடுக்கள் மாறியே
திரிந்தனவால்.

8. சதை நிரம்பியே கொழுப்பில் மேவியே
சாரும் நின்னுடை உடலையே
உதய ஞாயிறாய்ப் பார்த்த ஈசனும்
இந்திரன் முதல் அயனுமே
பதைபதைத்தனர் அருகில் நிற்கவும்
பயமிகுந்தவர்கள் ஆகியே
எதை இனிச் செய்வதென்று தம்மிடை
எண்ணும் எண்ணமும் மறந்தனர்.

9. கோபம் சற்றுமே தணிவிலாத உனை
நாரதன் சொலும் சொற்களால்
தாபமுற்ற பிரகலாதன் போற்றிடவும்
தணிந்தகோபமுடன் அன்னவன்
பாபம் நீங்க நல் பரிவுமேவு மொரு
பாங்கு சான்றிடும் உளமுடன்
கோபம் நீங்கிநல் கருணைகாட்டியே
கோட்டம் யாவுமே போக்கினாய்.

10. உலகமெங்கணும் நாடகந்தனை
நடத்துகின்ற தொரு தூயவனே
இலகும் உன்னுடைய லீலை யாவையும்
இங்குணர்த்திடலும் ஆவதோ
குலவுகின்ற புகழ் தன்னை உற்றிடும்
குறைவு நீக்கிடும் நாரணா
உலகில் நோய் நொடிகள் உற்றிடாத வகை
உவகை கொண்டினிது காத்திடாய்.

## இருபத்தாறாவது தசகம் - கஜேந்திர மோக்ஷம்

(வேறு)

1. இந்திரத்துய்ம னென்ற பாண்டியன் வழிபாட்டின்கண்
சந்தனமலையின் கண்ணே உமைப் போற்றிப்புகழுங்காலை
வந்திடும் அகத்தியன்தன் வருகையை மதித்திடாமல்
சிந்தையை உம்பால்வைத்தே திருவடிதொழுது நின்றான்.

2. கும்பத்தில் பிறந்தோனான குறுமுனி யானையாக
இம்பரில் திரிக வென்றே சபித்தனன் ஏகலோடும்
வெம்பலில் உளத்தால் உன்னைப்புகழ்ந்தனை னாகியன்னோன்
தெம்புசேர் யானை மன்னன் என்றொரு பிறவிபெற்றான்.

3. பாற்கடல் நடுவின்கண்ணே பெண்யானை பலவும் சூழ
தோற்றமார் அரசாய் திரிகூட மலையிலே நீரில் ஆடி
பாற்பட நின்றதாங்கே பலருமே போற்றும் வண்ணம்
கூற்றமே எதிர்நின்றாலும் குறைவிலா யானையாங்கே.

4. யானையின் அரசுதானும் எனைத்தேனும் துன்பந்தன்னை
ஏனெனெ அறியாதேனும் உன்னுடைத் தூண்டலாலே
மோனமாம் எரியின்கண் முங்கியே விளையாடிற்றாம்
வானமாய் பூமியாகி வாழ்கின்ற உயிரே ஐயா.

5. விஞ்சையன் ஹூஹூ என்பான் தேவரின் சாபத்தாலே
விஞ்சிய வலிவு மிக்க முதலையாய் விளங்கினானால்
கொஞ்சமும் இரக்கமின்றி முதலைதான் யானைக்காலை
வஞ்சமாய் வவ்விற்றன்றே வரத்தொடு துன்பருள்வோய்.

6. ஆயிரம் ஆண்டுகாலம் ஆராதித் தும்மைப் போற்றும்
நேயமார் முதலைக்கன்று நிமிர்ந்திடும் பக்திதோன்றத்
தோய்ந்திடும் துன்பம் தந்தீர் தோன்றலே குருவாயூரில்
மேயதோர் பெரும நின்றன் மேன்மைதான் புகலற்பாற்றோ.

7. பற்பல பிறவிதோறும் பரிவொடும் தாமரைகள்
பற்பல பறித்தே உன்னைப் பரவிய யானைதானும்
கற்பனைக் கெட்டா உன்னைக் கடவுளே என்றுபல்கால்
சொற்பதம் சொல்லொணாமல் துதித்துதான்
வணங்கிற்றன்றே.

8. நிற்குணப் பிரமந்தன்னை நினைத்து தான்யானை வேண்ட
அற்புத மூர்த்தியான் அயனொடு சிவனுமாங்கே
சொற்றவர் நாங்களல்ல என்றவர் இருந்தகாலை
பொற்புடன் கருடன் மீதில் பொலிவான காட்சிதந்தீர்.

9. சக்கரப் படையையேந்திச் சார்ந்திடும் முதலைதன்னை
அக்கணம் அழித்தலோடும் அமரனாய்ச் சென்றதன்றே
திக்கெலாம் புகழும் வண்ணம் யானையுன் திருவடிக்கண்
புக்கினி தின்பம் பெற்றே புகுந்ததால் வைகுந்தத்தில்.

10. கதையுடன் உன்னைஎன்னைக் காலையில் பாடுவோர்கள்
சிதையிலா நன்மையெய்திச் சீரெலாம் உறுவரென்றே
மிதமிலா வரங்கள் தந்தேவைகுந்தம் அழைத்துச்சென்றாய்
எதையுமே யாக்கவல்ல எம்முடைக் குருவாயூரா.

## இருபத்தேழாவது தசகம் -

1. விஞ்சையர் மகளொருத்தி தூர்வாசர்க் களித்தமாலை
எஞ்சலில் இந்திரற்கே ஈந்திட யானையேறிக்
கொஞ்சமும் வினயமின்றி அதை நல்க யானைதானும்
அஞ்சிடா ததைமிதிக்க அவர்சாபம் அளித்தார் மன்னோ.

2. சாபத்தால் இந்திரன்தான் மூப்பினைச் சார்ந்தானாக
கோபத்தைத் தாங்காராகித் தேவர்கள் சிவனும் மற்றும்
சாபத்தைப் போக்கவென்று பிரமனைச் சார்ந்தாராக
தாபத்தைத் தணிக்க உன்னை அனைவரும் சார்ந்தாரன்றே.

3. பிரமனே முதலாயுள்ள தேவர்கள் உன்னைப் போற்ற
திர முடன் அசுரரோடும் சமாதானம் செயகவென்றே
உருமிகும் பாற்கடற்கண் கடைந்தமு தெடுங்களென்றே
பொருவரும் கட்டளைதான் புரிந்தனிர் அந்த நாளில்.

4. தேவரோ டசுரர் சேர்ந்து மந்தரமலையைத் தூக்க
மேவரும் மலைதான் கீழே விழுந்திடக் கருடன்தானும்
தாவியே அதனைத் தூக்கிப் பாற்கடல் நடுவண்வைக்கத்
தேவனே திருவுளந்தான் செய்தனிர் போற்றி போற்றி.

5. வாசுகி தன்னை மத்தின் கயிறென இருக்கச் செய்து
தேசுறு தேவரெல்லாம் வால்பக்கம் இருக்குமாறும்
மாசுறு மசுரர் வாயின் பக்கமாய் இருக்குமாறும்
ஈசனே செய்தீரன்றே உம் லீலை எல்லையில்லை.

6. மலையது கடலில் மூழ்க மாண்புறும் ஆமையாகி
அலைகடல் நடுவுள் சென்று அதனை உன் முதுகில் தாங்கி
இலைஇனி இடரேஎன்று எல்லோரும் எண்ணும் வண்ணம்
குலைவறு செய்கைசெய்த கோமகன் நீயேயன்றோ.

7. யோசனை இலக்கமான தொலைவுறும் உமது ஓட்டால்
ஆசிலா வகையில் அந்த மந்தரமலையைக்காத்து
தேசுறு தேவருற்ற துயரெலாம் களைந்து மேலாம்
பேசறு செயலைச் செய்த பெருமானே போற்றி போற்றி.

8. மலைதனை மேலே கண்ட மற்றவர் கடையலுற்றார்
அலைவுறும் அவர்களைப்பை அவருளே புகுந்து நீவிர்
குலைவுறச் செய்தீரன்றோ வாசுகி சோர்வைநீக்கி
அலையிடைக் கடைதலுக்கு ஆதரவாகி நின்றீர்.

9. வேகமாய்ச் சுழன்றுமேலே எழும்பிய மலையைநீயும்
வாகுறு கையினாலே அழுத்திய வளமைகண்டு
சோகமில் ஈசனோடு பிரமனும் மகிழ்ச்சியெய்தி
வாகுறு மலர்கள் தூவி வாழ்த்துகள் பலவும் சொற்றற்றார்.

10. வாய்புறம் விடந்தான் தோன்ற வன்மைசேர் அரக்கரெல்லாம்
தேய்வுற்றே வருந்தலோடும் வால்புறம் மழைதான் பெய்ய
ஏய்ந்ததோர் வழியைக் கண்டீர் என்னருள் ஈசனே நீர்
ஆய்ந்திடின் உம்மைப் போன்றோர் அகிலத்தில் எங்குமில்லை.

11. பயந்தோடும் திமிங்கிலங்கள் முதலைகள் வெகுளும் வண்ணம்
வியன்மிகு தேவரெல்லாம் உடைந்தோட நீவிர்மட்டும்
அயர்வின்றி இருகையாலும் அம்மலை தனைக்கடைந்தீர்
துயரெலாம் நீக்குகின்ற குருவாயூர் தூயோய் போற்றி.

## இருபத்தெட்டாவது தசகம் - லட்சுமி அவதாரம்

1. உலகெலாம் நடுங்கும் வண்ணம் கடைந்தஅக் கடலின் கண்ணே
நிலையது குலையச் செய்யும் விடம்தோன்ற நீளும் வேண்ட
அலைவிலா உமையின் பங்கர் அதனையே உணவாயுண்டு
குலையுறு கொடுமை தன்னைக் குலைந்திடச் செய்தாரன்றோ.

2. பின்னரும் கடைந்தபோது தேனுதான் தோன்றலோடும்
நன்னராய் முனிவர்கட்கே ஈந்தனிர் நன்மைநோக்கி
பின்னர் உச்சைஸ்ரவஸ் என்றொரு குதிரைதோன்ற
என்னவ இச்சை வைத்தாய் நின்னருட் கிணையுமுண்டோ.

3. உன்னையே தெய்வ மென்று தன்னுடை மனத்திலெண்ணும்
பன்னலம் நல்குகின்ற இலக்குமி தோன்றலோடும்
இன்னில மக்களெல்லாம் எண்ணிய தேவையெல்லாம்
பின்னமில்லாமல் நல்க பெரிதுமே வேண்டி நின்றாய்.

4. அன்பினால் உனைநினைந்த அவளுக்கே இந்திரன்தான்
பொன்மய ஆசனந்தான் போற்றியே அளித்து நின்றான்
நன்னீரும் மணமுங்கொண்டே நீராட்டல்தன்னைச் செய்தே
பன்னரும் முனிவரெல்லாம் பலபல துதிகள் செய்தார்.

5. கடைக்கணால் அவளை நோக்கிக் களிப்புடன் இருந்த காலை
அடைக்கலமென்றே உன்னை அடைந்திடும் தேவர் போன்றோர்
உடைபல அணிகலன்கள் அணிந்தனர் உவகை பொங்க
மடமையைப் போக்குகின்ற குருவாயூர் தேவதேவே.

6. திருமகள் மலர்கள் மாலை தெரிந்தெடுத்தும் மைநாடி
உருமிகு கொங்கைபாரம் உடன்வர நடைநடந்தே
பெருகிடும் சிலம்பின் ஓசை பாதத்தில் ஒலித்திருக்க
அருகினில் வெட்கத்தோடும் அமைதியாய் அடைய லுற்றாள்.

7. சிவனொடும் அயன்தான் நல்ல சிறப்புகள் பெற்றாரேனும்
பவமறு காமம் போன்ற நோயெலாம் நீங்கப்பெற்றோர்
உவமையில் நீரேஎன்று உற்றதோர் எண்ணத்தாலே
நவமிகு மாலை சூட்டி உம்மையே வணங்கினாளே.

8. உலகிற்குத் தாயென்றோதும் இலக்குமி தேவிதன்னை
உலகுறு மார்பிலேந்தி இன்பத்தை யளித்தீரன்றோ
அலகிலா இன்பமென்னும் மழையினால் அகிலமெல்லாம்
பலன்பல அடைந்த பான்மை பகர்ந்திடலா வதில்லை.

9. வாருணி கடலின்று தமோகுண வடிவமாகத்
தாருண மானபோது அசுரருக்கவளை ஈந்தாய்
போருணர் வசுரர் ஏற்றுப்பூரிப்பை யடையச் செய்தாய்
காருண்ய மூர்த்தியுன்றன் கருணைக்கோர் எல்லையுண்டோ.

10. புதியதோர் மேகம் போலக் குருவாயூர்ப் புங்கவாநீ
விதுப்புறு மமுதமேந்திக் கடலிடை விளங்கி நின்றாய்
கதியென உன்னைப் போற்றும் தொண்டரைக்காக்கும் வள்ளல்
மதிமகிழ் வடையச் செய்யும் மகிமையை என்ன சொல்வேன்.

## இருபத்தொன்பதாவது தசகம் - மோகினியவதாரம்

1. தன்வந்திரி வடிவந்தாங்கிக் கலசத்தைக் கையிலேந்த
முன்வந்த அசுரர் அந்தகலத்தை அபகரித்தார்
என்செய்வ தென்றே ஏங்கும் தேவரைத் தேற்றிநின்றீர்
புன்செயல் அரக்கர் அந்தக் கலத்தைஏந்தி நின்றார்.

2. நீலமார் மேனியோடும் நிமிர்ந்திடும் கொங்கையோடும்
கோலமார் நுமது தோற்றம் அசுரரை மயக்கலோடும்
சாலவும் உமது கொங்கை தனைக்கண்டே மயக்கங்கொண்டு
ஏலுறும் தமது செய்கையனைத்தையும் மறந்துநின்றார்.

3. மான்விழி மடவாய் இந்த மாபெரும் அமுதம் தன்னைத்
தேனென எமக்குப் பங்கு போட்டுநீ தருவாய் என்ன
ஊனமில் அசுரர் கேட்க நானொருவிலைமகள் என்
றானநும் திறத்தால் சொல்ல அவர்மிகக் காமங்கொண்டார்.

4. அரக்கர்கள் மகிழ்ச்சியோடும் அமுதத்தை உன்பால் ஈய
பரக்கவே நீ தான் "என்றன் செய்கைதான் தவறானாலும்
இரக்கமாய்ப் பொறுப்பீ"ரென்றே இருசாரார் தமையுமாங்கே
இருந்திடச் செய்தே பங்கு இட்டிடத் தொடங்கி னாயால்

5. தேவர்களருந்து மாறு அமுதத்தை யளித்த நீயும்
தேவரில் ஒருவராக அசுரர்தான் அமர்ந்தேயுண்ண
மேவரும் துயரங்கொண்டே தலைதனை வெட்டிவீழ்த்தி
யாவரும் போற்றும் வண்ணம் இனியராய்க் காட்சி தந்தாய்.

6. அமுதத்தை அபகரித்த அதற்கேற்ற பரிசைநல்க
திமிதிமென் றன்னாள் அந்த அசுரர்கள் போரைச் செய்தார்
அமுதத்தை உண்டதேவர் அரக்கரால் மயங்கும்போது
இமைக்குமுன் அங்குவந்து இன்பமாய் உதித்தாயன்றோ.

7. காலனேமி மாலிமுதல் கடியவரைக் கொன்றுநின்றாம்
சாலவுமே இந்திரன்தான் பகனுடனே பலிஜம்பன் வலவன் தன்னை
ஏலும் வகைக்கொன்றிடலும் நமுசியவன் றுறையதனால் அழிவுற்ற
ஞாலமெலாம் போற்றுகின்ற நாரதரும் போர்நிறுத்தம் செய்தாரன்றோ.

8. பெண்ணுருவாய் நிற்கின்ற பெற்றியதைப் பரமசிவன் கேள்வியுற்ற
தன்மை மிகுமுமையவளின்து ணையுடனே வந்தவனாத் தன்னிச்சை தன்னைச் சொல்ல
மண்ணுலகம் புகழும் வகை மறைந்தீர்கள் உவமையெதும் சொல்லொணாத
உண்மையுரு கொண்டவராம் உம்பெருமை உரைத்திடவும் ஆவதுண்டோ.

9. பூந்தோட்டம் தனில் அழகு தவழ்கின்ற பொன்னுருவாய்ப்
பொலிந்திட்ட உம்மையன்று
மாந்தரெலாம் வணங்குகின்ற பரமசிவன் மதிமயக்கம்
மிகக் கொண்டு அருகில் வந்து
தாந்தமது விருப்பத்தால் தழுவியிடும் நிலையினைப்
பெற்றார் அங்கே
வேந்தருக்கு வேந்தனெனும் குருவாயூர்
வித்தகனே போற்றி போற்றி.

10. பரமசிவன் உனையணைத்துத் தன்வீர்யம் தனைவிடுத்த
பின்னரே தான்
திரமனவே உண்மைதனை உணர்ந்தவனாய்ப் பார்வதிக்கும்
இதனைச் சொன்னான்
குருவான குருவாயூர்க் கோமகனே உன்பெருமை
கூறப் போமோ
திருவனைத்தும் தருபவனே அடியனைத் தினந்தினமும்
காப்பாய் நீயே.

## முப்பதாவது தசகம் - வாமனவதாரம்

1. மாவலியை இந்திரன்தான் கொன்றிடினும் சுக்கிரனின்
சஞ்சீவி மகிமைதன்னால்
தாவலிலா வலிமையுடன் விஸ்வஜித்தின் யாகத்தில்
மிக வலிமை தன்னைப் பெற்றே
தேவரெலாம் பயந்தோடும் உம்முடைய சக்கரமாம்
படையதற்கும் அஞ்சானாகி
ஓவலிலாக் கொடுஞ்செயல்கள் உலகத்தில்
செய்வதையே கடனாக் கொண்டான்.

2. அதிதி யெனும் தேவியாள் தன்மைந்தர் அடைந்திட்ட
அளவில் துன்பம்
பதியான காசிபர் பால் பகர்ந்திடலும் அவர்சொன்ன
பயோ விரதப் பாங்கினாலே
துதி செய்தாள் பன்னெடு நாள் வரையில்தன்
துயர்களையும் சித்தத்தோடு
எதுவரினும் காக்கின்ற குருவாயூர் என்னவனே
இணையடிகள் போற்றி போற்றி.

3. விரதத்தின் முடிவினிலே அதிதியவர் காணும்வகை
நான்குகரம் கொண்டு தோன்றி
பரவுமொரு புத்திரனாய் அவதரிப் பேனானாலும்
பாரின் கண்ணே
விரவும்வகை விளம்பாதே என உரைத்தே
மறைந்தாயால் வேதவித்தே.
கரவில்லா மனங்கொண்டோர் வணங்கிடவும்
காட்சியானாய்.

4. காசியபர் தவவீர்யந்தன்னாலே அதிதியவள்
 கர்ப்பந்தன்னில்
பேசரிய பிரமாவால் துதித்திடவே பெறுகின்ற
 பேறு பெற்றீர்
நேசமுடன் சிராவணத்தில் துவாதசியில் அவள் வயிற்றில்
 அவதாரம் செய்யலானீர்
வாசமுறு துழாயணிந்த குருவாயூர் வாசவனே
 அடிகள் போற்றி...

5. தேவரொடு முனிவர் குழாம் பூமாரி பொழிந்தவராய்
 வாழ்த்து கூற
மேவியுன்றன் பெற்றோர்கள் மகிழ்ச்சி யெனும் மிகப்பெரிய
 கடலில் மூழ்க
பாவமெலாம் ஒழிக்கின்ற மாணியெனும் உருவதனைப்
 பாரித்தீர்கள்
மூவருக்கும் முதலான குருவாயூர் முதல் மூர்த்தி
 பாதம்போற்றி.

6. காசியபர் உபநயனம் செய்வித்து மேகலையும் தண்டமுடன்
 மான்தோலும் அக்கமாலை
நேசமுடன் அலங்கரித்தே ஒளிமிக்க மேனியுடன்
 அங்கி செயல் அனைத்தும் செய்து
ஏசலறும் அசுவமேதம் செய்கின்ற மாவலியின் பெருமைமிகும்
 வீடு நோக்கிப்
பேசரிய செயல்செய்யும் பெற்றியுடன் பெருமைமிகச்
 சென்றீரன்றோ.

7. பின்னாளில் உலகமெலாம் வடிவாகத் தோற்று முன்றன்
 வடிவத்தைக் காட்டல் போல
நன்னயமாய்ப் பூமியையே அசைத்திட்டாய் வலிவுடனே
 நயங்கள் ஓங்கப்
பின்னமுறும் பகைவர்களின் வெப்பத்தைத் தணிப்பதுபோல்
 குடையை யேந்தி
சின்னமெனத் தண்டொன்றை ஏந்திய நீ
 புறப்பட்டாயால்.

8. நருமதையின் கரையதனை நீயடைந்த
 நேரத்தில் அவண் வ்திந்த
பெருமைமிகும் சுக்கிரனே முதலானோர்
 உன் ஒளியின் பெருமைகண்டு

அருமைமிகு சூரியனோ அக்கினியே சனக்குமார
அம்சமதோ என்றேயஞ்சி
விருவிருப்பாய் ஆய்ந்தார்கள் வேதனைதான்
உள்ளத்தில் விளைதலாகி.

9. உருவத்தால் மிகச் சிறந்த உனையன்று சுக்கிரனும்
மாவலியும் உற்று நோக்கிக்
கருதரிய வியப்புடனே பாதத்தில் கனிவுடனே
அபிடேகம் பண்ணினாரே
பெருவரங்கள் யாவையுமே உனையடைந்தோர் பெற்றிடவே
குருவாயூரில்
வருபவர்க்கே கண்கொள்ளாக் காட்சிதரும் வரதனெனும்
வடிவாய் நின்றாய்.

10. பிரகலாதன் எனும் பெரியோன் மரபினிலே
உதித்திட்ட பெருமையாலோ
பெருமைமிகு யாகங்கள் பலசெய்த
பெற்றியாலோ
மருவின்றிப் பிராமணர்கள் தமைத்துதித்து
மதித்ததாலோ
உருவினிலே அசுரனென இருந்தாலும் உன்னுடைய
தீர்த்தம் பெற்றான்.

## முப்பத்தோராவது தசகம் - பலியிடம் மூன்றடி மண் யாசித்தல்

1. எவராலும் வெலற்கரியாய் உன்னுடைய
   ஒளிப் பெருக்கில் உளத்தை ஈந்தே
கவரலுறும் மனத்துடனே அவ்வசுரன்
   பிராமணனே என்பால் நீயும்
உவப்புடனே வேண்டுகின்ற பொருளெதுவோ
   உணர்த்திடுக தருவேனென்றான்
தவப்பெரிய தனிமுதலே குருவாயூர் தலத்தினிலே
   தனித்து வாழ்வோய்.

2. குறைவற்ற அசுரகுலக் குலமணியின் சொற்கேட்டே
   குறுநகை தான்பூத்து நின்று
நிறைவுற்ற மனத்துடனே மூன்றடிமண் வேண்டுமென
   நீயும் கேட்டீர்
நறுமை நிறைகுருவாயூர் நாயகனே நீயன்று
   நானிலங்கள் கேட்டபோதும்
குறைபட்டார் எவருண்டே! உன் பெருமை
   கூறிதால் பெருமை சான்றாய்.

3. மூன்றடி மண்யாசித்தாய் உலகமுற்றும் கேட்டிடினும்
   முழுமையுறத் தருவேனன்றோ
தோன்றால் என்றவன் செருக்கால் செப்பிடவும்
   துளிகூட அசைவேயின்றி
மேன்மையுறும் நின் பெருமை அத்தனையும் தோன்றும்வகை
   மேன்மையோடு
ஆன்றோனாய் நின்றனையால் குருவாயூர்
   ஆதி மூர்த்தி.

4. மூன்றடியால் மனநிறைவு பெறாதவன்தான் மூவுலகும்
அளித்தபோதும்
தான்தனது மனத்தமைதி கொள்வதுண்டோ
என்றுரைத்த சொல்லைக் கேட்டே
தோன்றலே உமைக்கேட்போன் உலகெல்லாம்
காக்கின்ற துணையா மென்றே
தான்தனது ஞானத்தால் சுக்கிரனும் மாபலிக்கே
தகுமுறைகள் சாற்றி நின்றான்.

5. ஆண்டவனே என்னிடத்தில் யாசிக்கும்
நிலை பெற்றால் அன்னோன் இன்னும்
வேண்டுவன யாவெனின்றும் கொடுத்திடவே
விழைகின்றேன் என்றானன்று
மாண்புமிகு விந்த்யாவும்பாதநீர் தனையளிக்கப்
பட்ட நீயும்
ஆண்களிலே சிறந்தவனாம் அவனளிக்க
அன்புடனே ஏற்றுக் கொண்டாய்.

6. அசுரகுல பதியன்றே ஐயமின்றி தாரை தனை
வார்த்து நல்க
விசும்பினிலே தேவரெலாம் பூமாரிதனைப் பொழிந்தே
வேண்டி நின்றார்
விசும்புயரப் பேருருவாய் மேன்மேலும் உன்னுருவம்
வளரும் பான்மை
பசுமையுறப் பாரெல்லாம் பார்த்ததுதான்
பரமதேவே.

7. அயினின்றன் அடிகளிலே கமண்டலத்தால்
அபிடேகம் தன்னைச் செய்ய
வியனுலக உயிர்க்குலங்கள் தீர்த்தத்தை விருப்புடனே
பருகிற்றன்றே
மயலில்லா ஜாம்புவனும் பேரிகையை முழக்கிவிட்டே
உலகெல்லாம் உவந்து சுற்றச்
செயல் புரிந்தார் தேவர்முதல் யாவருமே
செய்தவத்தின் பயனாய் நின்றோய்.

8. அரக்க ரெலாம் திரண்டெழுந்து போர் செய்யவே
அடைவாய் நிற்க
இரக்கமிலிர் நாமெல்லாம் தோல்வியுறல்
உறுதியென இசைத்தானாகி

அரக்கர்களின் அரசனவன் அந்நாளில்
அடிபணிந்து போற்றலோடும்
சிரிப்பொலியால் செகமல்லாம்
நடுங்கிடவே செய்தாயன்றோ.

9. கருடன் தான் பாசத்தால் மாவலியைக்
கட்டி நிற்கக்
கருணையுடன் மூன்றாவ தடியைநான்
எங்கு வைப்பேன்
உருவினிலே சிறந்தவனே உரைத்திடுக
என்றுரைக்க அவனுமாங்கே
திருவடியைத் தலையில் வை என உரைத்தே
தலைகுனிந்தான்.

10. மாவலியே உன் செருக்கை யடக்குதற்கே
இதனைச் செய்தேன்
தாவலிலா உயர்பதவி யத்தனையும்
அடைந்திடுவாய் தவத்தின்மிக்க
ஓவலிலாப் பரமபதம் தன்னையும் நீ
உருவாயன்றே
மேவுமொரு வரந்தந்தாய் குருவாயூர்
மேவுகின்றோய்.

## (32—1) முப்பத்திரண்டாவது தசகம் - மச்சாவதாரம்

1. ஆறாவது மன்வந்தா முடிவினிலே உண்டான
அவந்தர மாம் பிரளயந்தன்னில்
ஆறாத நித்திரைதான் கொண்டிருந்த பிரமாவின்
முகத்திருந்து அயக்ரீவன் தான்
மாறான செய்கை செயும் அரக்கனென வேதங்கள்
அபகரித்த போதிலங்கே
கூறான மீன்வடிவம் கொண்டெழுந்த செம்மையதும்
கூறலாமோ.

(வேறு)

2. திராவிட மன்னனான சத்தியவிரதன் தானும்
பராவிட ஆற்றுநீரில் தர்ப்பணம் செய்தபோது
திராவிட அரசன் கையில் மீன்குஞ்சாய்த் தோன்றினாயால்
பாரவரும் உனது கீர்த்திப் பாரெங்கு மறியுமன்றோ.

3. நீரினில் இருந்த உன்னை கமண்டலம் தன்னிற்கொண்டான்
பார்புகழ் கமண்டலத்தில் இடமின்றிக் கிணற்றின்கண்ணே
தேர்ந்தவன் விட்டான் பின்னை குளத்திற்கும் ஏரிக்கும் தான்
சேர்த்திடச் சேர்ந்தாயன்றோ செம்மைசேர் இறையே நீதான்.

4. உம்முடை கட்டளைக்கே உவப்புறு முனிவன்தானும்
செம்மை சேர் கடலின் கண்ணே சேர்த்திட நீருமங்கே
எம்முடை செய்கைதன்னை "ஏழுநாள் கழித்துக் காண்க"
செம்மையாய் என்றீரந்த செய்தியை என்ன சொல்வேன்.

5. நீர்சொன்ன ஏழுநாள்கள் சென்றபின் மழைதான் பெய்ய
நீரிடை உலகு மூழ்க முனிவரும் மற்றோர்சூழ
நீரினில் சுழன்று உம்மைச் சரணென அடைந்தார் அந்நாள்
பேரிடர் நீக்குகின்ற குருவாயூர் செல்வா போற்றி.

6. உம்முடை கட்டளைக்கீழ் பூதேவி தோணி யாகி
செம்மையாய் வருதலோடு சேர்ந்ததில் ஏறிக் கொண்டார்
இம்மென அவர்கள் எல்லாம் ஏங்கிட நீயுமங்கே
செம்மை சேர் மீனாய்த் தோன்றித் தேற்றத்தைத்
தந்தாயன்றோ.

7. இலக்கமாம் யோச னைதான் கொண்டிடும் உம்தோற் றத்தை
கலக்கமில் மனத்தி னோடு கண்டிடும் முனிவர் தாமும்
துலக்கமார் உமது கொம்பில் தோணியைக் கட்டி னார்கள்.
உலைப்பிலாய் உலக நாத உண்மையே போற்றி போற்றி.

8. தோணியை இழுத்துக் கொண்டு முனிவர்கள் அனைவ ருக்கும்
காணரும் உவகைக் காட்டி காசினி யாள் வோற் கன்று
தோணுறும் வடிவைக் காட்டி துணையென அறிவை யூட்டி
மாண்புற நின்றா யன்றோ குருவாயூர் மருவி நின்றாய்.

9. கற்பத்தின் முடிவின்கண்ணே எழுவகை முனிவர் தம்மை
உற்பத்தி செய்தே சத்யவிரதனை வைவஸ்சுத
நற்பெரு மன்வந்திரத்திற்கு மனுவாக நியமம் செய்தே
அற்பனாம் அயக்ரீவன்தான் அழிந்திடச் செய் தாயன்றோ.

10. உயர்ந் திடு முனது கொம்பால் அரக்கனை வீழ்த்தி விட்டே
பெயர்பெரும் வேதம் தம்மைப் பிரமன் பால்தந்து மேலும்
அயனையே மகழச் செய்த அதிசயம் என்னசொல்வேன்
மயர்வுறு மக்கட் கெல்லாம் மாண்பருள் குருவாயூரா.

## முப்பத்து மூன்றாவது தசகம் - அம்பரீஷ தசகம்

1. வைவச் சுதன்மைந்த னான நபாக நல்லோ னாவன்
மெய்வைத்த நபாகன் மைந்தன் அம்பரீஷ னென்று போற்றும்
பொய்யிலான் புவியை முற்றும் புறந்திடலான போதும்
மெய்வகையாலே உன்னைப் போற்றியே மகிழ்ந்தானன்றோ.

2. உம்மையே எண்ணி எண்ணி உம்மையே பணிதல் செய்ய
செம்மையாம் அருளைச் செய்தீர் செகத்திடையே
வனைக்காக்க
உம்முடைச் சுதர்ச னத்தை உடன் செல விடுத்திட் டீர்கள்
எம்மையும் காக்கும் வள்ளால் குருவாயூர் உறையும் தேவே.

3. அன்னவன் யமுனையாற்றின் அடைகரை தனைய டைந்தே
நன்னய மனைவி யோடு மதுவனம் தனிலி ருந்து
பின்னமில் அறுப தான கோடியாம் பிராம ணர்க்கு
உன்னத துவாத சியில் உணவினை நல்கி னானே.

4. பாரணை முடிவின் கண்ணே பாரவரும் தூர்வா சன்தான்
சீர்மிகு மரசன் வாழும் அரண்மனை சென்ற டைந்தான்
தூர்வாசன் துன்புறுத்திச் சோதிக்கும் இயல்பு கொண்டோன்
பார்வேந்தன் அழைத்த போது யமுனையை யடைந்தார்
மன்னோ.

5. தூர்வாசன் தாம தத்தால் பாரணை நேரந்தானும்
சோர்வுறத் தடையாமென்றே உன்பெயர் தன்னை எண்ணிப்
பாரணை யாக நன்னீர் பருகினன் ஞானத் தாலே
ஓர்த்திடு முனிவ ராங்கே பேயொன்றைத் தோற்று வித்தார்.

6. பேய்கைவாள் தன்னையேந்திப் பிரபஞ்சத்தை அழித்த தன்மை
ஆயவன் அரசன் கண்டும் அசைந்திலன் அமைதி கொள்ள
தூயதாம் சுதர்ச னந்தான் பேயினை அழித்த லோடு
ஆய்வுறும் தூர்வா சன்கண் அணுகியே சென்ற தம்மா.

7. பயமிக தூர்வா சர்தான் பரலோகம் தன்னில் சென்று
நயமிக அயனை வேண்டி நாதனாம் சிவனைவேண்டப்
பயனொன்று மின்றி உம்மைப் பரிவுடன் வேண்டுமாறு
அயன்முத லானோ ரன்று அவனிடம் உரைத்தார் மன்னோ.

8. முனிவரன் உன்னைக் சார்ந்து மும்முறை வேண்ட லோடும்
இனியவர் என்தொண் டர்கள் என்பதை யறிவா யன்றோ
புனிதமார் அம்பரீஷன் தன்னையே புகலாய்ப் பெற்று
இனியுன்றன் தீங்கை நீக்கும் வழியினைக் காண்பா யென்றாய்.

9. அம்பரீடன் தனைய டைந்தே முனிவரர் அடிவ ணங்க
தெம்புடன் அம்ப ரீடன் சுதர்சனம் தனை வணங்க
உம்மிடம் சுதர்ச னந்தான் உற்றிட முனிவன் தேறி
செம்மைசேர் வரங்கள் நல்கிச் சீர்பல நல்கி னானே.

10. ஓராண்டு கால மாக முனிவர்க்கே உணவ ளிக்கப்
பேராது நின்ற மன்னன் பெருமையாய்ப் போற்றி செய்து
ஆராத னைகள் செய்தே அறுசுவை உணவை யீந்து
பேராத பேற்றை யுன்பால்பெற்றுய்ந்து பெருமை கண்டான்.

## முப்பத்து நான்காவது தசகம் - இராமவதாரம்

(வேறு)

1. இராவணன்தான் உலகினிடைக் கொடுமைபல
 இயற்றிடவும் உன்னை வேண்டப்
பராவரிய ரிஷ்ய சிருங்கர் செய்திட்ட காமேட்டி
 யாகந்தன்னில்
ஓராயிரமாம் சூரியர்பேரல் உதித்தீர்கள் நால்வகளாய்
 உலக முய்யத்
தராதலந்தான் உய்யவெனத் தோன்றி நின்றாய்
 இராமனெனும் தகுதியோடே.

2. தந்தை சொல்லைக் காத்திடவே விசுவாமித்ர முனிவனுடன்
 வில்லேந்தித் தம்பியையும் உடனாய்க்கொண்டு
நிந்தையிலா முனிசொன்ன மந்திரத்தால் வழிக்களைப்பு
 துன்பமெலாம்
 விரைவினிலே நீங்கப் பெற்றீர்
வந்தனைசேர் முனிவனுடைத் துணையாலே வனந்தன்னில்—
 கொடியவளாம்
 தாடகையை வதமும் செய்தே
சொந்தமென முனிவனுடை ஆசிரமம் தனையடைந்தே
 அன்னவனின் தீராத
 துயர் துடைத்தீர்கள்.

3. வனத்திடையே மாரீசன் தனைமடித்து அகலிகையின்
 சாபத்தை மீட்டுத்தந்தே
தனத்தினிலே மிகச் சிறந்த மிதிலை நகர்தனை யடைந்து
 தகுதி வாய்ந்த
மனமொத்த திருமகளை மனைவியென ஏற்றவராய்
 மற்றோரெல்லாம்
இனமொத்த மனைவியரை யெய்திடவே இன்பமுடன்
 அயோத்தி வந்தீர்.

4. பிருகுகுல மன்னவனாம் பரசுராமன் வழிமறித்தே
தம்முடைய வீரந்தந்து
பரசவரும் தன்வலிமை போனபின்பு அயோத்திநகர்
தனையடைந்தே இன்பம் பெற்றீர்
பெருமைமிகும் சத்ருக்னப் பெரியவனும்
பரதனுடன் மாமன்தன் வீடுசெல்ல
அரசுபட்டம் கட்டவென தசரதன்தான் முயன்றிடவும்
கைகேயி தடுத்துவிட்டாள்.

5. தந்தை சொல்லைத் தட்டாமல் தம்பியுடன் சீதையையும்
அழைத்துக் கொண்டே
விந்தைமிகும் வனம்சென்றே குகனென்ற மேலவனின்
நட்புகொண்டே
சிந்தை தெளிந்தின்புற்றே மரவுரியும் சடைமுடியும்
தரித்துக்கொண்டே
நிந்தையிலாக் கங்கை தனைக் கடந்தருகில் பரத்வாசர்
தமைப் பணிந்து நின்றீர்.

6. தசரதன் தான் சுவர்க்கத்தை யடைந்தமையைக் கேட்டபின்பு
தர்ப்பணந்தான் செய்த பின்பு
இசைவுடனே பரதனிடம் பாதுகைகள் தமையளித்தே
ஆளச் செய்து
வசைமிக்க விராதனை நீ தண்டகத்தில் தண்டித்தே
சரபங்க முனியைச் சார்ந்து
இசைவுமிகு வீட்டினையே யளித்தருளி
வினய மிக நின்றாயன்றே.

7. முனிவர்களின் முறையேற்றே அரக்கர்தமை அழிக்கவென
முனைந்து நின்றாய்
கனிவுமிகும் அகத்தியர்பால் வைணவமாம் வில்லுடனே
பிரமாஸ்திரம் தன்னைக் கொண்டே
இனிமைமிகு தந்தை நண்பர் ஜடாயுவினைக் கண்டபின்பு
கோதவரிக் கரையின் கண்ணே
கனிமொழிசேர் சீதையுடன் பஞ்சவடி தனைக்கடந்து
பரிவு கொண்டீர்.

8. நெறிகெட்டுத் தறிகெட்டே சூர்ப்பனகை உனையடைய
நெஞ்சிலெண்ண
அறிவாளன் இலக்குவனால் அவள் மூக்குக்காதுடனே
தனமறுத்துச்
செறிவுடனே அவணணைந்த கரனுடனே தூஷணைக்
கடிதில் வென்று
அறிவற்ற அசுரர்களை அளவின்றி அவ்விடத்தில்
அழித்தாயன்றோ.

9. சூர்ப்பனகை கதைகேட்ட இராவணனும் கொதித்தெழுந்தே
மாரீசன் தனையனுப்ப
ஆர்த்வெழுந்தே அழிக்க வெனமுனைகையிலே அகமழிந்தே
சூழ்ச்சியினால் இராவணன் தான்
கூர்த்த மதியில்லாமல் சீதைதனைக் கவர்ந்திடவும்
உறுதுணை தான் கிடைத்ததாலே
சீர்த்த மதிதனைக் கொண்டே அமைதியுறும்
திருவுளத்தைக் கொண்டாயன்றோ.

10. சடாயு தனை வதைத்திட்டே இராவணன்தான்
விண்ணயடையச் சென்றபோது
சடாயு வங்கு நடந்ததனைக் கூறி மிக வருந்தி உயிர்
விடலு மாங்கே
சடாயுவுக்கு நீர்க்கடன்கள் சாற்றியபின்
அனுமனை நீ சந்தித் தாயால்
கெடாதநிலை அருள்கின்ற குருவாயூர் உறைந்தருளும்
கோமகனே அடிகள் போற்றி.

## முப்பத்தைந்தாவது தசகம் - ஸ்ரீராமசரிதம்

1. அனுமனின் துணையுடனே சுக்ரீவன் தனைக் கண்டுதுந்துபியின்
எலும்புக் கூட்டை
உனது கட்டைவிரலாலே உதைத்திட்டே மராமரங்கள்
தமைத் துளைத்து
மனங்கெட்ட வாலியினை மறைந்திருந்து கொன்றமனத்
துன்பத்தோடு
புனந்தனிலே சீதை பிரிவாற்றாமல் மதங்கனெனும்
புங்கவனை யடைந்தாயன்றோ.

2. இலக்குவனின் சொற்கேட்டுப் பயமடைந்தே உனையடைந்த
சுக்ரீவன் சொன்ன வாறே
பலப்பலவாய் அணிவகுத்து நின்றிட்ட வானரரின்
துணையுடனே வாயு மைந்தன்
இலக்கணத்தை எண்ணிய நீ உனதுகணை யாழிதனை
அவன்பால் ஈந்தோய்
கலக்க முற்ற வானரரும் பலதிசையும் சீதையினைப்
பரிவுடனே தேட லானார்.

3, உம்முடைய வரலாற்றைக் கேட்டதனால் சம்பாதி
சிறகெல்லாம்
முளைத்தா னாகி
செம்மையுடன் சொன்னவற்றைக் கேட்டதனால் அனுமனவன்
கடல்தாண்டி இலங்கை சென்றே
வெம்மைமிகு பிரம்மாஸ்த்திரம் தன்னாலே பிணைப்புண்டு
அட்யனைக் கொன்று பின்பு
எம்மையுமே பிழை செய்யும் இராவணனைக் கண்டுபின்பு
இலங்கையினை எரித்தா னன்றோ,

4. எரித்தபின்னர் மீண்டுவந்து சூடா மணிதன்னை
உன் பா லீந்தான்
பொருத்திருந்த நீயுந்தான் கடற்கரையை யடைந்தவுடன்
விபீடணனாம் புங்க வந்தான்
கருத்தவனாம் இராவணனின் நிலைய னைத்தும் உன்னிடத்தில்
புகலக் கேட்டாய்
வருத்தமுற்ற கடலரசன் தன்மீது அம்பேவ அவன்! அஞ்சி
வழிவிட் டானே.

5. வானரர்கள் கொண்டுவந்த மலைகளினால் அணைகோலி
பல்லாலும் நகங்க ளாலும்
தானவரை வானவர்கள் தாக்கிடவும் அரக்கர்குலம்
அழிந்திடவே வகையும் செய்தாய்
ஊனமிலா உன்னுடைய தம்பியுடன் நாகமெனும்
அத்திரத்தால் கட்டப்பட்டே
ஞானமிகு கருடனுடைக் காற்றாலே விரைவினிலே
அதினின்றும் விடுபட் டாயால்.

6. சத்தியெனும் படையாலே மூர்ச்சையுற்ற இலக்குவனை
அனுமன் தானும்
உத்தமமார் சஞ்சீவி மூலிகையால் உயிர்தெழவே
செய்ததனால் உடனே அன்னோன்
எத்தனையும் நீதியிலா இந்திரஜித் இறந்திடவே
வகையும் செய்தான்
உத்தமனாம் வீடணனின் சொற்கேட்டே கும்பகர்ண
வதமும் செய்தாய்.

7. இந்திரன் தான் தந்திட்ட கவசமுடன் தேரினைநீ ஏற்றாயால்
இராவணனை அழித்துவிட்டுச்
சொந்தமுறு சீதையினை நெருப்பினிலே குதித்தெழவே
நேர்மை செய்து
உந்தனக்கே உயிர்தந்த வானரரின் உயிர்தன்னை
மீட்டுத் தந்தே
சொந்தமென வீடணனை இலங்கைக்கே அரசடையும்
வழியும் செய்தாய்.

8. பட்டாபி டேகத்தை யடைந்ததனால் பத்தாயிரம்
ஆண்டு வாழ்ந்தாய்
எட்டாத பழிசுமந்த சீதையவள் தனைக்கானம்
செலவிடுத்தாய்
கெட்டவனாம் இலவணனையே சத்ருக்கனன்
அழித்திடவே வழி வகுத்தாய்
ஒட்டாத சூத்திரகன் தனையழித்தாய்—வால்மீகி ஆசிரமத்தில்
லவசுகுசர்கள் உற்பவித்தார்.

(திருமணம்—13 வயதில், வனவாசம்—25, பட்டாபிடேகம்—39, பரமபதம்—170)

9. வான்மீகி கட்டளையால் அவருடைய புனிதமுறும் யாகசாலை
தன்னிலன்று
மேன்மைமிகு முன்மைந்தர் உன்புகழைப்பாடியதால்
உவந்து நீயும்
பான்மையுடன் சீதையினைப் பார்த்திடவே சென்றிடவும்
அன்னவள்தான் பரிதவித்து
மேன்மையுடன் பூமிக்குள் சென்றிடவும் காலதேவர்
போற்றிடவே
இலக்குவன்தான் இறந்தானன்றோ,

10. நீர் உமது பரிசனர்கள் புடைசூழ நேர்மையுடன் வைகுந்தம்
தனை யடைந்தீர்
ஆர்வமுறு தொண்டர் பணிகுருவாயூர் அமர்ந்தருளும்
அமரர் ஏறே
சோர்வுமிகு மானுடமாய்உமை விரும்பும் தொடர்கள்
துயரைத் தீர்க்க
பேர்பெற்ற இராமனென அவதரித்தீர் உம்பெருமை
பேசப்போமோ.

## முப்பத்தாறாவது தசகம் – பரசுராமாவதாரம்

1. அத்ரியெனும் முனிவர்க்கே அனுசூயை அவள் வயிற்றில்
மைந்தனாக
உத்தமராய்த் தத்தாத்ரேயனெனும் பெயரில்
உலவலானாய்
சத்தியமார் கேகயநாட் டரசனவன் உனை வணங்கிச்
செல்வ மெலாம் அடையப் பெற்றான்
அத்தனையும் உன்னாலே மரணமென்றோர் வரந்தன்னை
அன்னாள் பெற்றான்.

2. கார்த்த வீர்யன் தனக்களித்த வரந்தன்னை மெய்ப்பிக்கும்
கருணையோடும்
சீர்த்தெழுந்த வல்லசுரர் தமையழித்து உலகிடையே
செம்மையெலாம் செய்வதற்கும்
சீர்த்திமிகும் பிருகுமர புதித்திட்ட ஜமதக்கினி முனிவருக்கு
ரேணுகையின் மைந்த னாக
போர்த் தொழிலில் வல்லவராம் இராமனெனப்பலர் போற்றும்
புகழும் பெற்றாய்.

3. பதினான்கு வயதினிலே கலையனைத்தும்|கற்றீர்கள் கந்தருவன்
குளித்திருந்த காலைதன்னில்
மதிமயங்கும் உன்அன்னை தனைக்கொல்ல மற்றமைந்தர்
மறுத்தாராக
துதிமேவும் தந்தை சொல்லால் அன்னையுடன் மற்றவரைக்
கொன்றபோது
எதுவரினும் கலங்காத தந்தை சொல்லால் எல்லோரும்
உயிர் பெற்றார்கள்.

4. உன்னுடைய அன்னையவள் அன்புக்காய்த் தேனுவையே
புவிக்கண் தந்தான்
பன்னரிய பரமனையே இமயத்தில் தரிசித்தே பரசென்னும்
படையைப் பெற்றே
உன்னதமாம் அவர்சொல்லும் சொற்கேட்டே அசுரனையே
கொன்றுபோட்டு
நன்னயஞ்சேர் அக்ருதனை நண்பனென அடைந்திட்டே
ஆஸ்மரத்தை யடைந்தீர ன்றோ.

5. வேட்டைக்குச் சென்றிட்ட கார்த்தவீர்யன் உன் தந்தை
உபசரிப்பைப் பெற்று நின்றான்
சேட்டையுடன் அவன் தந்த தேனுவையே விலைபேச
உன் தந்தை ஒப்பா ராக
நாட்டமுடன் தேனுவை யே கவர்ந்திடவே பல்வேறு
சூழ்ச்சிக ளால் முனிவர்க் கொன்றான்
தேட்டமுறும் தேனுவதும் அன்னவனின் சேனைதனைக்
கொன்றிடவும் கன்றினயே கவர்ந்து சென்றான்.

6. உன் தந்தை சுக்கிரனால் உயிர்பிழைக்கச் சினங்கொண்டே
மாழ்கிமதி தனைய டைந்தீர்
பன்னரிய சிவனருளால் மகோதரன்தான் கொண்டுவந்த
குதிரைகள் சாரதியின்றி துணையினோடு
உன்னதமாம் தேரேறி வில்லுடனே பரசேந்தி நண்பருடன்
சென்றபோது
நன்னயமாய் அவன் கன்றை நல்கிடவே மறுத்திடலும்
போர்செய்யும் நாட்டம் கொண்டீர்.

7. கணக்கற்ற மைந்தருடன் சேனையெனும் கடலுடனே
படைத்தலைவர் பலரும் சூழ
இணக்கமிலாக் கார்த்தவீர்யன் போர்தொடுக்க ஒருநொடியில்
வீழ்த்தி விட்டீர்
பிணக்குவியல் சேர்ந்திடவும் எஞ்சியதன் மைந்தருடன்
பேதமையால் எதிர்த்தல் செய்தான்
கணக்கற்ற வரமருள்வோய் குருவாயூர் தனில் மருவும்
காலதேவே.

8. ஆயிரமாம் கைகளினால் நர்மதையின் நீர்ப்போக்கை
யடைத்தல் செய்யத்
தோயுமொரு உளத்துடனே இராவணனும் ஆண்டுவரத்
தொல்லை தந்தான்

மேய உன்றன் படைகளினால்—வைஷ்ணவமாம் சக்கரத்தால்
வீழ்த்தி நின்றாய்
தேயுமுளத் தரக்கனை நீ கொன்றிடவும் அன்னவன் உன்
திருவுலகைச் சேர்ந்திட்டானே.

9. தந்தை தன்சிறப்பாலே சினமுற்ற கேகயனின்
மைந்தர்களும் உன் தந்தை தன்னைக் கொல்ல
தந்தையுடை இறப்பாலே துயருற்ற ரேணுகையும்
மனங்கலங்கி நின்றபோது
வந்த உன்றன் சினத்தாலே உலகத்தில் மன்னர்குலம்
அனைத்தும் மாய்த்து
இந்த உலகிடை மன்னர் குலமில்லை என்ற வகை
தன்னைச் செய்தாய்.

10. மூவேழுதலை முறைக்கு மன்னவர்கள் குலமறுக்கும்
விரதம் பூண்டு
தாவிவரும் சமந்த பஞ்சக மென்ற இரத்தந்தான்
நுரைத்தெழுந்த மடுவின் கண்ணே.
மேவுமுன்றன் குலமுதல்வர் தங்களுக்கே தர்ப்பணங்கள்
மிகப் பலவாய்ச் செய்த பின்னர்
தேவர்புகழ் காசிபர்க்கே நிலமகளைத் தட்சிணையாய்க்
கொடுத்தீரன்றோ.

11. சால்வனுடன் போர்த்தொடுத்துத் தணிவெய்தி அத்திரங்கள்
அனைத்தையுமே தியாகம் செய்து
சால்புமிகும் மகேந்திரத்தில் தவம் செய்யக் கோகரணம்
கடலின்கண் முழுகக்கண்டே
ஏலுமொரு அங்கியெனும் கணைதனை ஏவிவிடவும்
கடல் தூதான் பயந்தே ஏங்க
சால்புடனே ஓமத்தின் அகப்பை தனை ஏந்தியங்கே
கோளத்தை யாக்கி னீர்கள்.

# முப்பத்தேழாவது தசகம் - தேவகீ கர்ப்பம்

1. தேவருடன் அசுரர்கள் செய்திட்ட போர்தன்னில் உம்மாலே
 கொல்லப்பட்டும்
 மேவரிய உம்மாலே வென்றிடவும் புண்ணியமும் பாவமும்தான்
 கலந்ததலோ
 தாவவிலா வீட்டுலகை யடையாத காரணத்தால் தவிப்பெய்தி
 நின்ற காலை
 தேவியெனும் பூமியவள் பிரமனையே சந்திக்க அயனுலகை
 யடைந்தாள் மாதோ.

2. கடலின்கண் விழஇருக்கும் இவள்தன்னைக் காப்பாற்றும்
 தேவர்களைக் கேட்டதேனோ
 திடமிக்காய் எனப்பிரமன் கேட்டருளி உனைநோக்கித்
 துதிகள் செய்தார்
 அட லுருவாய்க் குருவாயூர் அமர்ந்துள்ளாய்
 ஆண்மைமிக இலங்குவோயே
 உடலுயிரைக் காத்திடவே உன்றன்னை வேண்டுகிறேன்
 உதவு வாயே.

3. பூதேவி கூறியவை அத்தனையும் உண்மைகாண் உணர்ந்திடுவீர்
 உம்மைக் காக்க
 ஸ்ரீதேவி ஒருவரன்றி மற்றவரால் ஆகாது ஆகையினால்
 அனைவோரும் சிவனைச் சார்ந்து
 ஓதரிய பாற்கடலை யடைந்திடுவோம் திருமாலைத்
 துதித்திடுவோம் என்றயன்தான்
 ஆதரவாய்த் தேவரிடம் உரைத்தருள அனைவருமே
 உம்மிடத்தை யடைய லானார்.

4. எல்லோரும் உம்முடைய வழிபாட்டில் மனமொன்றி
நின்றதுமே அயனு மாங்கே
நல்லபல நவிலலுற்றே உம்மையெலாம் மகிழ்விக்க
ஆண்டவனால் கூறப் பெற்றேன்
சொல்லரிய வாக்கினையே கேளுங்கள் எனச்செப்பி
அன்னவர்க்கே சோர்வை நீக்கி
பல்வகையாம் நீதிகளைப் பகர்ந்திடவே மனத்தின்கண்
பன்னினானே,

5. தேவருடன் பூதேவி யடைந்துள்ள துயரத்தை யானறிந்தேன்
அதனைப் போக்க
மேவலுரும் யதுகுலத்தில் பூரணமாம் கலையுடனே
அவதரிப்பேன் மேன்மை யோடு
தேவர்களும் விருஷ்ணகுலம் தனில்வந்தே துலக்கமுடன்
பிறந்தி டட்டும்
தேவர்களின் மனைவியர்கள் பூமியிலே பிறக்கட்டும்
என்றன்னாள் பிரமன்பால் சொல்லி வைத்தீர்.

6. நல்லுரையை எல்லோரும் கேட்டபின்பு மனத்திடையே
நலிவு நீங்கி
வல்லவராய்த் தத்தமது இடங்களுக்கே சென்றதன்பின்
வாகு மிக்க
எல்லவரும் போற்றுகின்ற சூரசேனன் மைந்தரெனும்
வசுதேவர் தேவகியை மணந்து கொண்டார்
பொல்லாத அரர்க்கர்குலம் வீழ்ந்திடவே பொருத்தமுறு
பெருவழிதான் அவ்விடத்தே தோன்றப் பெற்றார்.

7. மணமக்கள் தமைக் கஞ்சன் அழைத்தேக வழியினிலே
அசரீரி யா கி நின்று
இணக்கமுடன் செல்கின்றார் இவர்களுடை இணையற்ற
கருப்பம் தன்னில்
பிணக்கின்றிப் பிறக்கின்ற பிள்ளைகளில் எட்டாவது
பிள்ளையாலே
உணக்கலுறும் உன்னாயுள் என்றிடலும் தேவகியை
வாளேந்திக் கொல்லப் போனான்.

8. வல்லசுரன் தேவகியை வதைத்திடலும் அவளிடத்தில்
பிறக்கின்ற மைந்தர்தம்மைத்
கொல்கவெனக் கூறிடவும் கொடியவனாம் அவனிசைந்தான்
முதற்கண் தோன்றும்
வல்லவனைக் கருணையினால் கொல்லாமல் வாகுடனே
விட்டு விட்டான்
பொல்லாரும் ஒருவேளைப் புந்தியினில் தெளிவுற்றே
புரிதலுண்டே.

9. நாரதரும் கஞ்சனிடம் யதுகுலத்தோர் தேவருடை
அம்சமென்றே
ஒருரையை உரைத்திடலும் பிறந்திட்ட புத்திரரைக்
கொல்லலுற்றாள்
பேருரையாய் விண்டுவந்தே அவதரிப்பான் புவிமீதில்
உன்னைக் கொல்ல
ஓர்ந்திடுவாய் என்றுரைக்க யதுகுலத்தோர் அனைவரையும்
ஓட்டி விட்டான்.

10. ஏழான கருவதிலே சேடனவன் தோற்றிடலும் உம்முடைய
கட்டளையை ஏற்றுக்கொண்டே
கேழ்கிளரும் யோகமாலை ரோகிணியின் வயிற்றினிலே
சேர்ப்பித் திட்டாள்
ஊழ்வசத்தால் தேவகியினின் கருவினிலே உற்பவத்தே
உண்மைகாணச்
சூழ்கின்ற தேவர்களால் துதிசெய்யும் தூய்மையுடன்
துலங்க நின்றாய்.

## முப்பத்தெட்டாவது தசகம் - ஸ்ரீகிருஷ்ண ஜனனம்

1. ஆனந்த வடிவுடையோய் உன்னுடைய அவதாரம்
உலகின் கண்ணே
மோனமுடன் தோன்றுங்கால் உலகனைத்தும் மேகத்தால்
மூடப்பட்டே
சோனை மழை பொழிமேகக் கூட்டந்தான் சூழ்ந்திடவும்
சோர்வு நீங்கி
வானுலகும் மண்ணுலகும் சிறந்திடவே வரம்பில்லா
இன்பங் கண்டார்.

2. மழைநீரால் உலகனைத்தும் குளிர்ந்திடவே எண்ணியவர்
எண்ணம் எல்லாம்
இழைந்திடவே நல்லவர்கள் மனமெல்லாம் நலங்கண்டே
நலிவு நீங்கப்
பிழையுன்றிச் சந்திரன்தான் தோன்றுகின்ற வேளையிலே
மூவுலகின் துன்பம் நீங்கி
அழகுமிக அவதரித்தாய் உம்பெருமை யடியவனால்
அளத்தலாமோ.

3. வடிவத்தில் குழந்தையென இருந்திடினும் இலக்கணங்கள்
அனைத்தும் பெற்றே
திடமுடைய கிரீடமுடன் கங்கணமும் தோள்வளையும்
ஆரமுடன் துலங்கி நின்றே
அடல்மிக்க சங்குடனே, சக்கரமும், தாமரையும், கதையுடனே
அழகு மிக்கு
மடல்விரித்த தாமரைபோல் அவதரித்த உம்மகிமை
மறக்கற் பாற்றோ.

4. வசுதேவ புத்திரரே! உம்மார்பில் உறைகின்ற இருக்குமியின்
கடைக்கண் பார்வை
தசும்பிவழி காரணத்தால் பிரசவித்த அறைதன்னில்
கஞ்சனவன் அமைத்திருந்த
அசுத்தத்தைப் போக்குபவன் போல் நீயும்
அவதரித்தாய்
விசுவாச முற்றவர்கள் போற்றவரும் வித்தகனே குருவாலூர்
மேவி நின்றாய்.

5. ஞானத்தின் சிகரத்தில் நின்றொளிரும் முனிவரரும்
நாடரிய உன்னையன்று
மோனமுறு சித்தத்தால் மெய்சிலிர்த்தே கண்களிலே
நீர்சொறிய முழுமை யுற்றே
கானமுறும் துளவணிந்தோய் களிவோடும் வசுதேவர்
அந்த நாளில்,
வானமுதே வல்லவனே எனப்போற்றி மனமுவந்து
வழிபட்டாரே.

6. தேவர்க்குத் தேவான பரம்பொருளே துன்பங்கள் யாவையுமே
சேதித்தோயே
மேவரிய நின்வலிவால் அனைவரையும் அடக்கிவிடும்
மேன்மை கொண்டோய்
ஓவலிலாக் கருணையினால் உலகனைத்தும் ஆள்கின்ற
உயர்வுகொண்டோய்
ஆவலினால் உனைப்போற்றிப் பணிகின்றேன் எனஉரைத்தே
பணிந்து நின்றார்.

7. கண்ணீரால் நனைந்திட்ட கொடிபோன்ற உடல்படைத்தை
தாயவளும் துதிக்கப் பெற்றாள்
உண்ணிறைந்த அன்பாலே நிகழ்ந்திட்ட இருபிறவி
தலைவன்பால் உதித்த தன்மை
வண்ணமுற வகுத்துரைத்தே மனிதஉருத் தாங்கி நின்றீர்
மகிதலத்தில்
எண்ணரிய பேறெல்லாம் எல்லோர்க்கும் உவந்தளிக்கும்
ஏந்தல் நீரே!

8. உம்முடைய கட்டளையை ஏற்றவராய் வசுதேவர்
நந்தகோபர்
தம்முடைய மகளுடனே மாற்றுமொரு எண்ணத்தால்
தணிவு மேவி
செம்மைமிகு மன்னத்தின் குஞ்சுநிகர் நும்மையவர் கரத்தினிலே
ஏந்திக் கொண்டார்
எம்மையுமே பணிக்கின்ற குருவாயூர் என்னவனே
அடிகள் போற்றி.

9. உன்றனது கட்டளையால் நந்தாகேபர் வீட்டினிலே
உதித்திட்ட யோகமாலை
தன்னுடைய ஆற்றலினால் நகர்வாழ்வோர் அனைவரையும்
உறக்கத்தில் தாழ்த்தினாளே
பன்னரிய காவலுள்ள கதவெல்லாம் தாமாகத்திறந்திடவே
வகையும் செய்தாய்
உன்னதமாய் வீட்டருள்வோம் உனக்குநிகர் உலகத்தே
உளரோ சொல்வாய்.

10. புண்ணியமே வடிவான வசுதேவர் உன்றன்னைத்
தன்தலையில் சுமந்து செல்ல
எண்ணரிய படம்விரித்தே சேடனவன் குடைபிடித்தே எழில்
மேவும்
மணிகள் தாமும்
வண்ணமுடன் வழிகாட்ட வழிநடந்தார் வந்தவர்கள்
வாழ்கவென வழியைக் காட்ட
திண்ணமுடன் குருவாயூர் உறைபவனே தேவரெலாம்
போற்றலும் தேவ தேவே.

## முப்பத்தொன்பதாவது தசகம்

1. உனைச்சுமந்தே வசுதேவர் செல்லுங்கால் உறுத்தெழுந்து
சீற்றமுடன் உலகம் சூழ்ந்து
பனையளவாய் யமுனையதும் பரந்திடவும் பகவானே
உன்கருணை பரவசத்தால்
சுனைநீர்போல் கணைக்காலின் அளவாகக் குறைந்திட்ட
கொள்கையதை என்ன சொல்வேன்
எனையோர்க்கும் கருணைபொழி யெம்மானே!
குருவாயூர்க் கோயில் கொண்டோய்.

2. உன்றன்னைச் சுமந்துசென்ற வசுதேவர் கோபியர்கள்
உறக்கம் கொள்ள
நின்றெண்ணிப் பாராமல் கதவதுதான் திறந்திருக்க
நந்தகோபர் மனைபுகுந்து
உன்றன்னை அவ்விடத்தே விட்டுவிட்டே மாயையினைச்
சுமந்துகொண்டே
பொன்றலிலாத் தம்மனையைச் சார்ந்தனரால் குருவாயூர்ப்
புங்கவனே போற்றிபோற்றி.

3. உம்முடைய தங்கையவள் அழுதிட்ட சத்தத்தால் பிரசவித்த
செய்தியினை உரைக்கக் கேட்டு
செம்மையிலாக் கஞ்சனவன் தீர்த்திடவே யுளங்கொண்டே
திருவில்லா நெஞ்சினோடு
தம்முடைய தங்கையின்பால் பெண்குழந்தை இருந்தநிலை
கண்ட போது
வெம்மைமிக மூச்சொறிந்தே செய்வதொன்றும் அறியானாய்
வெதும்பி நின்றான்.

4. இச்செய்கை வஞ்சமிகு கண்ணனவன் மாயையினால்
 நிகழ்ந்த தென்றே
கொச்சைமிகு கஞ்சனவன் யானையின்பால் தாமரையின்
 பூவை யாங்கே
மெச்சலிலா வகை பிடுங்கும் நிலைபோலப் பிடுங்கிவந்தே
 பாறை மீது
இச்சையிலா உளத்தோடும் மோதியவன் உளத்தெழுந்த
 சினந்த ணிந்தான்.

5. உனைப்பணிவோன் இயமனுடைப் பாசத்தால்
 விடுபட்டே உவப்பி னோடு
எனைத்துலகும் தொழ நிற்கும் தன்மையென இன்பமுடன்
 எழுச்சி கொண்டே
தினைத்துணையும் அதிர்வின்றித் திருக்கால்கள் எட்டுடனே
 ஆகா யத்தில்
பனையளவாய்த் தோன்றியவன் அன்னவனை வியப்பிலே
 ஆழ்த்தி னாளே!

6. கொடுமையுளம் படைத்துள்ள கஞ்சனே கேட்டிடுவாய்
 உன்னைக் கொல்ல
அடலேறாய் ஒருவன்தான் பிறந்துள்ளான் பிழைத்துப்போ
 என உரைத்தே மறைந்துபோகத்
திடமிக்க தேவரெலாம் துதிபாடத் தெய்வமெனப் போற்றிடவே
 நின்றாள் மன்னோ!
உடல்படைத்த பயனடையும் பெரும்பேறே குருவாயூர்
 உத்தமனே போற்றி போற்றி!

7. மலையரசன் பெண்ணான மாயையவள் சொற்கேட்டமாயமிகு
 கஞ்சன் தானும்
குலைநடுங்கப் பிரலம்பன் மகன் பூதனையாம் கொடியவளாம்
 முதலானோரை
உலகெல்லாம் நடுங்கிடவே அனைவரையும் கொல்லும்வகை
 உசுப்பி விட்டான்
நிலம் நடுங்கத் தீயவர்கள் நிகழ்த்துகின்ற செயல்தமக்கோர்
 நிலையு முண்டோ.

8. நந்தகோபன் மனைதனிலே உறக்கந்தான் கலைந்தெழுந்து
 நாத னாகி
வந்தவர்கள் அனைவருமே மைந்தனவன் அவதரித்த
 மகிமை கேட்டு

சிந்தைதனில் கனிகூரத் தெளிவான உள்ளத்தில்
திகழ்ந்து நின்றாய்
வந்தவர்க்கே வரமருளும் குருவாயூர்க் கொற்றவனே
வழுத்துகின்றேன்.

9. புதிதாக மலர்ந்ததொரு காயாவின் நிறங்கொண்ட
புனித உன்னை
வெதுவெதுப்பாய் முலைப்பாலால் மகிழ்வித்தாள் யசோதை யன்று
விருப்பி னோடும்
விதவிதமாய்ப் புண்ணியத்தை விளைத்திட்ட மேலவரின்
மேன்மை பெற்றும்
புதியதொரு பொலிவினையே பெற்றுநின்ற புண்ணியத்தைப்
புகலப் போமோ.

10. இந்நிலையில் நந்தகோபர் தானமுடன் தருமங்கள்
பலவும் செய்ய
செந்நிலைசேர் யாதவரும் பலப்பலவாய் தருமங்கள்
செய்ய லானார்
எந்நிலையை உன்னிலையாய்ச் செய்திடுவாய் என்றென்றும்
எல்லோ ருக்கும்
மெய்ந்நிலையைச் செய்கின்ற குருவாயூ மேலவனே
கழல்கள் போற்றி.

## நாற்பதாவது தசகம் - பூதனையின் மோட்சம்

1. நந்தகோபன்தானாங்கே நாட்டமாய்க் கப்பம்கட்ட
விந்தைசேர் மதுரையேக வாசுதேவர் அவரைப் பார்த்தே
நிந்தைசேர் கஞ்சன் செய்யும் நீசமாம் செயல்களெல்லாம்
நொந்துபோய் உரைத்தலோடும் நந்தரும் உரைக்க லானார்.

2. நினக்கொரு மைந்தன்தானும் உதித்திட்ட செயல்நி னைக்கில்,
எனக்கொரு மகன்பிறந்த இன்பமே மீதூ றுங்கான்
மனக்கினி தான நண்ப என்றவர் புல்லிக் கொண்டே
தினைத்துணை யேனும் தீமை இல்லவன் தெளிவுபெற்றான்.

3. சகுனங்கள் தீயவாகச் சார்ந்திடு கின்றதாலே
வெகுவாக நீயுமுன்றன் வியன்பதிக் கேகுகென்றே
அகமுற நந்தகோபன் வசுதேவர்க் குரைத்த லோடும்
மிகமிக வேகமாகக் கோகுலம் வந்த டைந்தார்.

4. மாயமார் குழந்தாய் உன்னை மாய்த்திடும் எண்ணத் தோடும்
தோயுமோர் நஞ்சமென்னத் தோற்றதில் அழகே சொட்ட
ஆயதோர் பெண்ணை ஆங்கே அனுப்பினன் அருகில் வந்தாள்
மேயதோர் அன்பர்போற்றும் மேதினிக்கொருவி ளக்கே.

5. குழந்தையின் உயிரை வெளவ அரக்கரின் குலத்து தித்த
இழந்ததோர் அன்பால் உன்னைக்கண்டனன் காண்ட லோடும்
குழைந்திடும் உள்ளத் தோடும் கோகுலம் இருந்த வேளை
நுழைந்தனள் அருகில் வந்தே கையினில் எடுத்துக்
கொண்டாள்.

6. ஆயர்தம் குலத்து தித்தோள் அவளையே தடுக்க வில்லை
மேயதோர் அன்பைக் காட்டும் மேன்மைபோல் கையி லள்ளித்
தோய்ந்திடும் முலைப்பால் நல்கத் துணிந்தனள் குருவா யூரில்
ஆய்ந்தவர் போற்று கின்ற அழகனே அரச ரேறே.

7. பயமது ஏதுமின்றி அவள்மடி தன்னி லேறி
பயமதை உண்டல் போல் நஞ்சது பூசப் பெற்ற
பயமதைப் பற்றிக் கொண்டே பருகினாய் உயிரைக் கூட
பயமெலாம் போக்குகின்ற குருவாயூர் பாண்ட வாநீ.

8. முலையுடன் உயிரைச் சேர்த்தே குடித்திட நிலைகு லைந்தே
மலையெனும் உருவைக் கொண்டே மல்லாந்து வீழ்ந்தா ளாகி
அலைவுற்றே வீழ்ந்ததன்மை அவனியைக் கலக்கிற் றன்றே
உலைவிலாய் குருவாயூரா உத்தமா போற்றி போற்றி.

9. கோகுலந் தன்னிலன்று குலைந்தவள் வீழ லோடும்
வாகுற நீயும் அன்னாள் மேல்சென்று தவழ்ந்து செல்ல
வேகமாய்க் கோபி யர்கள் விரைந்துனை அள்ளிக் கொண்டே
சோகமாய் உச்சி மோந்தே துன்பத்தால் துவள லுற்றார்.

10. பெண்கள்தாம் ஒன்று சேர்ந்தே இரட்சைகள் பலவும் செய்தே
கண்களில் ஒற்றிக்கொண்டே கண்ணெனப் போற்ற லானார்
எண்ணரும்கருணை கொண்டே எவரையும் காக்குப்அண்ணால்
திண்ணமாய்ப் பணிந்தேன்உன்னை காத்திட விரைகுவாயே.

## நாற்பத்தேழாவது தசகம்
## கோபியர்கள் பாராட்டு

வேறு

1. வசுதேவர் கூறியசொல் கேட்டவுமே நந்தகோபர்
மனத்தனிலே பயந்தா ராகித்
தசும்பிவழி யன்புடனே உனைக்காணும் எண்ணத்தில்
வந்த போது
பசுமைமிகு மரங்களெலாம் ஒடிந் திடவே கரியதொரு
பூத மாக
விசும்புயர அரக்கியவள் வீழ்ந்திருந்த நிலைகண்டே
வியப்பு கொண்டார்.

2. கோபியர்கள் சொற்கேட்ட உண்மைநிலை தனையறிந்த
நந்த கோபர்
கோபமுடன் மாயமிக்க பூதனையின் உடல தனைக்
கோடாரி கொண்டு வீழ்த்திப்
பாபமுறு மவளுடலை கான கத்தில் வெகுவாக
வீசி நின்றார்
தாபமுற்றோர் வாழ்ந்திடவே தயைபுரியும் குருவாயூர்
தன்னில் வாழ்வோய்.

3. பால்குடித்த அவ்வுடலின் மீதிருந்து அகில்மணந்தான்
கமழ்ந்த போது
மேலுலகும் கீழுலகும் மிகமகிழ்ந்தே போற்றியதால்
மேன்மை கண்டே
சால்புடையோர் தொழும்தேவே குருவாயூர் தனில்உறையும்
தன்மை கொண்டே
நால்வகையாம் பதமருள்வோய் குருவாலூர் தனிமுதல்வா
நான் பணிந்தேன்.

4. என்னுடலைத் தொட்டவர்கள் பெருமின்பம் தொலைவிலலை
உடன் கிடைக்கும்
என்னுமுரைதனை உரைக்கும் நிலைபோல பூதனையின்
உடலம் தன்னில்
துன்னுமொரு நறுமணந்தான் கமழ்ந்திடவே செய்தனையால்
தூயோய் நீதான்
என்னவென உன்பெருமை எடுத்துரைப்பேன் ஏழையேன்
எங்கள் கோவே.

5. பேயென்னும் பூதனையால் இக்குழந்தை பிழைத்திடுதல்
ஆவ துண்டோ
தாயெனவே வந்தவள்தான் உயிர்குடிக்கத் திட்டமிடத்
தகர்த்தெ றிந்தான்
சேயன்று இவன்என்றே சேர்ந்திருந்த ஆயரெலாம்
செறிந்து நின்றே
தாயன்பு கொண்டவராய்த் தழுவினார்காண் தயைமிகுந்தே
தன்மை மேவி.

6. கோகுலந்தான் குறைவின்றி நிறைவுற்றே குலவுகின்ற
உமது பேற்றால்
வியாகுலந்தான் இல்லாமல் இன்பமெலாம் மிகப்பெற்றே
மேன்மையோடு
தோயுமொரு மகிழ்ச்சியுடன் தோன்றிற்றால்
குருவாயூர் தன்னில் மேவும்
தூயவனே உன்தாள்கள் சரணடைந்தேன் துயரின்றிக்
காப்பாய் நீயே.

7. கோபியர்கள் அவரவர்கள் வீடுகளில் உன்புகழைக்
கூறி நின்றார்
தாபத்தால் உனைநினைந்தே தினந்தினமும் காண்பதற்கே
குவிந்து நின்றார்
பாபத்தைப் போக்கிநிதம் பத்தர்களின் துயர்களைந்தே
குருவா யூரில்
தீபத்தின் ஒளிபோலத் திகழ்பவனே திருவடிகள்
வாழ்க வாழ்க!

8. குழந்தையெனைப் பார்த்திட்டான் புன்சிரிப்பை
புதித்திட்டான்
என்று கூறி
குழைமனத்தர் கோபியர்கள் குலவிநின்ற உன்னழகைக்
குழைத்துக் கொண்டார்

எழுந்துவா எனக்கைகள் தமைநீட்டி உனையழைத்தே
யணைத்துக் கொண்டார்
அழுந்துமுன தடியார்கட் கமுதமெனும் குருவாயூர்
அண்ணல் வாழ்க!

9. உம்முடைய திருமேனிதனைத் தொடுமோர் எண்ணமது
உந்த லோடும்
செம்மையுடன் அவரவர்கள் கைகளிலே ஏந்தினர்காண் தாமரையின்
மாலைதன்னில்
செம்மையுற பொய்க்கின்ற வண்டெனவே செயல்பட்டீர்
தீமையின்றி
மும்மையுமே யருள்கின்ற குருவாயூர் வாழ்கின்ற
முதல்வரே நீர்.

10. தன்னுடைய மடியினிலே யசோதையவள் வைத்திருந்தே
முலைப் பாலூட்டி
இன்பநிலை யத்தனையும் அடைந்தனலால் குருவாலூர்
எம்மான் போற்றி
என்னிலையும் எய்திடவே உன்பாதந் தனைநினையும்
அன்பர்க் கெல்லாம்
புன்மையெலாம் அகற்றிடவே அருள் செய்யும்
புனிதத் தேவே.

# நாற்பத்திரண்டாவது தசகம் – சகடாசுர வதம்

## வேறு

1. யசோதையுன் பிறந்த நாளில் யாசகர் தமக்க ளித்து
அசைவறு சமையல் செய்ய ஆவலாய்ச் சென்றா ளாங்கே
இசைவுடன் வண்டி யின்பால் உன்றனைக் கிடத்தி விட்டே
பசையுறும் உணவைச் செய்யும் பாங்கினைச் செய்தாள்
மன்னோ.

2. உன்றனைக் காக்க வென்றே உற்றிடும் சிறார்ப யந்தே
கொன்றிடு மாறெ ழுந்த குரலினால் மரங்க ளெல்லாம்
நின்றிடா வாய் விழுந்த நீளொலி இவற்றா லாங்கே
கன்றிய உளத்தி னோடும் கவலையைக் கொண்டி ருந்தார்

3. கொங்கைகள் குலுங்கு மாறு கோபியர் ஓடி வந்தே
அங்குனைக் கட்டை கள்பால் கண்டனர் மனமகிழ்ந்தே
பொங்கிடும் துயரந் தன்னைப் பொறுத்தன ராகி யாங்கே
தங்கினர் உன்னைச் சூழ்ந்தே சார்ந்திடும் செயலிழந்தே.

4. குழந்தைக்கென் னேர்ந்ததென்றே குறைபட்ட நந்தகோபர்
அழகுறும் நீதான் அந்த யசோதையின் கையின் கண்ணே
குழைந்ததோர் நிலையைக்கண்டே குறைவிலா மனத்தராகி
மழைமுகிலென்று முன்னை மாண்புடன் உச்சி மோந்தார்.

5. இவ்வளவு பெரியதான வண்டிதான் உடைந்ததெங்ஙன்
செவ்விய நிலைதான் என்னே என்றனர் அனைவருந்தான்
கௌவை வாய் மடந்தையார் தாம் கூடினர் பேச லுற்றார்
இவ்வகை ஆயர் பாடி எண்ணியே பார்த்த தன்றே.

6. பாலினுக் கழுத இந்த பாலகன் அருகி ருந்த
ஏலுமோர் வண்டிதன்னை உதைத்தனன் என்றே யந்த
சால்புறும் சிறுவ ரெல்லாம் சாற்றலும் கேட்டோ ரான
நூலிடை மடந்தை யர்தாம் நுவலரும் வியப்புற் றார்கள்.

7. பயத்தினால் சிறுவர் சொல்லும் பயனிலாச் சொற்க ளாலே
பயனிலை யென்றே யந்த பாடியில் உள்ளா ரெல்லாம்
நயனுரை பலவும் சொல்ல பூதனை தன்னைக் கண்டும்
பயமிலா திருந்தா ரங்கே பார்த்தனர் இருந்தோ ரெல்லாம்

8. பவழம்போல் சிவந்த பாதம் அடியுண்டு போனா துண்டே
தவலரும் தாம ரைபோல் கைகள்தான் புண்ணாயிற்றோ
குவளைபோல் கண்ண னுக்கு நிகழ்ந்ததென்என்றே அன்னோர்.
பவளவாய்]திறந்தேசொன்னார்பராவினார் பெரிது மன்னோர்

9. கடவுளின் அருளி னாலே காத்திடப் பெற்றா னான
திடமுறு மைந்தன் தன்னைத் தந்தையும் தழுவிக் கொண்டே
உடலெலாம் புளகம் செய்ய உவகையில் திளைத்தா னாகி
மடமையால் கரத்தில் ஏந்தி மாண்புகள் செய்தா னன்றோ.

10. வண்டியில் மறைந்துவந்த அசுரனின் எலும்புகூடக்
கண்டிடக் கூட வில்லை கடவுளே உன் பால் அன்னோன்
திண்ணமாய்க் கலந்த தாலே அன்னவன் தன்னைக் காணார்
உண்மையை உணரார்க் கென்றும் இலையன்றோ ஞானந்
தானே.

# நாற்பத்து மூன்றாவது தசகம்
# த்ருணாவர்த்த வதம்

1. தாயவள் யசோதை தானும் தன்மடி தன்னில் உன்னை
ஏயுமா றிருத்தி னாளால் கனமது மிக்க போது
தாயவள் வியந்தா ளாகி உன்னையே துதிக்க லுற்றே
மேயதோர் கவலை யாலே தன்பணி செய்ய லுற்றாள்.

2. திக்கெலாம் மூடும் வண்ணம் திரணா வர்த்த தென்ற
அக்கிரமக் காரன் ஆங்கே அளவிலாப் பூழ்தி யாலே
திக்குகள் மறையச் செய்தே உன்றனைத் தூக்கிச் செல்லப்
பக்குவமாக வந்து பலபல உத்தி செய்தான்,

3. பூழ்தியும் மூட லாலே யசோதைதான் உன்னைக் காணாள்
ஆழ்ந்ததோர் துயரத் தாலே அலைந்தனள் பலவி டத்தும்
கேழ்கிளர் செல்வ உன்றன் கீர்த்தியைக் கூறு தற்கே
ஆழ்கடல் உலகில் யாரே முயன்றிட லாவ துண்டே.

4. அரக்கன்தான் உன்னைத் தூக்கி அந்தரத் தேகும் போது
உரத்ததோர் காற்றின் சத்தம் ஓய்ந்திடச் சோர்வுற் றானால்
மரத்தையே துளைத்த மைந்த தாயவள் அழுகை யெங்கும்
பரக்கவே கேட்ட தம்மா பாடியின் பக்க மெல்லாம்.

5. அழுகையைக் கேட்ட போது கோபனும் மற்றை யோரும்
எழுச்சியாய் வந்த போது அரக்கனும் தன்ம னத்தே
அழுத்தமாய் இருந்த தாலே விடஎண்ண நீ விடாது
அழுத்திய கார ணத்தால் அந்தரத்திருந்து வீழ்ந்தான்.

6. கோபர்கள் அசுரன் தானும் பாறைமேல் உடல்நடுங்கிப்
பாபியாய் வீழ்ந்த தன்மை கண்டனர் அவன்தன் மார்பில்
கோபமே சற்றுமின்றி குழந்தையாய்த் தவழ்ந்த உன்னை
கோபியர் கண்ட போது கூறரும் வியப்பு கொண்டார்

7. இறந்தனன் கிடந்தானான அரக்கனின் மார்பின் மீது
சிறந்ததோர் புன்சிரிப்பில் விளையாடும் சீர்மைகண்ட
மறம்திரம் பாத கோபர் மலையிடை மணிகண் டாற்போல
சிறந்திடும் உவகை யோடும் கைகளில் அள்ளி னார்கள்.

8. நந்தனும் கோபர் தாமும் நயமுடன் எடுத்தா ராகிதப்
பந்தமார் அன்பி னோடும் பரிவோடும் உன்னைக் காணத்
தந்தம தன்பி னாலே கோவியர் தூக்க எண்ண
நிந்தனை யற்றா ரான கோபியர் கையில் புக்காய்

9. வணங்கியோர் துன்பம் போக்கும் வல்லவன் கோவிந்தன்தான்
இணங்கியே குழந்தை தன்னை இனிக்காக்க வேண்டு மென்றே
வணங்கினார் உம்மைக் காக்க வல்லவர் எவரு முண்டோ
குணங்குறி கடந்து நின்ற குருவாயூர் அமர்ந்த கோவே.

10. வாதத்தின் உருவாய்வந்த வன்மைசேர் அரக்கன் தன்னைச்
சோதித்தாய் பெருமான்நீயே புன்மையேன் வாதநோயைச்
சேதிக்க நினையா தென்னைச் சோதனை செய்தல் நன்றோ
வேதத்தின் வித்தே என்றன் வேதனை அனைத்தும் தீர்ப்பாய்

## நாற்பத்து நான்காவது தசகம் - நாமகரணம்

1. கிரியையே சற்று மில்லா நினக்கன்று வசுதே வர்தாம்
சரியும் நன் னாளைப் பார்த்து நாமமும் கரணம்செய்ய
உரியவர் சூர்க்க ரென்றே அன்னவர் இடத்தில் சொல்ல
பெரியவர் உன்றன் வீட்டில் பேதற வந்தா ரன்றோ.

2. நந்தகோ பர்தா னங்கே நயமுடன் முனிவர் தம்பால்
இந்த நன் னாளின் கண்ணே இயற்றுக சடங்கை யென்றே
நிந்தையில் முனிவர் தம்பால் வேண்டிட முனிவர் தாமும்
வந்தனை பூசைமற்றும் வகைவகை யாகச் செய்தார்.

3. இச்சொல்லைக் கேட்டதற்கு முனிவர்தாம் இனிமை கூர்ந்து
நச்சியே பலரா மர்க்கும் உனக்குமே சடங்குசெய்து
மெச்சரும் பேறுபெற்ற மேன்மையை என்ன சொல்வேன்
இச்சையே இல்லாய் உன்றன் இன்செயற் குவமை யுண்டோ.

4. ஆயிரம் நாமம் கொண்ட அண்ணலார் இவருக் கின்று
பாயிரமாக நாம கரணந்தான் செய்தல் ஆமோ
ஆய்ந்திலேன் என்றே யன்று அந்தணன் அதனைச் செய்தான்
தோய்வுறு மன்பர்க் கென்றும் தோன்றலாய் நிற்கும் கோவே

5. க்ருஷியெனும் தா துவோடு 'ண' எனும் எழுத்தைக் கூட்டி
பெருமைசேர் ஆனந்தத்தை உலகினுக் கள்ளி வீசி
அருமைசேர் உலகில் பாவம் அகற்றுவோன் என்றே எண்ணிப்
பெருமைகள் நல்கும் 'க்ருஷ்ணா' எனும் பெயர் சூட்டினானே.

6. அவ்விடை தாரிக்க னென்ற முனிவரன் உன்ற னுக்கு
செவ்விய வாசு தேவன் என்றொரு பெயரைச் சூட்டி
வவ்விய பெருமை மிக்க அண்ணனுக் கவ்வி டத்தே
செவ்விய ராம னென்றோர் பெயரையும் செப்பி னானால்.

7. உன்னிடம் அன்பு செய்வோர் உன்னத நிலையைக் காண்பர்
உன்னிடம் பகைமை கொண்டோர் எண்ணரும் துயரம்
கொள்வர்
என்றந்த முனிவன் அந்நாள் நந்தன்பால் நவின்றா னாகிப்
துன்றிய முறுவலோடும் தோன்றியே நின்றான் மாதோ.

8. அசுரர்கள் பலரை வெல்வான் உறவினர்க் கருளைச் செய்வான்
விசும்புயர்புகழை இந்த வியனுல கதுதான் கேட்கும்
சிசுவென எண்ண வேண்டா கீர்த்திகள் சொல்லப் போமோ,
வசுதேவர் வரங்கள் பெற்றார் என்றனன் முனிவ னாங்கே.

9. துன்பங்க ளனைத்தும் நீங்கும் நம்பியே இருங்கள் நீவிர்
இன்பங்கள் யாவும் சேர இன்னவன் வழிவ குப்பான்
என்னுமோர் உண்மை சொன்னார் தன்னை யாவர்க்கும்
முனிவர்
என்னுடை துன்பம்தீர்க்கும் இன்றவனே என்றார் மன்னோ.

10. முனிவர்தான் சென்ற பின்பு மூத்தவர் அனைவ ருந்தான்
கனிவுடன் இருந்த தன்மை கண்கொளாக் காட்சியாகும்
துணிவெலாம் நீங்கப் பெற்றே துலக்கமாய் இலங்கினார்கள்
கனியெனக் கையிலேந்திக் காளையைப் புகழ்ந்தார்மன்னோ.

# நாற்பத்தைந்தாவது தசகம்
# விளையாட்டுப்பிள்ளை

வேறு

1 . பலராமர் தம்முடனே சேர்ந்திருந்த பாங்குடைய கிருஷ்ண
நீதான்
இலகுமுங்கள் வீட்டினிலே தவழ்ந்திட்ட இனிமைதனை என்ன
சொல்வேன்
குலமெல்லாம் போற்றும்வகை குறைகளைந்து மாந்தருக்கே
நிறைதலாற்றி
நலமலிய நின்றனையால் உன்பெருமை என்னாலே
நவிலப்போமோ,

2. கொஞ்சியே பேசுங்கால் குலவிடும்நும் பல்லழகு கூறப்போமோ
குஞ்சமாய்த் தலைமுடியும் முகத்தில் விழும் அழகதுவும்
கூறப்போமோ
எஞ்சலிலா உள்ளங்கை காலழகும் உரைக்கப்போமோ
நெஞ்சமெலாம் கவரவரும் கையழகை எப்போதும்
நினைக்கப்போமோ.

3. அழகினையே காணுமொரு ஆவலினால் பலபேர்கள்
அணைந்தபோது
பழகலுறும் புன்சிரிப்பால் பரவசத்தை மேன்மேலும் அவர்பால்
மூட்டி
இழைந்தோடும் மழலையினால் எல்லோரும் இன்பத்தை
யெய்தச் செய்தே
குழந்தையுளக் கோலங்கள் செய்திட்ட நின்பெருமை
கூறப்போமோ.

4. தளர்நடையால் தள்ளாடித் தள்ளாடி வீழ்ந்திடவும்
வானிலுள்ளோர்
உளமார மகிழ்வெய்தி மலர்மாரி தனைப் பெய்தே உவகைகூர
அளவில்லா மகிழ்வுடனே தாய்மார்கள் அருகணைத்தே
அன்புகூர
இளகிடுமோர் மனங் கொண்டோர் இன்புறவே
இருந்தாயன்றோ.

5. பெருத்தமுலைதனில் சுரந்த பாலதனை யசோதையவள்
உனக்கே ஊட்ட
வருத்தமின்றி இடையவளாம் வேடத்தைப் புனைந்தனையால்
வல்லவா நீ
பொருத்தமுற யசோதையவள் புன்சிரிப்பால் பூரிப்பை
யெய்திநின்றாள்
கருத்தமுகில் வண்ணமுறும் மாயவனே உன்பெருமை
கருதற்பாற்றோ.

6. நடந்திடவே தொடங்கிடலும் நந்தகோபன் முதல்
நவிலொணாதோர்
திடமுடனே உன்னுடைய விளையாடல் அத்தனையும் திரும்பி
நோக்கி
உடலெல்லாம் பூரிக்க உவகையெனும் கடலிடையே உவந்து
நின்றார்
தொடுவானம் வரையுயர்ந்த தோற்றமுறும் நெடியவனே
துயரம் தீர்ப்பாய்.

7. பலராமனுடன் நீதான் எவ்விடத்துச் சென்றாலும்
பரவசத்தால் மயக்கம் கொண்டே
இலந்தோறும் கோபியர்கள் தம்தொழிலை மறந்தவராய்
உன்றனையே நோக்கிநின்றார்
பலஉயிரும் பலஉலகும் படைத்தளிக்கும் பரம்பொருளே
உன்றன் தன்மை
உலகிடையே எவராலும் உணர்ந்திடவே ஆவதுண்டோ
உரைப்பாய் சற்றே.

8. கோபியர்கள் தருகின்ற வெண்ணையுடன் விளையாட்டில்
புத்தி கொண்டே
மாபெரிய மகிழ்வுடனே பாடல்களை முணுமுணுத்தும்
மகிழ்ச்சி மேவி
கோபியர்கள் தருகின்ற நெய்தின்றும் பால் குடித்தும்
குலவி நின்றாய்
தாபமுள்ளோர் அதுதணிய வழிபாடுதனைச் செய்வர்
தகுதி மிக்கோய்.

9. மாவலிபால் கையேந்தி மண்கேட்ட மாண்புபோல
கோவியர்பால் கையேந்தல் என்றதொரு கொள்கைபோல
ஆவலுடன் தயிர் வெண்ணை அளைந்துண்ட உமது தன்மை
சேவையுளம் படைத்தவர்க்கே தெரிவதன்றி அறியப்போமோ.

10. கோகுலத்தில் வெண்ணெய்தனைத் திருடியதால் கோவியர்கள்
வியாகுலந்தான் அடையவிலை அவருளத்தைத் திருடிவிட்டாய்
வியாகுலத்தால் உழல்கின்ற என்றன்னைக் காக்கவாராய்
சாகும்வரை துணைநிற்க வேண்டுகிறேன் சார்புநீயே.

11. மரக்கிளையில் சந்திரன்தான் தோன்றிடவும் அதனைநீ
பழமென்றெண்ணி
உருக்கமுடன் பறித்தளிக்க வேண்டுதலும் அதுஉன்றன்
கையில் சேர
பெருக்கெடுக்கும் ஒளியினையே உருவமெனப் பெற்ற உன்பால்
உருக்கமுடன் மதிவந்து கலந்திடுதல் உன்னுங்கால் வியப்பே
இல்லை.

12. உன்தந்தை மிகவியந்தே உள்ளத்தில் சிந்திக்க மகிழ்ச்சியிலே
மூழ்கடித்து
நின்றனது தெய்வீக நிலை தன்னை நிலைநாட்டி நீள்விழிக்கண்
உன்றனது கருணையினைக் காட்டினையால் குருவாயூர்
கொற்றவா நீ
என்றன்னை ஈடேற்றும் வகை செய்தல் உன்கடமை
ஏத்துகின்றேன்.

## நாற்பத்தாறாவது தசகம் – மண்ணையும் விண்ணையும் தின்ற வாய்

வேறு

மடியினில் யசோதை தானும் மாண்புறக் கிடத்திக்கொண்டு
திடமுடன் பாலை யூட்டத் திறந்திடும் உனது வாயில்
அடல்மிகும் உலகந் தன்னை அழகுறக் காட்டி வைத்த
திடமிகும் உனது தன்மை செப்பிடற் காவ தொன்றோ.

உன்னுடை நண்பர் தாமும் உற்றிடு கனிகள் சேர்க்க
நின்னுடை வாயில் போட்டு மென்றனை அந்த வேளை
நின்னுடை நண்ப ரெல்லாம் யசோதைபால் "மண்ணைத் தின்றான்
நின்னுடை மைந்த"னென்றே நீளுரை நிகழ்த்தினரால்.

ஐம்பூதம் தன்னை ஊழி அடைவினில் உண்ட நீதான்
தெம்புடன் மண்ணை உண்ட திறங்கண்ட உன்றன் அன்னை
இம்பரில் மண்ணுண்டாலே ஏதுநோய் வருமோ என்று
பம்பியே வருத்த முற்றாள் பரிதவித் திருந்தாள் மன்னோ.

மண்ணையா உண்டா யென்று மாண்புறும் அன்னை கேட்ட
உண்மையே யல்ல வென்று புன்சிரிப் புதிர்த்து நின்றாய்
கண்ணனே உனது லீலை உலகினர் காண லுண்டோ
விண்ணுடன் மண்ணை யுண்ட வித்தக குருவாயூரா.

அனைவரும் சொல்லும்போது அடம்பிடித் திடுகின் றாய்நீ
புனைந்துரை கூறவேண்டா என்றவள் புகன்ற போது
வனைவுறும் கமலம் போன்ற வாயினைத் திறந்து நின்றாய்
மனையெலாம் வாழச் செய்யும் மாண்புசால் குருவாயூரா.

6. சிறிதள வேனும் மண்தான் சிரிப்புறும் வாயின் கண்ணே
உறுமென யசோதை எண்ண மண்ணுக அதனோ டுற்ற
மறுவிலா உலக முற்றும் மாண்புறக் காட்டி நின்றாய்
பெறுகின்ற பேரெல் லாமும் பிறழ்வின்றி நல்கும் தேவே.

7. வனமுடன் கடலா காயம் பாதாள உலகம் தானும்
நினைவுறு மனிதர் தாமும் அசுரரும் தேவர் தாமும்
புனைவுறும் உன்றன் வாயில் தோன்றினார் புகழின் குன்றே
நினைப்பவர் நினைத்த வற்றை நிறைவேற்றும் நீதி தேவா.

8. பாற்கடற் கண்ணே உள்ள பரந்தாமன் வடிவ மாக
போற்றிடும் வைகுண் டத்தில் புரந்திடுங் பெருமா னாக
நாற்றிசை போற்றும் நல்ல கண்ணனின் வடிவ மாக
வேற்றுமை வடிவம் தன்னை யசோதைதான் அன்று கண்டாள்,

9. வாயின்கண் உலகங் கண்டாள் வாயினுள் பெருமையோடும்
தாயவள் முகம் மற்றொன்றும் வாயுமே கண்டாள் ஆங்கே
மேய உன்நிலையைச் சொல்ல மேதினிக் காவ தில்லை
தாயினும் அன்பு சான்ற தயைமிகும் குருவா யூரா.

10. தத்துவ ஞானம் பெற்ற தாயவள் அன்பு கொண்டே
புத்திர வாஞ்சை யாலே உச்சியை மோந்த போது
நத்தியே அவள்பால் சென்றே ''பால்கொடு'' என்றா யன்றோ
புத்தியில் மிக்கோர் போற்றும் புங்கவா குருவாயூரா.

# நாற்பத்தேழாவது தசகம் - உரலில் கட்டுப்படல்

வேறு

1. தயிர்கடை யசோதையின் மடியி லேறியே
பயமுண எண்ணியே தயிர் கடைவதை
நயமுடன் நிறுத்தியே முலையில் வாய்வைத்தே
துயரற உண்டனை தூய வள்ளலே.

2. தாமரை மொட்டெனும் தாயின் முலையிலே
சேமமாய் உண்டிடத் தாயும் காய்ந்திடும்
காமுறும் பால்தனை இறக்கி வைக்கவே
நேமமாய்ச் சென்றனள் நேர்மை தேவனே.

3. நீசெயும் குறும்பினால் தயிர் கடைந்திடும்
நேசமார் சட்டியும் உடைந்து போனதே
பாசமார் பத்தர்கள் பரவ அன்னவர்
நீசமார் குணங்களை நீக்கும் தேவனே.

4. சட்டிதான் உடைந்திடும் சத்தம் கேட்டதும்
மெத்தவே தாயவள் விரைந்து வந்தனள்
இத்தனை நிகழ்ந்ததும் தயிரைக் கண்டனள்
உத்தமன் உன்னுடன் சட்டி கண்டனள்.

5. வேதங்கள் தேடரும் விந்தைசால் உனை
வேதனை கொண்டவள் தேடும் வேளையில்
பேதமே இன்றியே உரியின் மீதினில்
சேதமில் வெண்ணெயைப் பூனைக் கூட்டினை.

6. தாமரை எனமலர் முகம்கொள் உன்னையே
சேமமாய் இருந்திடச் செய்யும் எண்ணத்தால்
தோமறு உள்ளத்தில் யசோதை பற்றியே
ஏமமார் கயிற்றினில் கட்ட எண்ணினாள்.

7. நல்லவர் உறவெனும் கயிற்றில் பிணித்திடும்
சொல்லரும் பெருமைசால் உன்னைக் கட்டிட
வல்லதோர் கயிற்றையே முடியும் வேளையில்
எல்லையில் இடைவெளி இருக்கக் கண்டனள்.

8. உடலெலாம் சோர்ந்திட யசோதை தானுமே
திடமிலா உளமுடன் செறிவு நீங்கிட
அடலுறும் நீயுமே அதற்கி சைந்தனை
உடலுயிர் காத்திடும் உலக நாயக.

9. இவ்விடம் விட்டுநீ ஏக எண்ணிடேல்
செவ்விதின் இருந்திடு கென்று செல்லலும்
அவ்விடை உரலிலே அமைந்து நின்றுநீ
கொவ்வைவாய் தன்னிலே வெண்ணெய் உண்டனை.

10. பாசமுற் றவர்உனைப் பரவிப் போற்றுவர்
பாசத்தில் எங்ஙனம் கட்டுண் டிருந்தனை
நேசமே கொண்டவர் நினைவில் நின்றிடும்
பேசரும் தொண்டரின் பிணி யகற்றுவோய்.

## நாற்பத்தெட்டாவது தசகம் – மரமாயிருந்த யட்சர்கள் விடுதலை

வேறு

1. தேவர்கள் பணிந்துநின்றே தினந்தினம் துதிக்கும்நீதான்
ஆவலாய் உரலின் கண்ணே அலைந்திடு கின்ற காலை
ஓவலில் உவகை யோடு மருதங்கள் இரண்டைக் கண்டாய்
மேவிடு மன்பர்க் கென்றும் மேன்மைகள் நல்கும்தேவே.

2. நளகூபன் மணிக்கிரீ டப்பேர் குபேரரின் மைந்தர்தாமும்
இளகலில் மனத்தா ராகி ஈசனை இகழ்ந்தா ராகி
உளமதில் உம்மை எண்ணா உலுத்தராய்த் திரித லுற்றார்
அளவிலாப் பெருமை கொண்ட அண்ணலே குருவா யூரா.

3. உலகிடைப் பாவ மெல்லாம் உருவது பெற்ற தேபோல்
கலகங்கள் தீமை யெல்லாம் காலமும் செய்து கொண்டே
குலவியே கங்கை தன்னில் குளித்திட நார தர்தான்
அலகிலாப் பாவம் செய்த அன்னவர் தம்மைக் கண்டார்.

4. நாரதர் தம்மைக் கண்டே மனைவியர் நாணத் தோடி
நேரெதிர் நிற்கலாற்றார் ஆடைகள் உடுத்தலானர்
போரெதிர் புத்தி கொண்ட புல்லர்தாம் மதித்தாரில்லை
நாரதர் சினத்தி னோடு சபித்தனர் நன்மைநீங்க.

5. நீண்டநாள் மரங்களாக நின்றுநீர் நார ணன்பால்
பூண்டதோர் பத்தியாலே புனிதத்தை யடைகவென்றே
மாண்புடை நார தர்தான் மற்றவர்க் குரைத்தா ராக
நீண்டநாள் கோகு லத்தே மரமென நின்றார் மாதோ.

6. இவ்வகை மரங்கள் நிற்க இடைஉரல் சென்றகாலை
செவ்விய நேரம் வந்து சேர்ந்ததால் மரங்கள்தாமும்
அவ்வியமின்றி யாங்கே அடிசாய்ந்தே வீழ்ந்து விட்ட
அவ்விய மற்றோர் போற்றும் அண்ணலே குருவாயூரா.

7. மரங்கள்தாம் இரண்டு சாய்ந்தே மாநிலம் தன்னில் வீழ
உரங்கொளும் உள்ளத் தோடு இயக்கர்கள் இருவர் தோன்றி
வரங்களை நல்கு கென்று வாழ்த்துக்கள் பலவும் சொன்னார்
பெருமைசேர் தொண்டர் போற்றும் குருவாயூர் வாழும்
கோவே

8. சிவனிடம் அன்பு கொண்ட சீடராய் இருந்த போதும்
பவமறும் நாரதர் தாம் போதித்த தன்மை யாலே
அவமற உம்மைப் போற்றி அளவிலாப் பேறுபெற்றார்
துவளுறு மனத்தால் போற்றும் துதியெலாம் உன்னைச் சேரும்.

9. மரங்கள்தாம் முறிந்த தன்மை கண்டதும் ஆயர் யாரும்
பெருதுயர் உற்றா ராகிக் கூடிட அவ்வி டத்தே
உருவமர் நந்தகோபன் யசோதையும் கண்டா ராகி
வெருவிடும் கட்ட விழ்த்தே விட்டனர் அவ்வி டத்தே.

10. குழந்தைதான் மரங்கள் தம்பால் சிக்கிய நிலைமை கண்டே
குழைந்திடும் மனத்த ராகி நந்தனோ டாயர் யாரும்
இழைந்ததோர் அன்பால் அன்று ஆண்டவன் தன்னைப்
போற்றி
இழந்திடு மகிழ்ச்சி தன்னைத் திரும்பவும் எய்தி னாரே.

## நாற்பத் தொன்பதாவது தசகம் - பிருந்தாவன மேகுதல்

1. கோபர்கள் தீநி மித்தம் கண்டனர் அவ்வி டத்தில்
சோபித்த வில்லை யென்றே வேறிடம் தேடிச் செல்ல
தாபமுற் றார்க ளானார், தவித்தனர் ஆவ லோடு
பாபிகள் காண லாகப் பரம்பொருள் நீயே யன்றோ.

2. உம்முடை யருளா லாங்கே உபநந்தன் என்ற கோபன்
செம்மைசேர் இவ்வி டத்தின் மேற்கினில் பிருந்தை யென்ற
எம்மையும் அருளு கின்ற வனமொன்று உண்டென் றானால்
எம்மையாள் இறையே உன்றன் ஏற்றத்தை என்ன
சொல்வேன்.

3. நந்தனே முதலா னோர்கள் பிருகத் வனம் தன்னைவிட்டே
நந்தலில் உமது தாயும் வண்டியில் வந்தா ளாக
சிந்தையில் தெளிவு மிக்கே சென்றிட இசைந்திட் டார்கள்
நந்தன வனமாம் பிருந்த வனந்தனை நோக்கி யாங்கே.

4. வண்டியின் சத்தத்தோடு பசுக்களின் குளம்பி னோசை
கண்டனர் கேட்டா ராகிக் கவலையைத் தாம்ம றந்தே
கொண்டனர் இன்ப மாங்கே கூறிடும் மழலை கேட்டே
கண்டெனும் மொழிப டைத்த கோபியர் கவலை தீர்ந்தார்.

5. மலர்களால் மாண்பு பெற்றே மரங்களால் சிறப்புபெற்று
இலங்கிடும் புற்கள்தாமும் மரகதப் பச்சை காட்ட
துலங்கிடும் பிருந்தை யென்னும் தூயதோர் இடத்தைக்
கண்டே
அலங்கல் சேர் மார்ப நீதான் அடைந்ததோர் மகிழ்ச்சி
யென்னே.

6. அவரவர்க் கமைந்த வீட்டில் கோபியர் ஆவலோடும்
கவலையே இல்லா ராகிக் காலத்தைக் கழித்த போது
நவிலரும் நண்ப ரோடும் நாற்புறம் சுற்றிப் பார்த்தே
தவலரும் களிப்பி னோடு தனிமையைத் தவிர்த்தீ ரன்றோ.

7. அன்னத்தின் குரலை நல்ல பேச்செனக் கொண்ட தான
வன்னமார் தாம ரைப்பூ வாகுறு நகையாய்க் கொண்ட
நன்னராம் நீரினோடு காளிந்தி எனும்பேர் பெற்ற
மென்மையாம் யமுனை யென்னும் பெண்ணை நீர்
கண்டீரன்றோ.

8. மயில்களின் அகவ லோடும் மாண்புறும் அரத னங்கள்
பயில்வுறும் ஒளியும்சேர்ந்து பாரெலாம் பரிம ளிக்க
அயனுலகணுகல் போன்ற கோவர்த்தன கிரியைக் கண்டே
பயனெலாம் நிறைந்த தான மலையெனப் போற்றி னீர்காண்.

9. கோபர்கள் உம்மைச் சூழப் பிருந்தையாம் வனத்தின் கண்ணே
தாபமாய் நின்றீர் நும்மைச் சார்ந்தவ னாகி யந்த
சோபைசேர் யமுனை தானும் சுற்றிடக் கண்டீ ரன்றோ
கோபமே இல்லார் போற்றும் குருவாயூர்க் குடிகொண்
டோனே.

10. பலராமன் துணையாய் நிற்கப் பசுக்களை மேய்த்துக்
கொண்டே
திலமேனும் கவலையின்றித் திரிந்தனர் பிருந்தைதன்னில்
பலநோயால் வாடுமென்றன் பரிபவம் தன்னைநீக்கி
இலகிடக் காக்க வேண்டும் இறைவனே போற்றி போற்றி!

# ஐம்பதாவது தசகம் - வத்ஸாஸுர வதம்

1. வண்டினம் முரலுகின்ற வாகார்ந்த சோலை தன்னில்
கண்டெனும் அண்ண னோடும் காணரும் சிறுவ ரோடும்
உண்டெனும் அன்பினாலே உயர்குழல் தன்னை ஊதி
எண்திசை போற்று மாறு இருந்தனிர் பெரும வாழ்க!

2. திருமகள் கேள்வ உன்ற திருவடி பட்ட தாலே
பெருமைகள் யாவு மந்த வனந்தனில் சேர்ந்த வன்றோ
அருமையாம் செல்வ மெல்லாம் அவ்விடை கொழித்தல்
கண்டார்
இருமையும் இன்பம் நல்கும் என்னருள் குருவா யூர.

3. காட்டிடை ஒளியைவீசும் பசும்புல்சேர் தரைகள் தம்மில்
நாட்டமார் யமுனை யாற்றின் கரைதனில் நல்லோர் ஏத்தும்
சேட்டமார்கோ வர்த்த னத்தில் குழலினை ஊதிக் கொண்டே
வாட்டமே காண நீரும் அரக்கனாம் கன்றைக் கண்டீர்.

4. வாலினை வேகமாகச் சுழற்றியே கழுத்தை நீட்டி
மேல்வரும் அரக்கன் தன்னை மிகவுமே கூர்ந்து நோக்கிக்
கால்களைப் பற்றி ஆங்கோர் மரத்தினில் மோதிவிட்டு
ஏலுமோர் உயிரைப் போக்கி யேற்றமாய் உயர்ந்து நின்றீர்.

5. அரக்கன்தான் அலறிவீழ அவ்வனம் அதிர்ந்த தன்றே
இரக்கமே உருவாய்நின்ற தேவர்கள் மலர் சொறிந்தார்
உருக்கமாய்ப் பகையை மாய்க்கும் உத்திகள் பலப டைத்தீர்
நெருக்கமாம் தொண்டர்க்கென்றும் நிலையான வரம
ருள்வோய்.

6. மலர்மழை பொழிதல் கண்டே மற்றவர் வியந்து கேட்க
இலைஉதிர் மரங்கள் தாமும் ஈன்றன இவற்றை யென்றே
கலைநிறை நகைப்பி னோடு கவினுறப் பகர்ந்தீ ரன்றோ
உலைவிலாப் பெருமைபெற்ற குருவாயூர் உறையும் கோவே.

7. தாகத்தின் கடுமையாலே யமுனையை யடைந்த போது
மேகத்தின் மண்டலத்தை மூடல்போல் மேலெழுந்து
சோகத்தை மிகவ ளர்க்கும் பகனெனும் கொடியன் வன்தன்
வேகமார் கொடுமைதன்னை விரைவினில் காணலுற்றீர்.

8. கோபர்கள் நீர ருந்தச் சென்றதால் உடன் சென் றீரால்
பாபத்தைச் செய்த அந்த பகன்வந்தே உமை விழுங்கி
ஆபத்தை யறியா னாகிய யுமைத்தின்ன அலகு தன்னைக்
கோபத்தால் பிளந்து கொன்றீர் குருவாயூ ரமர்ந்த கோவே

9. இறந்த சோதரி பூதனைக்கோ அல்லது தம்பியான
சிறந்தவர் தூற்றும் தம்பி திருமேனி காண்ப தற்கோ
இறந்திடும் பகன்தான் அந்த யமலோகம் தனை யடைந்தான்
உறைந்திடும் மலர்ம ழைக்கண் உம்மிடம் சேர்ந்தீ ரன்றோ.

10. குருவாயூர் கோயில் கொண்ட கொற்றவ நீதா னன்று
உருவளர் கோபி யர்கள் கோபர்கள் பலரும் போற்ற
திருவளர் மார்ப னாகத் திரும்பினை இனிமை யோடு
கருவினில் திருவை யுற்றோர் கண்டுணர் பெருமா னன்றே

## ஐம்பத்தோராவது தசகம் – அகாசுர வதம்

1. கோகுலச் சிறுவ ரோடு காட்டிடை உணவை யுண்ண
ஏகினை கட்டுச் சோற்றை ஏந்தியே காலை வேளை
நாகுகள் உன்னைச்சூழ நளினமார் நடையும் போட்டு
வாகுயர் கண்ணா! என்றும் வரமருள் குருவாயூரா.

2. நீர்சென்ற நேரந் தன்னில் நும்முடைப் பாத தூளி
நேர்நின்ற முனிவர்க் கெல்லாம் நீறுபோல் தோன்றிற் றன்றோ
கார்சென்ற வண்ண மென்னக் கானகம் நோக்கிச் சென்றீர்
வேறொன்றும் சொல்வ தற்கே வார்த்தைகள் விள்ள வில்லை.

3. சிறுவர்கள் கூட்டத் தோடு சேர்ந்துநீர் புல்த ரைக்கண்
மறுவறு பசுக்கூட் டத்தை மேய்த்தனிர் செல்லும் போது
வெறுப்புறும் அகாசு ரன்தான் மலைப்பாம்பின் வடிவம் கொண்டு
சிறுவன்நின் வழிம றுத்தே கிடந்தனன் அற்றை நாளில்

4. காட்டிடை விளையா டற்கே கருதிய சிறுவர் எல்லாம்
மேட்டிமை யான பாம்பை மலையென மேலே யேறிச்
சேட்டைகள் செய்தே வாயைக் குகையென உள்ளே சென்றார்
நாட்டிடை வணங்கு கின்றோர் நலிவெலாம் நீக்கும் நண்ப.

5. மலைப்பாம்பின் வயிற்றுக் குள்ளே சென்றவர் வெந்துபோக
அலைப்புண்ட அவர்கள் தம்மை அன்புடன் காக்க வேண்டி
கலையெலாம் படைத்த நீவிர் கவலையே யின்றி யந்த
மலைப்பாம்பின் வயிற்றுக் குள்ளே மாண்புடன் சென்றீ ரன்றே.

6. பாம்பின்தன் கழுத்தின் கண்ணே பரம்பொருள் நீதானன்று
ஆந்துணை யாக நின்று அளவறு வடிவம் கொண்டே
தேந்துணர் துளவ மாலை துலங்கிடக் கோபி யர்கள்
சாந்தமார் பசுக்கூட் டங்கள் தம்மைநீ காத்தாய் அன்றோ.

7. கொடுமைசேர் அரக்கன் தன்பால் ஒளிப்பிழம் பொன்று
தோன்றி
நெடிதுநீ வந்து சேரும் நேரந்தான் வந்த போது
உடலிடைப் புகுந்த காட்சி உம்பர்தாம் கண்ட போது
திடமுடன் உன்னைப் போற்றித் தீனமாய்த் தொழுதெ
ழுந்தார்.

8. அயனுடன் அனைவ ருந்தான் அந்நிலை கண்டு நிற்கப்
பயனுறு வகையால் அந்தச் சிறுவரின் கூட்டத் தோடு
வியனுறும் உணவ ருந்த விரைந்தனிர் கானின் கண்ணே
துயரெலாம் துடைக்கும் தூய குருவாயூர் தேவ தேவே.

9. கொம்பொடு குழலூதி கோவர்கள் மகிழும் வண்ணம்
தெம்பொடும் உணவை யுண்ணத் தேவர்கள் களித்து நின்றார்
நண்பனே குருவா யூரின் நாதனே உனைப் பணிந்தேன்
வெம்பவில் வாழ்வை த்தந்து வேதனைதவிர்ப்பாய் அண்ணால்

10. கோபர்கள் உடனி ருந்து உண்டிடும் உணவு தானும்
தாபமாய் முனிவர் நல்கும் அவியினும் சிறந்த தன்றோ
பாபமே புரிந்தோர்க் கெல்லாம் பரிவுடன் வரம ளிக்கும்
கோபியர் புகழும் தேவே குருவாயூர் வாழும் தேவே.

## ஐம்பத்திரண்டாவது தசகம் – பிரமாவின்
## வத்சாப ஹாரம்

1. மற்றைய அவதாரங்கள் தம்மிடைக் காண லாகா
கொற்றமார் செல்வந்தன்னை அகாசுர மோட்சந் தன்னில்
உற்றிட நோக்கிக் கொண்ட பிரமனும் மாயை தன்னால்
பெற்றங்கள் மறைந்து போகும் வெற்றியைக் கண்டான்
மன்னோ.

2. கன்றுகள் காணா ராகிக் கோபர்கள் மயங்குங் காலை
கன்றுகள் மீட்கும் எண்ணம் கைக்கொண்டே உண்டி ருந்த
நன்றெனும் உணவில் பாதி விட்டனர் நடந்த போது
அன்றந்த அயன்தான் ஆயர் சிறுவரை மறைத்தா னன்றே.

3. மாயையால் ஆயர்தம்மைக் கன்றுகள் கூட்ட மாக்கி
ஆயர்கள் ஊதுகின்ற குழலுடன் கோலும் தாங்கி
நேயமார் கான கத்தே நிமிர்ந்தனர் சுற்றி மாலை
போயபின் கோகுலத்தில் புகுந்தினி திருந்தீர் மன்னோ.

4. தாயர்தாம் கண்ட போது தங்கண்கள் பனிப்பா ராகி
நேயமே மிகுந்து நின்று நீர்வர வேற்கப் பட்டீர்
தோயுமோர் அன்பி னுக்கே எல்லையாம் தோற்ற முண்டோ
ஆயர்கள் மகிழ்ச்சிக் கன்று அளவொன்றும் கூற லுண்டோ.

5. வேறொரு ஜீவன்தன்னைப் பிள்ளையாய் விளக்கப் பெற்றார்
மாறிலா உம்மைத் தங்கள் மைந்தராய்ப் பெற்ற போது
வேறொன்று சொல்வ துண்டோ விந்தைகாண் குருவா யூரா
தேறரும் வலிமை கொண்டோய் தேவரின் தேவ தேவே.

6. கணம்கணம் உம்மைக் கண்டே கண்களால் பருகி நின்றார்
மணங்கமழ் துளவ மார்பா மற்றென்ன சொல்லப் போகும்
இணங்குறும் பலரா மன்தான் நீண்டநாள் கழித்த பின்பே
உணர்ந்தனன் உங்கட்குள்ளே வேற்றுமை எத்த னைகாண்.

7. ஆண்டின திறுதிகாறும் அவரவர் தமது தோற்றம்
மீண்டுமோர் நிலையு றாமல் நின்றதோர் மேன்மை கண்டே
யாண்டுமாய் நின்ற பிரம்மன் எண்ணத்தில் மயங்க லோடும்
பூண்டிடும் அணிகள் தந்து புகழ்பெற நின்றீ ரன்றோ.

8. ஒவ்வொரு வடிவந் தானும் ஓதரும் திரும கள்பால்
வவ்விய அன்பி னோடு வாழ்கின்ற வடிவ மாக
செவ்விய சேடன் மீதில் முனிவர்கள் தொழுது போற்ற
அவ்வியம் நீக்கி வாழும் வடிவமாய்ப் பிரமன் கண்டான்.

9 நாரணன் தோற்ற மெங்கும் நளினமாய்த் தோன்றக் கண்டே
காரணங் காணா னாகிப் பிரமனும் கலங்கும் போதில்
பூரணமானோய் உந்தன் உணவினில் பாதியுண்ட
நாரண வடிவி னோடு நன்மைகள் நல்க நின்றாய்.

10. கருவந்தான் அழிந்தா னாகிக் கருதரும் பத்தி பூண்ட
திருநிறை மார்பன் நின்னைத் தினந்தினம் துதிக்க லானான்
பெருமைசால் சிறுவ ரோடும் கன்றுகள் பலவற் றோடும்
அருமைசால் விடு சென்றீர் குருவாயூர் அண்ணலேநீர்.

## ஐம்பத்து மூன்றாவது தசகம் - தேனுகாசுர வதம்

1. ஐந்தாவ தகவை தன்னைத் தாண்டிய பின்னர் நீயும்
மந்தையாய்க் கன்று மேய்க்கும் மாண்பினை விட்டு விட்டே
பந்தமாய்க் கோக்கள் மேய்க்கும் பக்குவந் தன்னைப் பெற்றாய்
எந்தமை யாளு கின்ற ஏந்தலே குருவா யூரா

2. அந்த நல் வயது தன்னில் அன்புடன் கோக்கள் தம்மைப்
பந்தமாய் மேய்த்த தன்மை பாரிடை மிகப் பொ ருத்தம்
பந்தனை யற்றுநின்ற பார்புகழ் குருவாயூரா
நிந்தனை யற்றோர்க் கென்றும் நீள்கதி யருளும் கோவே.

3. பலராமன் தன்னோ டன்று வனத்திடை திரிந்த காலை
இலைமலர் சூழ்ந்தி ருந்த வனந்தனில் அழகைக் கண்டே
மலர்முகத் தாமன் சொல்லால் வனத்திடை மகிழ்ச்சி பொங்க
புலமிலான் தேனு கன்தான் புக்கதோர் இடத்தைக் கண்டாய்

4. உன்சொல்லைக் கேட்ட போது பலராமன் உலுக்கித் தள்ள
புன்மைசேர் பனையின் காய்கள் புலபுல என்ன வீழ
அன்னதைக் கண்ட தேனு அசுரன்தான் ஆங்கண் வந்தே
புன்மையாம் உள்ளத் தோடு புகுந்தான் மந்தை யுள்ளே.

5. தேனுவைக் காக்கும் யானும் தேனுகாசுரனைக் கொல்லல்
ஞானமே யல்ல வென்றே நன்றாகச் சிந்தை செய்தே
தேனுகன் தன்னைக் கொல்ல அண்ணனை ஏவி விட்டாய்
மோனமார் முதலே உன்றன் முழுமையை என்ன சொல்வேன்.

6. நரிவேடம் தாங்கி நின்ற நண்பர்கள் கூட்டத் தோடு
உருவேதும் தோன்றா வண்ணம் உற்றதோர் மரத்தில் தாக்கி
திரமான பலரா மன்தான் துணைநிற்கச் செயல் புரிந்தாய்
வருவார்கள் வணங்கு கின்ற குருவாயூர் கொண்டலே நீ.

---

(கோ-பசு, உலகம்)

7. சம்புகம் என்ற பேரைச் சார்ந்திடும் நரிக்கூட் டத்தை
வெம்பலில் உள்ளத்தோடு வென்றதோர் வேளைதன்னில்
தெம்புறு குபேரன் தானும் தன்பெயர் அதுவே யாகப்
பம்பிய வேதந் தன்னில் அப்பெயர் தனைம றைத்தான்.

8. தேவர்கள் உமது தோற்ற மேன்மையைப் புகழ்ந்தா ராகி
மேவிடும் மகிழ்ச்சிகூர அதுஉண்மை தின்பதற்கு
ஒவிலாப் பழங்களுண்டு உண்டிட வாரீ ரென்றே
திவிர மாகி நின்ற தேவனே போற்றி போற்றி!

9. இனிப்புதான் மிகுந்தி ருந்தபழங்களைத் தின்ற பின்பு
கனிகளைச் சேக ரித்தே வீட்டினை யடைய லானீர்
பனிப்புறு மக்க ளுக்குப் பாரிப்பாய் நிற்கும் தேவே.
கனியிலும் இனிமைசான்ற கருணையின் வடிவே போற்றி.

10. தேனுகன் அழிந்தா னென்றே தேனிலும் இனிய சொல்லால்
வானமும் புவியும் போற்ற வணங்கினர் வாழ்த்த லோடு
ஞானமே வடிவாய் நிற்கும் நாரண பழங்கள் தம்மை
மோனமாய் உண்ணுமாறு புரிந்தனை புனித போற்றி.

## ஐம்பத்து நாலாவது தசகம் – காளியன் வரலாறு

1. உம்முடை பத்த ரான சௌபரி முனிவர்தாமும்
செம்மை சேர் யமுனை மூழ்கிப் பன்னிரண் டாண்டு காலம்
இம்மையின் இன்பம் எண்ணி மீன்கள்பால் நட்பு கொண்டே
வெம்மைசேர் கருடன் தன்னை வியப்புடன் ஓர்நாள் கண்டார்

2. கருடன்தான் மீனைத் தின்னும் காட்சியைக் கண்ட போது
கருடனே இவ்விடத்தில் மீனுண்ணக் கருது வாயேல்
பெருந்துயர் அடைந்து சாவாய் என்றவன் சினத்தினோடு
வருந்துறும் வகையில் சாபம் வழங்கியே நின்றா னாங்கே.

3. காளியன் என்ற பாம்பு கருடனின் பகையாய் நின்று
நீளவே மீன்கள் தின்று நிம்மதி குலைத்த வேளை
நீளிரும் சிறயால்தாக்கக் காளியன் யமுனையாற்றில்
மீளியாய்ச் சென்று சேர்ந்தே மிடுக்குடன் வாழலுற்றான்.

4. கொடியனாம் காளி யன்தான் யமுனையில் குதித்த காலை
செடிமரம் தீய்ந்து போகச் செய்மையில் பறவை யெல்லாம்
மடிவுற விடத்தின் சீற்றம் மாயனே நீயும் கேட்டு
அடலுடன் வெல்ல வென்றே அகந்தனில் நினைத்தா யன்றோ

5. பலராமன் தன்னை நீங்கிப் பாலர்கள் சூழ்ந்து நிற்க
குலைவிலா உள்ளத் தோடும் யமுனையைக் குறுக லோடும்
அலைவுறும் ஆய ரெல்லாம் அந்நீரைக் குடித்த லோடும்
குலைநடுக் குற்று வீழ்ந்தே மாய்ந்தனர் கரையின் கண்ணே.

6. உயிரிழந் தழிந்த உந்தன் உத்தமத் தோழர் தம்மைப்
பயிலுறும் அன்பி னோடும் கடைக்கண்ணால் நோக்கிக்
கொண்டே
துயிலுற்றார் எழுதல் போல எழுந்திடச் செய்தா யன்றோ
எயில்வளம் மிக்கு யர்ந்த குருவாயூர் அண்ண லே நீ.

7. எழுந்திடும் கோவ லர்கள் இணையிலா மகிழ்ச்சி யோடு
விழுந்தனர் தொழுதா ராங்கே வியப்பினால் உன்னைக்கண்டே
எழுந்ததோர் மகிழ்ச்சி பொங்க இறுகவே தழுவி நின்று
தொழுதனர் தோத்த ரித்தார் துயரெல்லாம் மறந்தார்
மன்னோ.

8, பசுக்குலம் பிழைத்தெழுந்த பரமனாம் உம்மைச் சுற்றி
விசும்பெழ ஆர்ப்ப ரித்தே வேதனை மறந்தா ராகித்
தசும்பிடும் அன்பி னாலே தலைவனாம் உன்னை நோக்கிப்
பசும்புலில் மேய்க்கச் சென்ற பரந்தாம கழல்கள் வாழ்க.

9. பரந்தாம வீட்டத்தின் வேகம் பாரித்தற் கரிய தாகும்.
நிரந்தர மில்ல தாக நீயிதைச் செய்தாய் போற்றி
உரந்தனில் மகிழ்ச்சி மேவ உள்ளந்தான் பூரிப் பெய்த
நிரந்தர அன்பு சேர்த்தாய் நேர்மையாய் போற்றி என்றார்.

10. அன்பரை உயிர்ப்பித் தாய்நீ துன்பத்தைத் துடைத்து நின்றாய்
நின்றிடும் நோய்க ளெல்லாம் நீங்கிட வகையும் செய்தாய்
பொன்றிடும் என்னைக் காக்கப் புங்கவா கருணை செய்வாய்
குன்றலில் அன்பு கொண்ட குருவாயூர்க் கோவே நீதான்,

# ஐம்பத்தைந்தாவது தசகம் - காளிய நர்த்தனம்

வேறு

1. அருளற்றிடும் இருளுற்றிடும் மடுவின் கரையதனில்
தெருளற்றொரு முடிபுற்றலை விடமண்டிய நிலையில்
வெருளற்றிடும் நிலையுற்றதை வினயத்துடன் கண்டே
மருளற்றொரு கடம்பத்திடை மருவிச் சிறிதிருந்தாய்

2. தளிரொத்தொளிர் இளமேனியில் துளிபட்டிடு நிலையில்
அளியற்றவன் உறைவுற்றிடு அலையுற்றிடு மடுவில்
அளியுற்றதொர் மலர் உற்றிடும் அழகுற்றிட நீயும்
துளி எங்கணும் திதறுற்றிடச் குதித்தாயம் மடுவில்.

3. உலகத்தனை உன்தோளினில் உற்றே உலவிடவே
நிலமத்தனை தாங்கும் நின தாற்றல் அதுதன்னால்
விலகிற்றவன் நீர்தேக்கமோர் நூறாம் விற்கடையே
கலங்கிற்றவண் யமுனைநதி காளிந்தியின் செயலால்

4. திக்கெங்கணும் நீர்த்திவலைகள் சிதறிக் கிடந்திடவே
புக்கே யொளி இடமின்றியக் காளிந்தியும் வெளியே
எக்கங்கலும் காணாதவன் எழுந்தே வரலானான்
அக்கண்களும் அறிவின்றி யழிந்தேயவன் அலந்தான்.

வேறு

5. ஆயிரமாம் பணா முடிகள் கொண்டிருந்த காளிந்தி
யரக்கன் தன்னை
தோய்கின்ற கொடுவிடத்தால் குவலயமே தொலைகின்ற
நிலைகண்டானை
ஆய்கின்ற வேளைதனில் உன்னெதிரே அவன் வரவும்
கோபத்தோடு
மேயதொரு வல்லமையால் கண்டனையால்
மேன்மை மிக்கோய்

6. ஒளிவீசும் கண்களுடன் கொடுமைமிகும் விடம்படைத்த
காளிங்கன் தான்
எளியவனாய் உனைஎண்ணி உடலதனை வால்கொண்டே
சுற்றிக்கொண்டு

மனமேனைக் கெடுத்திட்டான் உன்மகிமை சற்றேனும்
அறியானாகி
தெளிவுற்றோர் சிந்தையிலே தேனெனவே இனித்திடுவோய்
தேவதேவே.

7. கோவலர்கள் யமுனைநதிக் கரைதனிலே உன்றன்னைக்
காணலின்றி
ஆவலுடன் தேடினர்காண் சேரியிலே அபசகுனம்
பலவும் கண்டோர்
மேவிவளர் அச்சத்தால் யமுனை நதிக்கரை தன்னை
நாடினார்கள்
ஓவலின்றித் தொழுபவர்தம் உள்ளத்தில் உறைகின்ற
உண்மைத் தேவே.

8. [illegible] அனைவருமே உனக்காக உயிர்விடவும்
துணிந்த காலை
பொங்கிவரு நதிப்பரப்பில் காளியனின் உடல் பரப்பில்
குலவி நின்றாய்
எங்கெங்கும் நிறைந்துள்ள உன்உருவை அவர்காணக்
காட்டலோடும்
அங்கவர்தான் அடைந்திட்ட மகிழ்ச்சிக்கோர்
அளவே இல்லை.

9. கிண்கிணைச் சலங்கையொலி கேட்டிடவே பாம்பரசன்
தலையின் மீது
பண்புடனே நடம்புரியப் பாரெல்லா மிக்காட்சி
பார்த்ததன்றோ
வன்பிழந்தான் பாம்பரசன் படம் நசுங்கிப் பல்லெல்லாம்
உதிரம் கொட்டத்
திண்மை நிலையாவையுமே தீர்த்தவனாய்ச் சோர்ந்திட்டான்
திருவின் கேள்வ.

10. நடனத்தை நீ செய்த நேர்த்தியினை நாற்றிசையில்
உள்ளோர்கள்
திடமுடனே கண்டவராய்த் தேவருடன் தானவரும்
சிறந்து மாங்கே
உடல்வலிசேர் கோபியரும் முனிவர்களும்
மகிழ்ச்சி கொண்டார்
மடமையெலாம் போக்கியெனை மாண்புறவே செய்திடுமோர்
மன்னர் மன்னா

# ஐம்பத்தாறாவது தசகம் - காளியன் சரணாகதியும் காட்டுத்தீயும்

வேறு

1. வானுல கதனில் வாழும் வனிதையர் வாழ்த்துக்கூற
கானெலாம் கேட்கு மாறு துந்துபி முழக்கம் செய்ய
ஞானமே உருவ மானோய்க் குண்டலம் அசைந்தே யாட
மோனமாய் நடனம் செய்த முழுமையை என்ன சொல்வேன்

2. வணங்கிய தலைகள் தம்மை வாட்டுதல் விட்டு விட்டே
இணங்காத தலைகள் தம்மில் இயற்றினை நடனந் தன்னை
துணங்கை போல் தாளத் தோடு தொடங்கினாய் நடந்த தன்னை
இணங்கினார்க் கருளை ஈயும் எம்மானே குருவா யூரா.

3. துவைத்ததால் தொங்கிப் போன படங்களைக் கொண்டா னாகி
சுவைத்தநீர் குருதி நீராய்த் தோன்றிடச் சோர்வு கொள்ள
அவத்தினை யறியா ரான அவன்தேவி மார்கள் எல்லாம்
சுவைத்தநின் திருவ டிக்கண் சூழ்ந்தனர் சரண டைந்தார்.

4. உன்னுடைப் பெருமைதன்னை முனிவர்பால் கேட்ட றிந்தே
உன்னத பக்தி கொண்ட காளிந்தன் தேவி மார்கள்
பன்னரும் அன்பி னோடும் பலவாறாய்ப் பரவ லுற்றே
உன்னுடைப் புகழை யெல்லாம் உரைத்தனர் வணக்கம் செய்தார்

5. காளிந்தன் மனைவி யர்தாம் வேண்டிடக் களிப்பு பொங்கிக்
காளிந்தன் தன்பால் உன்றன் கருணையைக் காட்ட லோடும்
காளிந்தன் வலுவிழந்து கால்களில் பணிந்து விட்டான்
கேளான அவர்கட் கெல்லாம் கிட்டிடும் அன்பு தந்தாய்.

6. கடல்நடு விருக்கு மந்த ரமணகத் தீவிற்கேநீ
உடன்செல்ல வேண்டு மாங்கே கருடன்தான் வாரா னென்றே
திடமுடன் நீயும் சொல்லத் திருவாக்காய் செவிம டுத்தே
உடனவன் பாம்புக் கூட்டம் சூழ்ந்திடச் செல்லல் உற்றான்

7. நாகபத்தினியர் தந்த நவரத்ன மாலை மற்றும்
ஆகத்தை யலங்க ரிக்கும் ஆடைகள் பிறவற் றோடு
சோகமே உருவமாகக் கரைதனில் சூழ்ந்தார் தம்மை
ஆகத்தில் தழுவிக் கொண்டீர் அமரர்தம் துயர்க ளைந்தீர்.

8. இருளது சூழ்ந்து கொள்ள வழியது காணா ராகி
வருவதை யறியா ரான கோகுலர் வருத்தத் தோடு
பெருகிய கருணை கொண்ட உன்னுடை திருவ டிக்கண்
அருகினில் படுத்து றங்கத் தீயது பரந்த தன்றே.

9. தூக்கந்தான் கலைந்தா ராகிக் கோபர்கள் துயரங் கொண்டே
ஏக்கமாய் உன்னை வேண்டி எமைக்காப்பீர் என்று வேண்ட
தாக்கிட வந்த தீயை வாயினில் கொண்டு விட்டாய்
ஆக்கமாய் உனைப்ப ணிந்தோர்க்கருளினை அளிக்கும் வள்ளல்

10. தீயது வண்ணந் தானும் செயல்தனில் இருந்த துண்டு
மேயதோர் தன்மை யின்றி மேதினி அறிந்ததன்றே
தூயவன் வாயிற் பட்டே தூய்மையை யடைந்ததன்றோ
ஆய்ந்திதை உரைப்பதற்கே எவர்க்குமே ஆவ தில்லை.

## ஐம்பத்தேழாவது தசகம் – பிரலம்பாசுரவாதம்

1. வேண்டுவார் வேண்ட லெல்லாம் விளைக்கின்ற நீதா னன்று
ஆண்டகை பலம் சேர்ராமன் தன்னையும்அழைத்துக் கொண்டு
மாண்புடை ஆயரோடு பசுக்கூடம் தம்மோ டங்கே
காண்டகு வனத்தை யன்று காணற்கே சென்றா யன்றோ.

(வேறு)

2. பிருந்தையுடை அழகையெலாம் பலராமர் தமக்குக்காட்டி
வருந்துதலே அறியாத ஆயர்களை உடன் கொண்டே
கானந்தன்னில்
திருந்துமுளம் கொண்டவராய்ப் பாண்டரீகம் என்றபேர்கொள்
மருந்தெனலாம் ஆலமரம் தன்னைக் கண்டாய் மன்னர்மன்ன.

3. அவ்விடத்தே பிரலம்பன் எனும் கொடிய அரக்கன் தானும்
செவ்வியதாம் கோபியரின் வடிவெடுத்த உன்னைக் கொல்ல
வவ்வியதோர் நினைவாலே உனைநாடி வந்தபோது
செவ்வியனாய் நின்றாயால் குருவாயூர் செம்மலேநீ.

4. அனைத்தையுமே அறிந்தாலும் நீயந்த நேரம்தன்னில்
புனத்தினிலே சிறுவருடன் அசுரனுடன் விளையாட் டாடி
மனத்தினிலே இனிமையுடன் உலவினையால் மகிழ்ச்சி பொங்க
புனத்தினிலே துவந்தயுத்த விளையாட்டைத் தொடங்கி
னாயால்

5. ஆயர்களை இருபிரிவாய் அமைத்துக்கொண் டவ்விடத்தே
தூய்மைமிகும் பலத்ரதன் தலைமையிலே ஒருபிரிவும்
வகுத்துக்கொண்டே
வாய்மைமிகு முன்பிரிவில் மற்றொன்றும் வகுத்துகொண்டோய்
தூய்மையிலா அசுரனையுன் பக்கலிலே சேர்த்துக் கொண்டாய்

(வேறு)

6. தோற்றவர் வென்றோர் தம்மை தூக்கிட வேண்டு மென்ற
ஏற்றமார் கொள்கையோடு தோற்றநீ உன்றன் நண்பன்
வேற்றுமை இல்லா னான தாமனைத் தோளில் தூக்கி
ஆற்றலைக் காட்டி நின்றாய் அன்பிலே திளைத்த தேவே.

7. சுமந்தவர் சுமப்போ ராக பலரங்கே இருந்த போது
அமைதியில் பிரலம் பன்தான் உம்மிடம் பயந்தா னாகிச்
சுமந்தனன் பலனையாங்கே தொலைதூரம் சென்றான் மன்னோ
அமைதியாய் அதனையாங்கே யடைவுடன் நீயும் கண்டாய்.

8. தொலைதூரம் செல்லலுற்ற அசுரன்தன் தன்மை கண்டே
உலைவிலா பலரா மன்தான் கனமிகக் கொண்டா னாக
அலைவுறு மனற்தின் னந்த அசுரனும் அமைதி யின்றிக்
குலைவுறும் உருவைக் காட்டக் குலைந்தனன் பலனு மாங்கே.

9. அரக்கனின் உடல்உயர்ந்த அகவையால் பலனு மாங்கே
இரக்கமாய் உன்னைநோக்கி எண்ணத்தில் மகிழ்வு பொங்க
அரக்கனை விரல்ம டக்கி அழித்தனன் மகிழ்ச்சி கொண்டான்
நிரப்பினை நீக்குகின்ற நிமலனே குருவா யூரா.

10. பலராமன் தன்னைக்கண்டே பரிவுடன் தழுவிக் கொள்ள
மலர்மழை பொழிந்தே தேவர் மகிழ்ச்சியில் திளைத்தா ராகிப்
பலப்பல தோத்தி ரங்கள் பன்னினர் புகழெ டுத்தார்
நிலமெலாம் வாழ்த்த ஆங்கே நின்றனை குருவா யூரா.

11. வண்டுபோல் கரியமேனி படைத்திடும் அரியே நீதான்
விண்டுவாய் உலக னைத்தும் புரக்கின்ற விமல னன்றோ
தொண்டனேன் துயரந் தன்னைப் போக்கிடத் துணையிருந்து
மண்டுமோர் அன்பால் காக்க விரைந்திட வேண்டுமன்றோ.

## ஐம்பத்தெட்டாவது தசகம் – வெய்யிலும் மழைக்காலமும்

1. சிறுவர்க ளோடு சேர்ந்து விளையாடிச் சிரித்தா யாகி
வெறுவுறும் அரக்கன் தன்னை வெருட்டியே கொன்ற காலை
மறுவறு பசுக்கூட் டங்கள் வனத்திடை நீண்ட தூரம்
செறிவுறச் சென்று மேய்ந்தே பசிதீர நின்றவம்மா

2. பிருந்தையில் வெயிலே இன்றி பேதமே யறியாவாகி
இருந்திட்ட பசுக்கள் எல்லாம் வெய்யிலின் கொடுமைதன்னால்
அருந்திடத் தண்ணீர் இன்றி அலவமாய் அங்கு மிங்கும்.
திரிந்தன வருத்த மேவி தீராத தாகத் தாலே.

3. பசுக்கூட்டம் முஞ்சிக் காட்டில் அலைந்திடப் பரிவு கொண்டே
தசும்பிய அன்பி னாலே தலைவனாய் அங்கு சென்றே
பசுக்கூட்டம் தன்னைஓட்டி வருகையில் காட்டுத் தீயும்
விசும்பினைத் தொடுவ தாக விரைந்ததால் விசையி னோடும்

4. காட்டுத்தீ வலுவ டைந்தே கவலையைத் தோற்ற லோடும்
நாட்டிடும் நாட்ட மெல்லாம் நம்பனே உன்பால் கொண்டே
சேட்டனே எம்மைக் காவாய் என்றவர் புலம்பி நின்றே
வாட்டமாய்ப் பலவா றாகப் புலம்பினர் வாழ்த்தி நின்றார்.

5. முஞ்சிக்கா டதனில் அன்னோர் முகம்வாடி இருந்த காலை
கொஞ்சமும் அஞ்ச வேண்டா குறைகளைக்களைவே னென்றே.
அஞ்சுமோர் நிலையை நீக்கிப் பாண்டிர மரத்த டிக்கண்
கொஞ்சியே குலவும்வண்ணம் குறையெலாம் போக்கிநின்றாய்

6. உம்முடை வெற்றி தன்னை உவந்தனர் போற்ற லோடும்
செம்மைசேர் உளத்தி னோடும் சிறுவர்பால் அன்புபூண்டே
வெம்மையே தெரியா வண்ணம் வேடிக்கை பலவும் காட்டி
எம்மையும் ஆக்குமுன்றன் ஈடிலா இன்பந் தந்தாய்

7. யமுனையின் கரையின் கண்ணே வேனிலைக் கழித்த காலம்
உமையெனார்உள்ளந்தண்ணில் உதித்திடும் கொதிப்பு போல
அமைவுறும் பஜனைசெய்வோர் பாவத்தைத்தணித்தல் போல
சமைவுறு சக்கரத்தின் ஒளியெனச் சமைந்த தன்றே.

8 மேனியின் நிறமேபோல மிளிர்கின்ற தன்மைகொண்டே
மேனியின் மஞ்சட் சட்டை போன்றதோர் மின்னல் மின்ன
போனமே யளிக்கும்மேகக் கூட்டந்தான் மழையைப் பெய்ய
வேனிலின் வெம்மை நீங்கி விளக்கமே கொண்டிருந்தாய்

9. கிரிகளில் சிறந்த தான கோவர்த்தன கிரியு மாங்கே
பரிவுடன் நீதி ரிந்தே பலவாறாய் ஆடல்கண்ட
புரிந்தநல் அன்பி னோடு புகலரும் போற்றி செய்தே
நிரவிய பூக்களாலே பூசித்து நின்றதன்றே.

10. சரக்காலம் வந்த போது பக்தர்கள் உள்ளம் போல
நிரைத்திடு பூக்களோடும் விளங்கிற்றே நீக்க மின்றி
நிரைகளை வனத்தில்மேய்த்தே குறைவின்றி யிருந்தா யன்றோ
பெருமைகள் யாவும் சேர்ந்த குருவாயூர் கொண்ட லேநீ.

## ஐம்பத்தொன்பதாவது தசகம்—வேணுகானம்

1. புதியதோர் காயா போலும் அழகிய தோற்ற மான
விதுப்புற மயக்கு கின்ற சச்சிதா னந்த மான
பொதுவறும் உன்தோற் றத்தைக் கோபியர் கண்டு கண்டே
எதுவுமே செய்யாராகி ஏக்கமே உருவாய் நின்றார்.

2. மன்மதன் சேட்டை யாலே மனதிலே காம மிக்கு
இன்னதென் றறியாராகி உன்னையே நினைத்துக் கொண்டு
கன்னல்சேர் உனது சொல்லைக் கேட்டிடும் கடப்பா டுற்றே
வன்னமார் காட்டி னுக்கே நீசெலல் விரும்பவில்லை,

3. வந்தனை யடைந்தபின்னைக் கோபியர் மனதை யெல்லாம்
புனந்தனில் ஓடவிட்டே புகலரும் காமத் தோடும்
உனைநினைந் துவகைகூர நீயூதும் குழலைக்கேட்டே
மனந்தனைப் பறிகொடுத்தே மற்றவை மறந்தார் மன்னோ.

4. வனத்திடைச் சென்ற நீயும் வாகுறு மரத்தின் கண்ணே
புனைநிழல் கண்ணே சாய்ந்து புதுமைகள் படைப்ப தான
தினைசேயனும் பிசகிலாத தீங்குழல் தனையெ டுத்தே
உனைமறந் தூதி னாயால் உலகத்தின் தலைவா நீதான்.

5. வானுலகதனில் வாழும் வனிதையர் காமத் தாலே
மோனமாய்க் கேட்டி ருந்தார் பசுபட்சிக் கூட்ட மெல்லாம்
தானெனும் உணர்வே இன்றித்தலை தலை மயங்கிச் சோர்ந்த
மேன்மைசேர் கடவுளா னோய் மேதினிபுகழும் தேவே.

6. விரல்கள்தாம் அசைந்து நிற்கவியன்மிகும் இசைதனக்கு
விரல்படப்பாதம் தானும் தாளங்கள் போகும் தன்மை
நிரல்படக் கோபியர்கள் நேர்காண வில்லை யேனும்
பெரிதுமே மனத்தின் கண்ணேபோற்றினர் நின்றார் மன்னோ.

7. தடையேது மில்லா ராகி உன்றனைத் தரிசித் திட்டே
கெடலரு மன்பு கொண்ட வானுலகுறையும் பெண்டிர்
அடலுறு பறவை மற்றும் மிருகங்கள் பசுக்கள்எல்லாம்
உடனுறை பிருந்தைகண்டே கோபியர் உவகைகொண்டார்.

8. வேணுதான் பானஞ் செய்த அதரத்தைப் பானம் செய்தே
காணும்நாள் எந்த நாளோ துன்பங்கள் யாவும்தீர்ந்தே
மாண்புறும்நாள்தான் என்றோ என்றந்த கோபியர்கள்
பூணணி மார்பா உன்னைப்போற்றியே புகழ்ந்ததார் மன்னோ

9. ஒவ்வொரு நாளும் உன்பால் உவப்புறு மனத்தராகிச்
செவ்விய செயலைச்செய்யும் செம்மைகள் அனைத்தும் விட்டே
வவ்விய கவலை யோடு வாடிக்கை யாக நாளும்
செய்வுறு செயல்ம றந்தே உன்னையே நினைக்க லுற்றார்

10. ஆசையும் மோட்சம்தானும் இருவேறு தன்மை கொண்டும்
பேசரும் அழகைக் கண்டே பேதமை யடைந்த தாலே
ஆசையும் மோட்சம் தானும் ஒன்றென நின்ற தம்மா
நேசமார் தொண்டர் போற்றும் குருவாயூர் தேவதேவே.

## அறுபதாவது தசகம்—கோபீ வஸ்திராபகரணம்

1. காமத்தால் கட்டுண் டாராய்க் கவலையே வடிவமாகி
நேமமாய் யமுனை யாற்றின் நீள்கரைதன்னில் ஓர்நாள்
சேமமாய் உமைச்சேவிக்க மணலிலம் பிகையைப் போற்றி
நாமமே நவின்றுன் றன்னை நாடவே வழிபட் டாரால்

2. யமுனையின் கரையைச் சேர்ந்தே யதுகுலப் பெண்டிர் தாமும்
தமதுளக் கருத்தைக் கூறி தாயவள் அன்பை வேண்டி
உமையடை கின்ற வேட்கை உள்ளத்தில் அதிக ரித்தே
உமையவள் தம்மை யன்னாள் உவகையால் வணங்கி நின்றார்.

3. ஒருமாத கால மாக நதிக்கரை தன்னில் நின்று
பெருகிடும் விரதம் தன்னைப் பிசகின்றி யியற்றலோடும்
உலகியே அவர்க ளுக்கு உன்றனைக் காட்ட எண்ணி
திருமிகு நதிக்க ரைக்குச் சென்றனை தேவதேவே.

4. பூசையின் நியமமெல்லாம் முடிந்தபின் ஆடை யெல்லாம்
ஆசையால் களைந்த அன்னோர் ஆற்றிடைக் குளிக்க எண்ணி
நேசமாய் உம்மைநோக்கி நெட்டுயிர்ப் பதுதான் கொண்டே
பேசரும் வெட்கத் தோடும் பேச்சின்றி நின்றார் மன்னோ.

5. பெண்கள்தாம் வெட்கத் தாலே தலைதமைத் தாழ்த்திக் கொண்டே
கண்களை மூடிக் கொள்ளக் கற்றனர் இல்லையாக
எண்கொளாப் பெருமைமிக்காய் எல்லவர் துணியும்சேர்த்தே
கண்கவர் மரமொன் றின்மேல் களிப்புடன் ஏறிநின்றாய்

6. அழகிகாள் இங்கே வந்து முறைப்படி ஆடை தம்மைப்
பழகுறும் வகையில் நீங்கள் பற்றியே செல்வீ ரென்றே
குழைவுறு மனத்தினாலே கூறுதல் கேட்ட லோடும்
அழகிகள் அனைவ ருந்தான் அசைவின்றி நின்றாராங்கே.

7. விளையாட்டுப் பிள்ளை யேநீ என்றுமே இனித்தி ருப்பாய்
களைப்புறும் எங்களைநீ கவலையைக் கொள்ள வைத்தாய்
களைந்தஎம் ஆடையாவும் கொடுத்திடு என்று வேண்ட
களைப்பின்றி முறுவல்செய் தாய்சர்வமும் நீயேயன்றோ,

8. தூய்மைசேர் உள்ளத் தோடும் துதித்திடும் அவர்க ளுக்கே
வாய்மையின் உருவாய் நின்றோய் வழங்கினை ஆடை யாவும்
தாய்மைசால் பெருமநீதான் அன்னவர் மகிழு மாறு
நோய்மைகள் நீங்குமாறு நுவன்றனை சிலசொற் கள்தாம்

9. உம்முடை விருப்பம் தன்னை உள்ளவா றறிந்து கொண்டேன்
செம்மைசேர் யமுனை யாற்றில் முழுமதி நிலவின்கண்ணே
உம்முடை விருப்ப மெல்லாம் உடனுடன் தீர்த்து வைப்பேன்
இம்மையும் மறுமை தானும் இன்பமே சேர்ப்பே னென்றாய்

10. மான்விழி மடவா ரெல்லாம் மனத்திடை மகிழ்ச்சி பொங்கத்
தேனினும் இனியதாக தெவிட்டாத மொழிகள் கேட்டே
ஊனுடல் உருகப் பெற்றே உள்ளத்தில் உம்மை யெண்ணிக்
கானகம் விட்டுத் தங்கள் வீடுகள் திரும்பி னாரால்.

11. கோபியர் தமக்குன் அன்பைக் கூட்டினை களிப்பி னோடும்
தாபத்தைத் தணித்தன் னாளில் தகுமுறை தனைப்பகர்ந்தாய்
பாபத்தைப் போக்க வென்றே குருவாயூர் அமர்ந்த கோவே
தாபத்தைத் தணிக்க உன்னைத் தனயனேன் வணங்கு
கின்றேன்

## அறுபத்தேராவது தசகம் —
## யக்ஞபத்தினி உபாக்கியானம்

1. பத்தியால் பாலிக் கின்ற பிராமணப் பெண்டிர்தம்மை
சித்தத்தில் மகிழ்ச்சியோடு பாலிக்கும் சிந்தையோடு
மெத்தவே இனிப்பளிக்கும் பிருந்தையை விட்டு நீயும்
உத்தமர் போற்றச் சென்றாய் உவப்புறு குருவாயூர.

2. வனத்திடைச் சிறுவரெல்லாம் வாட்டிய பசியினாலே
எனைத்தையும் செய்யாராகி இளைப்புறு வேளைதன்னில்
புனத்திடை யாகம்செய்யும் புண்ணிய பிராம ணர்பால்
இணைத்திடு பசியைப்போக்க யாசிக்கச் சொன்னீரன்றோ.

3. சிறுவர்தாம் சென்றாராகிச் சிறந்ததோர் யாகம் செய்தோர்
அருகினில் நின்றே கண்ணன் அனுப்பினான் என்ற லோடும்
பெருந்தவம்செய்து நின்றும் காதுகள் கேளார் போல
அருந்தவ முனிவராங்கே நடித்தனர் அமைதி யின்றி.

4. அன்னந்தான் இல்லையாகச் சிறுவர்கள் உனையடைந்தார்
பின்னந்தான் நேருமென்றோ முனிவர்கள் பேசவில்லை
முன்னவ உன்பால்அன்று முளைத்திடாக் கடுமைகொண்டோர்
அன்னந்தான் அளிப்பரென்றே எண்ணிடல் அவமே யன்றோ.

5. முனிவரின் மனைவிமார்பால் முன்னவ நீதான்செல்லக்
கனிவுடன் கூறலோடும் கண்களில் ஒளிதான் பொங்க
இனிமேசேர் எண்ணத்தோடும் எல்லோரும் ஏகலானர்
அனைவரும் போற்றுகின்ற குருவாயூர் எங்கள் தேவே.

6. நீண்டநாள் உன்னைக்காண நினைவினைக் கொண்ட
அன்னார்
தூண்டிடு மன்பால் தூய சுவையுறும் உண்டி கள்தாம்
வேண்டிய வாறே செய்து விருப்பமாய் வரவேற் றார்கள்
ஆண்டகை நின்னைவேண்டும் அன்பினில் கட்டுண் டார்கள்.

7. உச்சியில் மயில்தோகைதான் உன்னத மாய்த்துலங்க
மெச்சிடும் கடைக்கண் தன்னில் அன்புதான் மேன்மைபொங்க
கச்சிதமாகக் காதில் குண்டலம் ஒளியைக் கக்க
நச்சிடும் அன்பன்தோளில் கைவைக்கும் உன்னைக் கண்டார்.

8. உம்மையே காணவேண்டி ஒருத்திதான் புறப்பட்டாளாம்.
செம்மையைக் காணான் கையைப்பிடித்தனன் நிறுத்தி
விட்டான்
உம்முடை தியானத்தாலே உயர்ந்தோர் பதவிபெற்றாள்
உம்மையே எண்ணுவோர்கள் உறாததும் உலகில்உண்டோ.

9. உண்டியை ஏற்றுக்கொண்டே உடன்வந்த பெண்டிர்தம்மை
விண்டுவே யாகந்தானும் வியர்த்தமாய்ப் போகாவண்ணம்
மண்ணெலாம் போற்றுகின்ற மாயவா நீதானன்று
உண்மையாய் அனுப்பினாயால் உன்புகழ் உரைக்கற்பாற்றோ.

10. முனிவரர் தாங்கள் செய்ததவறுகள் முழுதுணர்ந்தார்
துணிவுறும் மனைவிமார்கள் தொண்டினைப்புகழ்ந்து
ரைத்தார்
கனிவுறும் உளந்தான் கொண்ட கர்த்தனே உன்ற னெண்ணம்
இனிவரும் எவரும் காணார் ஈசனே போற்றி போற்றி.

## அறுபத்திரண்டாவது தசகம் - இந்திரயாகம்

1. இந்திரன் செருக்க டக்க எண்ணியே நீவீ ரன்று
இந்திரர்க் கென்றே யாகம் செய்திட முயன்ற போது
தந்தையே இவையெல் லாமும் எதற்கென அறியார் போன்று
விந்தையாய்க் கேட்டுவைத்தீர் வேதத்தின் வித்தாய் நின்றீர்.

2. மழைதனை வேண்டியிந்த மாண்புறு யாகந் தன்னை
அழகுற ஆண்டுதோறும் இந்திரன் தனக்குச் செய்வோம்
மழையின்றேல் புல்லு மில்லை மாடுகள் கன்று மில்லை
மழைக்கென வணங்குகின்றோம் என்றனர் தந்தைமன்னோ.

3. மானிடர் விதியினாலே மழையது மண்ணில் பெய்து
தானிடர் தவிர்க்குமன்றி இந்திரன் செய்வதில்லை
கானிடை மரங்க ளெல்லாம் இந்திரன் தன்னைப் போற்றி
ஊனமில் மழையைப் பெற்றே உய்யுமோ உரைப்பா யென்றாய்

4. பசுக்களே உங்கள் செல்வம் ஆதலால் மலைத னக்கே
பசுக்களின் சார்பில் பூசைபண்ணிடல் நல்லதாகும்
விசும்பினில் மேகக்கூட்டம் சேர்ந்திட முனிவர் தம்மை
விசுவாசமாகப் போற்ற விரைந்திடல் வேண்டுமென்றாய்

5. கோவலர் உன்றன் சொல்லால் குலவிடு மின்பமெய்தி
கோவர்த்தன மலைக்கே பூசையாவையும் போற்றலானார்
கோவலர் படைத்தவற்றைக் குணமுடன் உண்டநீயும்
ஆவலால் அவர்கள்தம்மை அன்புடன் வாழ்த்தி நின்றாய்

6. நான்சொன்ன வார்த்தையெல்லாம் நாளுமே உண்மையாகும்
தேன்சொட்டும் மலைதனக்கே தினம்தினம் பூசைசெய்தே
வானத்தில் மேகக்கூட்டம் வரக்காண்போம் இந்திரன்தான்
போனகம் பெறாமல்கோபம் பெற்றாலும் பயமேயில்லை

7. என்றனை ஆயரோடு இணைந்தனை கோகுலத்தில்
நின்றனையாக அந்த இந்திரன் ரசோகுணத்தால்
வென்றிடு புலன்களின்றி வெகுளியால் உன்மேலன்று
கன்றிய மனத்தினோடு கடைகெட்டே பகைமைகொண்டான்.

8. விண்டுவே மனிதனாக விளங்கியே இருந்தபோதும்
விண்தனில் உள்ளதேவர் வேதனை படச் செய்திட்டால்
விண்ணெலாம் அழியுமன்றோ ஆகையால் கண்ணன்தன்னைக்
கண்டிப்பேன் இன்றேஎன்று கனன்றனன் எழுந்திருந்தான்.

9. வெள்ளானை மீதிலேறி இந்திரன் மற்றதேவர்
கொள்ளாராய்த் தூற்றும்போதும் கொலைவெறி
கொண்டா னாகி
நள்ளானாய் உனையெ திர்க்கும் நாட்டமே கொண்டான்
மன்னோ
வின்னாரைப் பணியச் செய்யும் வேதத்தின் வித்தே போற்றி.

10. இந்திரன் கோபங் கொண்டே இருந்திட லான போதும்
பந்தமே இல்லா தோங்கும் பரமனே ஆயர் தம்பால்
இந்திரன் இன்னும் இங்கே வராததேன் என்று கேட்டே
நிந்தனை இன்றி நின்றாய் நிமல னேகுருவா யூரா.

## அறுபத்து மூன்றாவது தசகம் - கோவர்த்தன உத்தாரணம்

வேறு

1. கோவர்த்தன மலையினிலே குவலயமே நடுங்கிடவே
குமுறிக்கொன்டே
ஆவர்த்தனம் செய்துகொண்டே மேகமெலாம்
திரண்டெழுந்தே இடியிடித்து
கோவர்த்தனம்தனைச் சேர்ந்தே மின்னல்மின்னி
ஆகாயப் பெருவெளியைக்
கோவத்தால் மூடினவால் கோகுலந்தான் நடுநடுங்கிக்
குமுறிற்றங்கே.

வேறு

2. உலகமே அழிதல்போல ஊழிதான் தோன்றிற்றென்ன
நிலவிய மழையைக்கண்டே இந்திரன் சினத்தி னின்றும்
விலகவே காப்பா யென்று ஆயர்கள் வேண்டி நிற்கக்
கலகல வென்று நக்கே காப்பது உறுதி யென்றாய்.

3. கோகுலந் தனக்கே இந்த கோவர்த்தன கிரிதான் தெய்வம்
ஆகுலம் கொள்ளாதீர்கள் என்றவர்க் கமைதி கூறி
வாகுறு பலத்தினாலே கோவர்த்தன மலையைத் தூக்கி
சோகமே உருவாய் நின்ற யாதவர் துயரைத்தீர்த்தாய்

4. மலையினை மேலேதூக்கி மாடுகள் கன்று தாமும்
நிலைபெற நின்ற தோடு கோவலர் குடியுமாங்கே
அலைவுறு நிலைமை நீங்கி அமைதியாய் நின்ற தாலே
இலைஇனித் துயர மென்றே இன்புடன் இருந்தா யன்றே.

5. ஒருகையில் மலையைத் தூக்கி ஒருகையால் கோக்கள்தம்மை
அருமையாய்த் தழுவிக் கொண்டே அன்புடன் இடைச்சியர்
பெருமையாய்ப்பேசி நின்ற பெற்றிக் கண்டாபாது பால்
திருமிகும் இடையர்தாமும் திகைத்தனர் நின்று போனார்.

6. கண்ணனோ தாமரைபோல் மென்மையைக்கொண்டவன்
காண்
திண்மையைக் கண்ணனுக்கு மலையது தந்ததேகொல்
உண்மைதான் எதுவோ என்றே கோவலர் உற்று நோக்கி
எண்ணத்தில் உன்னையன்றி எதையுமே எண்ண வில்லை.

7. துணிவுதான் மிக்கோனான சிறுவனின் செய்கைதன்னை
இணக்கமாய்க் காண்பேனென்றே ஏழுநாள் மழைபொழிந்தும்
மணக்கின்ற துழாயின் மார்பன் மாண்பினால் கவலைஇன்றி
பிணக்கமில் கோக்களெல்லாம் மகிழ்வுடன் திரிந்த தாங்கே.

8. குடையென மலைபிடித்தே குலவிநீ இருந்ததாலே
இடையர்கள் இடையூறின்றி இன்பமாய் இருத்தல்கண்டே
அடைவுறும் செறுக்கெலாமும் அற்றவன் இந்திரன் தான்
உடையுறும் மனத்தானாகி ஒய்ந்தனன் சென்றான் மன்னோ.

9. மழையெலாம் ஓய்ந்த பின்னே ஆயர்கள் பசுக்களோடு
இழைவுறு மகிழ்ச்சியோடும் எங்கணும் திரிந்தகாலை
குழைவுறு மனத்தினோடு மலையினை மண்ணில் வைத்தீர்
தழைவுறு மனத்தராகித் தழுவினர் வழுத்தினரால்.

10. பூமியைத் தூக்கும் நீதான் மலைதனைத் தூக்கல்தானும்
ஆமொருசெயலேயன்றி ஆகாத தில்லையென்றே
காமுறாதவரெல்லாரும் கருத்தினில் எண்ணிக் கொண்டே
நாமமே நவின்றாராகிச் செய்வதை மறந்து நின்றார்,

## அறுபத்து நான்காவது தசகம்
## கோவிந்த பட்டாபிடேகம்

1. கோவர்த்தன மலையைத் தூக்கிக் குலவிய மேன்மைகண்டே
ஆவலாய்க் கோவலர்கள் அடைவுறும் சாத கத்தை
சேவைசெய் உள்ளத்தோடும் தேவனே இவனா மென்றே
மேவிய அன்பி னோடும் ஆய்ந்தனர் பார்க்க லுற்றார்.

2. பெயர்சூட்டும் காலைதன்னில் பெருமையாய்க் கூறப்பட்ட
உயர்வுகள் மற்றும் அன்னோர் உணர்ந்தனர் தெளிவுபெற்றார்
அயர்விலா ஆயர்தாமும் அவையெலாம் கேட்டபின்பு
துயரெலாம் மறந்தபராகித் துதித்திடலானார் மன்னோ.

3. இந்திரன் திமிர ழிந்தே மன்மதன் துணையினோடும்
வந்தனன் சிரத்தைத் தாழ்த்தி முடியது பாதம்காண
உந்தனை வணங்கி னானால் உலகெலாம் காக்கும் தேவே
எந்தனைக் காப்பாயப்பா குருவாயூர் அமர்ந்த மேலோய்;

4. காமமார் தேனுதானும் தன்பாலால் அபிடே கத்தை
நேமமாய்ச் செய்தலோடும் இத்திரன் வெள்ளை யானை
சேமமார் தேவ கங்கை தீர்த்தத்தால் அபிடே கத்தை
ஏமார் பூசெயோடும் இயற்றிட லாயிற்றன்றே.

5. மூவகையுலகும் போற்றும் முதல்வனாம் நீதா னன்று
ஆவலால் செய்தபூசை யனைத்தையும் ஏற்றுக் கொண்டாய்
ஔவலில் அன்பு கொண்ட கோகுலம் சுவர்க்கம் தன்னின்
தாவலில் வைகுந் தத்தின் தகுதியை அடைந்ததம்மா.

6. உன்தன்னை யமுனைதன்னில் வேளையை அறியாராகி
நின்றங்கே குளிக்குங்காலை வருணன்தான் தூக்கிச்செல்ல
அன்றங்கே அவரைக்காக்க வருணனின் உலகம் சென்றாய்
குன்றெடுத் தமைதி தந்த கோவல குருவா யூரா.

7. நீருக்குத் தலைவ னான வருணன்தான் உன்னைப் போற்றிப்
பேர்பெற்ற தந்தை யோ டும் பிறழ்வின்றி யனுப்பிவைக்க
ஊர்க்கெலாம் உன் தந்தைதான் உரைத்தனன் மகிழ்ச்சி
கொண்டே
பார்க்கெலாம் முதன்மை யான பரமனே வழுத்து கின்றேன்.

8. விண்டுநீ என்றே எண்ணி வியந்திடும் பத்த ரெல்லாம்
கண்டுனை வைகுந் தத்தில் வணங்கிடக் கருதும்போது
எண்டிசை போற்றும்நீயும் அவரெலாம் வைகுந்தத்தில்
கண்டனர் வணங்குமாறு கருணைதான் செய்தாயன்றோ

9. கோவலர் வைகுந் தத்தில் குலவிய இன்பந் தன்னை
ஆவலாய் அடைந்த பின்னே அன்னவர் உன்னைப் போற்றிச்
சேவைகள் செய்தாராகித் திரும்பவும் ஆயர் பாடி
மேவியே இன்ப முற்றார் மேன்மைசால் குருவா யூரா.

10. வேறொரு அவதாரத்தில் விளம்பரும் நினது கீர்த்தி
மாறிலா வகையாய் நின்ற மகிமையை என்ன சொல்வேன்
சாறெடுத் தாயர் தாமும் சரிதத்தைப் பலவாய்ப் போற்றி
வேறொன்று மறியாராகி விந்தையாய் நின்றார் மன்னோ.

## அறுபத்தைந்தாவது தசகம்
## ராசக்கிரீடை (1)

காத்யாயனி விரதம் தானும் கடைகூடிப் போன பின்னே
தோத்திரம் செய்து நின்ற கோபியர் உளத்திற் கேற்ப
தோத்திரம் செய்யத்தக்க யமுனையின் கரையின்கண்ணே
பாத்திய நிலவில் உன்றன் குழலினை ஊதலுற்றாய்.

2. உலகெலாம் மயங்கச் செய்யும் உன்னுடைக் குழலின் ஓசை
அலகிலா இன்பந் தன்னை அன்னவர்க் காக்க லோடும்
பலப்பல தொழிலும் விட்டுப் பருகினர் இசைவெள் ளத்தை
நிலவொளி நெருப்பா யன்று தகித்திட மருண்டுபோனார்.

3. வீட்டின்கண் பணிகள் செய்தோர் விதிப்படி குழந்தைதம்பால்
நாட்டமாய் இருந்தோர் தங்கள் கணவருக் குணவு தந்தோர்
கேட்டிடும் கானம் தன்னால் கிளர்ந்தெழும் உளத்தராகி
நாட்டமே உன்பால் கொண்டே நாடினர் உன்னிடத்தே.

4. அணிகலன் தமை மறந்தே ஆடைகள் மாற்று தற்கு
இணங்கவே இல்லை உன்றன் இன்பமார் குழலின் ஓசை
அணியணி யாக அன்னோர் உன்றனை உற்றிடற்கே
இணங்கிடச் செய்த தாலே யாவரும் ஓடி வந்தார்.

5. இடையணி யணிந்துநின்ற இடைச்சியர் தமிலொருத்தி
கடைகூடும் அழகையெல்லாம் கண்கூடக்காணும் வண்ணம்
நடையினில் நளினம்மேவ நலமிகு கவர்ச்சி யோடு
உடையேதும் திருத்தலின்றி உனைக்கான ஓடிவந்தாள்.

6. கொங்கையில் கச்சுதன்னை அணிந்திட மறந்தாளாகிச்
செங்கையில் குடமி ரண்டை ஏந்தியே உன்பால் வந்து
கங்கைநீர் ஆட்டவந்த காரிகை என்னும் வண்ணம்
அங்குளோர் எவரும்காண ஆவலாய் ஓடிவந்தாள்.

7. வீட்டினில் இருந்துகொண்டு விரைந்துனை அடைய மாட்டா
நாட்டமார் கோபியர்கள் நளினமார் உனதுகீதம்
தேட்டமார் வடிவம் யாவும் உள்ளத்தே இருத்திக் கொண்டு
சேட்டமாம் உன்புகழ்தான் எண்ணினர் இருந்தார் மன்னோ.

8. மானுடன் என்றே உம்மை மதித்தனர் மயங்கிநின்றார்
ஊனுடல் தாங்கிநிற்கும் ஒருவனென் றெண்ண லாலே
ஆனதம் உணர்வை யெல்லாம் ஈந்தனர் உன்பாலன்றே
மோனத்தின் வடிவே என்றன் மோகத்தைத் தவித்தல்
வேண்டும்.

9. உன்றனைக் கோபியர்கள் உவந்துவந் தடைந்த போது
வென்றனை புன்கள்தம்மை வினயமார் நோக்கி னோடு
குன்றென நிமிர்ந்த தோளாய் கூறரும் அழகி னோடும்
நின்றனை உன்றன்நேர்மை நினைக்கவும் ஆகும்கொல்லோ.

## அறுபத்தாறாவது தசகம் - ராசக்கிரீடை (2)

1. மன்மத பாணந்தன்னால் மாண்புகள் இழந்தா ராகி
உன்னையே யடையும் நோக்கால் ஓடியே வந்தா ரேனும்
நின்னுடை தெய்வீகத்தால் அவர்களை நோக்காய் போல
மன்னிய அமைதிபொங்க மாண்புடன் இருந்தா யன்றோ.

2. வானத்தின் கண்ணேயுள்ள வாகுறு முனிவர்கேட்கத்
தேனொத்த மொழிகளாளே'' "தீமையைச் செய்யாதீர்கள்
மானந்தான் பெரிதென்பாய் நீ'' ஆயினும் உன்தன் செய்கை
ஊனமார் செய்கைபோன்று உலகினர் எண்ணலானார்.

3. உன்னுடைச் சொற்கள்கேட்ட உன்னத ஆய்ச்சி யர்கள்
நன்னுதல் நடையின் மிக்கோய் நாங்கள் உன் தன்பால் எங்கள்
மன்னிய மனத்தை யெல்லாம் ஈந்தனம் ஆகையாலே
பொன்னுடல் தழுவி எம்மைக் காத்திடும் என்றார் மன்னோ

4. ஆயர்தம் பெண்டி ரன்று அழுதிடும் அவதி கண்டே
மேயதோர் அன்புபூண்டே யமுனையின் மணற்பரப்பில்
தோயுமோர் இன்பத்தோடு துணைநின்றே ஆடிப்பாடி
ஆயர்தம் மகளிர் துன்பம் அகற்றவே முனைந்தீ ரன்றோ.

5. நிலவொளி மணற்ப ரப்பில் நிலையெலாம் குலைந்தா ராகி
குலவுறு மின்ப மொன்றே குறிக்கொண்ட மகளிர் தங்கள்
விலையுயர் ஆடை யென்னும் விரிப்பிலே படுத்தி ருந்து
இலகுறு விளையாட் டுக்கள் இயற்றிய பெருமை யென்னே.

6. இனிப்புறக் கேலிசெய்தும் இயன்றவர் கைபி டித்தும்
கனியிதழ் முத்தமிட்டும் கட்டியே தழுவிக் கொண்டும்
மனமொத்த மகிழ்ச்சி பொங்க மற்றவர் தங்க ளோடு
எனைவரும் புகலொ ணாத இன்பத்தை யடைந்தா யன்றோ.

7. ஆடையை யொளித்தநாளில் அவர்களுக் களித்த வாக்கைத்
தேடறும் இன்பந்தந்தே தீர்த்தனை உலகந் தன்னில்
வாடலில் மலர்மேல் நீர்போல் அன்னவர் மனத்தி ருந்தே
கூடியே நின்ற தன்மை கூறவும் கூடும்கொல்லோ.

8. உடலிடை வியர்வை தோன்ற உற்றிடும் நோக்கங்கொண்ட
திடமிக்க களிறே உன்னைத்தின்றிடுவோர்க ளென்ன
உடலினைத் தழுவிக்கொண்டே உணர்வெலாம் மறந்தாராகிக்
கெடலரும் அழகுகொண்ட கோபியர் மகிழ்ந்தா ரன்றோ.

9. பிரிவிடைத் துயரும் உன்னைப் பின்னரும் சேரும்போது
அருமைசேர் மகிழ்வும்பொங்க மாந்தர்தாம் அணைந்திருக்க
பெருமையாய்க் கூடும்போதும் மகிழ்வினையளித்தாயென்றால்
அருமறைக் கிறைவா உன்றன் அருமையைக் கண்டார் யாவர்.

10. இராதையின் கொங்கைபற்றி இன்பத்தைத் துய்க்கநீயும்
பராபவமடைந்தே வென்றாய் பரமனே உன்றன் தன்மை
தராதலத்துள்ள பேர்கள் தாமுணர் தன்மைத்தன்றால்
இராவணன் செருக்கடக்கும் இனியனே போற்றி போற்றி.

## அறுபத்தேழாவது தசகம்
## ராசக்கிரீடை (3)

1. போகந்தான் அவர்க்க ளிக்கப் புகலரும் களிப்பு மேவி
ஆகமே புல்லரிக்க அனைவரும் இன்பங் கொண்டே
வேகமார் செருக்க டைந்த விந்தையை என்ன சொல்வேன்
சோகத்தைத் தவிர்ப்பதற்கே குருவாயூர் அமர்ந்த கோவே.

2. திருமகள் கேள்வ னாகித் தொண்டரின் மனத்தின்கண்ணே
திரிந்திடும் கோமான் எம்பால் வந்தனர் இன்பந் தந்தார்
மருவினர் எம்மையென்றே செருக்குற மறைந்தீர் மன்னோ!
திருவிளையாட்டைச் சொல்ல வார்த்தைகள் இல்லைமன்னோ

3. உன்னிடம் அன்பினாலே உயர்ந்திடும் இராதை தன்னை
மன்னிய அன்பினோடு தனியிடத் தழைத்துச் சென்றே
இன்பத்தைத் துய்த்த உன்றன் எண்ணத்தை யென்ன
சொல்வேன்
துன்பத்தைத் துடைக்க வென்றே துணைநிற்கும் குருவாயூரா.

4. மறைந்துநீ சென்றபின்பு மனந்தனை இழந்தஅன்னோர்
நிறைந்திரு பொருளே உன்னை எங்குமேதேடிக்காணார்
உறைந்திடும் அன்பாலன்றி உலகின்பால் உன்னைக் காணல்
பிறந்தவர் யார்க்கும் ஆமோ பேசரும் குருவா யூரா.

5. மாமரக் குயிலேநீதான் மாயனைக் கண்டதுண்டோ
தூய்மைசேர் தென்றலேநீ தோன்றலைக் கண்டதுண்டோ
காமுறு மலர்க்குலங்காள் கண்ணனைக் கண்டீரோ என்
றேமுறு மனத்தராகிக் கோபியர் இனைந்தார்மன்னோ.

6, மனத்திடை ஒருத்தியுன்றன் மாண்புறும் உருவைக்கண்டே
இனத்திடை "இனிய கண்ணன் என்முன்னே வந்தான்" என்றே
புனைவுறும் உரையாற்கூறப் பிறரெலாம் புளகம்கொண்டே
எனைக்காண வருவான்கொல்லோ என்றேங்கி தவிக்கலானார்

7. யமுனையின் கரையின்கண்ணே இன்பமார் கோபியர்கள்
மமதையால் உன்னைத்தேடி மாழ்குறும் நேரந்தன்னில்
திமிதிமென் றேகுங்காலை வழியினில் இராதை தன்னை
உமதருள் திறத்தால் கண்டே உற்சாகம் மேலிட் டார்கள்.

8. இருளது சூழுமட்டும் எம்மருங்கிலுமே தேடி
மருண்டிட ஓடுமந்த யமுனையின் கரையில்கூடி
அருளுருவான உன்தன் இராதையை உடனேகொண்டு
தெருளின்றித் திரிந்த தலைந்தார் அவர்நிலை சொல்லப்
போமோ.

9. வருந்தியே வாடிநின்ற கோபியர் மகிழும் வண்ணம்
திருந்திய வடிவினோடும் சிரித்திடும் முகத்தினோடும்
அருந்திடும் அமுதமென்ன அன்னவர் முன்புதோன்றி
பெருந்துணையாக நின்ற பெற்றியை என்ன சொல்வேன்.

10. மறுபடி காண்போமாநாம் என்றவர் மயங்கி நின்றே
வெறுப்பறும் உவகைமிக்குத் தம்முடை விருப்பமெல்லாம்
திறம்படத் தீர்த்துக் கொண்டே திணறிடச்செய் தாயன்றோ
பொறுப்புறு புனிதர்காக்கும் புங்கவ குருவாயூரா.

## அறுபத்தெட்டாவது தசகம் — ராசக்கிரீடை (4)

1. உன்றனைக் கண்ட போது உவகையாம் கடலில் மூழ்கி
நின்றனர் பேசலாற்றார், நீண்டதோர் மூச்செ றிந்தே
வென்றிடு புலன்கள் கொண்ட விமலனே வெல்லலாகாத்
தின்றிடு காமத் தீயால் செய்வதை மறந்தார் மன்னோ.

2. அவர்களுள் ஒருத்திவந்தே அழகுறும் உன் கைபற்றிக்
கவர்ந்திடு கொங்கை தன்னில் வைத்தனள் தனைமறந்தே
உவப்பினில் மூழ்கநின்றே செய்வதை மறந்து நின்றாள்
தவப்பெருந் தலைவர்க்கெல்லாம் தாயெனும் குருவாயூரா.

3. ஒருத்தியுன் கையைப்பற்றி உற்றதன் கழுத்தில் வைத்து
பெருத்ததோர் மூச்சடங்கி நின்றவள்போல நின்றாள்
வருத்தமே கொண்டோர்க் கெல்லாம் வாட்டங்கள் தம்மை நீக்கி
திருத்தமாம் வாழ்வை நல்கும் குருவாயூர் அமர்ந்த கோவே.

4. நீதின்ற தம்பலத்தை வேறொரு பெ ண்தான் வாங்கி
பாதியைத் தின்றா ளாகிக் காமமாம் பசித ணிந்தே
வேதனை நீங்கப் பெற்றே விளக்கமும் கொண்டுநின்றாள்
சாதனை புரிவோர்க் கெல்லால் துணைசெயும் குருவாயூரா.

5. இரக்கமே இன்றிக் காட்டில் எமை விட்டுச் சென்றாயன்றோ
அரக்கன் போல்சென்றஉன்னை யார்வந்துதொடுவாள்என்றே
உரக்கவே ஒருத்தி கூறி உன்றனை ஏச லானாள்
நிரப்பினை நீக்கி நல்ல நிலையருள் குருவா யூரா.

6. உன்னையே சூழ்ந்தா ராகி உவப்பினில் திளைத்து நிற்கும்
பொன்னனார் குங்கு மஞ்சேர் புடவையாம் ஆச னத்தில்
மன்னிய பெருமா னாகி மகிழ்வுடன் வீற்றி ருந்தாய்
என்னிலையறிந்து காக்க ஏந்தலே வேண்டுகின்றேன்.

7. கருணையின் தன்மையென்னே சிலர் எங்கும் கருணைசெய்வர்
வருபவர் தமக்குமட்டும் வரமருள் வோருமுண்டு
கருணையை வேண்டிநிற்கும் கடைபட்ட எங்கட் குன்றன்
கருணையைக் காட்டாய்ஐய கருணையின் வடிவேஎன்றார்.

8. அன்பினால் என்னைச் சூழ்ந்த அருமைசேர் பெண்களேநீர்
துன்பமே கொள்ளல்வேண்டாம் தூயதாம் அன்பைப்பார்க்க
என்பொருட் டாகச் செய்த செய்கை ஈ தென்று கூறி
அன்பினால் மூழ்கடித்து அவர்களைத் திணறச்செய்தீர்.

9. அடைவுறும் அன்புகொண்ட ஆய்ச்சியர் தம்மைநோக்கித்
தடையேதுமின்றி இந்த யமுனையின் மணலின்கண்ணே
உடனுடன் ஆடிப்பாடி மகிழ்ந்திட லாகுமென்று
அடைவுடன் துன்பப்பட்ட அவர்களை மகிழச்செய்தாய்.

10. இச்சொல்லைக் கேட்டபோதே இன்பத்தின் எல்லைகண்ட
மெச்சரும் கோபியர்கள் உன்னுடன் குலவிநிற்க
எச்செயல் செய்தபோதும் எதிலுமே கலவாநீயும்
இச்சைகள் தம்மையெல்லாம் இணக்கமாய்ப் பூர்த்திசெய்தாய்.

## அறுபத்தொன்பதாவது தசகம் - இராசக் கிரீடை (5)

### வேறு

1. தலைமுடியில் அழகுசெய்யும் மயில்தோகை தரித்தோனாகி
விலையில்லாக் குண்டலங்கள் வனமாலை வாசம்பொங்க
கலைமேவு சந்தனமும் மணமிக்க பூக்களுடன் மகிழ்ச்சி
கொண்டே
நிலையான மஞ்சள்நிற ஆடையுடன் சிலம்புடனே இன்பங்
கண்டாய்

2. புனைவெல்லாம் செய்தபின்னர் கச்சணிந்து குண்டலங்கள்
காதில்தாங்கி
வளைந்ததொரு ஓவியமாய் வனிதையர்கள் புடைசூழ்ந்து
வாழ்த்துகூற
திணைத்துணையும் சோர்வின்றி பலவடிவம் தாங்கினிறே
மனத்தினுக்குப் பொருந்தும்வகை ஆய்ச்சியர்பால்
மகிழ்ந்து நின்றாய்.

3. இவ்விதமாய் கோபியர்கள்புடைசூழ இருந்த உன்றன்
நிலைமைதன்னை
செவ்வியதாம் முறையினிலே நாரதர்தாம் சொலக்கேட்ட
தேவரெல்லாம்
நவ்வியெனும் கண்படைத்த நங்கையர்கள் பணிகள்தாம்
பூட்டிக்கொள்ள
அவ்வியமில் யமுனைகரை வந்தடைந்தார் அழகுதனைக்
காண்பதற்கே.

4. வேணுவுடை கானத்தின் இசைத்திறத்திற்கேற்றவகை
அடியெடுத்து
காணரிய காட்சியுடன் கைவளைகள் குலுங்கிடவே
தமைமறந்தே.

நாணமுடன் தோள்களிலே கைவைத்தே இடையசையும்
ஆடையோடு
பேணுமொரு விளையாட்டை யயர்ந்தமையைப்
போற்றி செய்வேன்.

5. ஆர்வமிக இசைக்கின்ற இசையினிலே தமைமறந்து
அசைவேஇன்றி
சேர்ந்திருந்த தேவருடன் மனைவியரும் செய்தொழிலை
மறந்து போனார்
மார்பிலணி மாலைகளும் உன்னடனந்தனைக் கண்டே
மகிழ்ந்து துள்ளச்
சோர்வின்றி ஆடுமுன்றன் ஆடலினை என்ன சொல்லித்
துதித்தல் செய்வேன்.

6. ஆட்டத்தில் களைப்படைந்த கோபியரில் ஒருத்தியந்த
வேளைதன்னில்
நாட்டத்தை உன்னிடத்தே வைத்ததனால் சோர்வடைந்தே
நடை தளர்ந்து
சேட்டமுறு திருமார்பில் சாய்ந்திடலும் மற்றொருத்தி
கூந்தல்தான் அவிழ்ந்துசோர
வேட்கைமிகு சந்தனஞ்சேர் உன்கையை வினயமுடன் முகர்ந்து
நின்றாள்.

7. கன்னத்தில் முகம்புதைத்துக் கனிவாயின் தம்பலத்தை
கனிவோடுண்டு
பின்னமிலா உனைத்தழுவிப் பூரித்தாள் கோபியங்கே
பேதையாகி
உன்னதமாம் திருமகளுக் குரித்தான உன்மேனி தனைத்தழுவி
உயர்வுகொள்ள
என்னதவம் செய்தனரோ கோபியர்கள் இதன்திறமை யாரே
கண்டார்.

8. பாட்டெல்லாம் ஓய்ந்தபின்பும் மத்தளமும் நின்றபின்பும்
பரிவுகொண்டே
நாட்டமெலாம் உன்னிடத்தில் வைத்ததனால் கச்சையுடன்
மேலாடை நிலையை எண்ணார்
ஆட்டத்தைத் தொடர்ந்தனராய் அமரர்தொழும் உன்மேனி
அழகு தன்னில்
நாட்டமுற்றே அனைத்தையுமே துறந்தங்கு ஆடினரால்
கோபியர்கள்.

9. காமத்தால் உடல்வெதும்பி உன்புணர்ச்சிதனைத் தவிர்க்க
மனமுமின்றி
சேமமுறு தம்நிலையை மறந்தவர்கள் மன்மதனின்
சேட்டைகள் பலவும் சேரக்
தாமுன்னை மறுபடியும் அடைந்திடவே தவிக்கையிலே
பலபலவாம் உருவம் கொண்டே
காமஇச்சைதனைத் தீர்க்கும் பணியினையே கனிவுடனே
பூண்டுநின்றாய்.

10. சோர்வடைந்த கோபியர்க ளுடன் யமுனைநதி குதித்தே
ஆர்வமிக சலக்ரீடை அவர்களுடன் புரிந்தனையால்
அனைவருந்தான்
வேர்வையினால் வியர்த்திட்ட உடல்கழுவித் தூய்மையுடன்
உனையேபோற்றித்
தேர்வரிய உனைத்தங்கள் உரிமையெனத் தேர்ந்தார்கள்
சோர்ந்துபோனார்.

11. யோகியரும் காணரிய உன்னுடைய ஆனந்த
வெள்ளந்தன்னைப்
போகியராய்க் கோபியர்கள் துய்த்திடவே செய்தமையால்
புங்கவா நீ
வாகுமிகும் பிரமனுடன் சிவபெருமான் கோபியரைப்
போற்றும்வண்ணம்
சோகமதை மாற்றி சுகம்பெறவைத்த உன்பெருமை
சொல்லப்போமோ.

# எழுபதாவது தசகம் - சுதர்சனன் சாபவிமோசனம் முதலிய வரலாறு

வேறு

1. ஆனந்தக் களிப்பினோடு ஆய்ச்சியர் தம்மைமேவக்
கோனென நின்றிருந்த கோவலர் உன்றனோடு
மோனமாம் அம்பிகா பதிகோயில் தனைய டைந்தார்
ஆனந்த நந்தக் கோன்தான் மலைப்பாம்பால்
விழுங்கப்பட்டார்.

2. நெருப்பினை எடுத்துவீசி ஆயர்கள் சுட்டபோதும்
உருக்கு லையாதிருக்க உமைவேண்ட பாதந்தன்னால்
சுருக்கெனத் தொட்டகாலை சோதிசேர் விஞ்சயன் தன்
உருக்கொண்டு நிற்கக்கண்டே உவகையில் திளைத்தீர்
மன்னோ.

3. சதர்சனம் தன்னையேந்தும் தூயவ தேவர்என்னை
விதமுறச் சபித்ததாலே மலைப்பாம்பாய்த் திரிந்துவந்தே
இதமுற உமதுபாதம் பட்டதால் சாபம் ஏக
நிதமுனைப் பணியப்பெற்றேன் என்றனன் சுதர்சனன்தான்.

4. பெண்கள்தாம் உம்மைச்சூழ பலராமரோடு நீவிர்
எண்ணிலா விளையாட்டுக்கள் இயற்றிடக் குபேரன் தானும்
நண்பனாம் சங்கசூடன் அவர்களைக் கவர்தலோடும்
உண்மையே அவனை வீழ்த்தி இரதனம் தமயற்கீந்தாய்.

5. வனங்களின் நண்ப ரோடு வாகுற விளையாடுங் கால்
நினைந்தனர் உன்னை எண்ணிக் கோபியர் தமைம றந்தார்
புனைவரும் உருவங் கண்டே தேவரின் பெண்கள் தாமும்
மனமெலாம் உருகி நிற்கும் மாண்புடன் உருகி நின்றார்.

வேறு

6. போசனாம் கஞ்சன் தன் துணைநிற்போன் அரிட்டனென்போன்
பேசரிய பயங்கரமார் தோற்றத்தில் பேரிரைச்சல்
போட்டுக்கொண்டே
கூசுகின்ற கொம்புடனே காளையென உன்னெதிரில்
வந்துநின்றான்
சாசுவதபரமபதம் அன்பருக்கே அருள்கின்ற குருவாயூரா.

வேறு

7. எருதின துருவங்கொண்ட இரக்கமே சற்று மில்லாக்
கருதரும் அரக்கன் தானும் மிகப்பெரும் உருவங்கொண்டே
பெருமைசால் நின்னைச்சற்றும் நினைத்திலன்
உன்னைமாய்க்க
வருகின்ற புயல்போல்வந்து வழியிடை நின்றான்மன்னோ.

8. உயர்ந்துள கொம்புகொண்டே உற்றவர் நடுங்குமாறு
பயங்கொளும் செயல்கள் செய்தே பார்ப்பவர் நடுங்கச்
செய்யும்
மயங்கிய அசுரன் தானும் மாய்த்திட எண்ணும் போது
பயமிலாச் சிறுவன் போல மாய்த்துநீ வெற்றி கண்டாய்.

9. இடபமாம் அசுரன் தன்னை இணையிலா வீரந் தன்னால்
மடமட என்றே மாய்த்த மாபெரும் செயலைக் கண்டு
உடலெலாம் பூரித் தாராய் தேவர்கள் மகிழ்ந்தார் மற்றும்
உடனுனைப் பணிவோர்க் கென்றும் உயர்வருள் குருவா யூரா.

10. காளையைக் கொல்ல இங்கோர் கட்டுடல் காளை யுள்ளான்
நாளையே நீங்க ளெல்லாம் நடுங்குவீர் ஆதலாலே
கேளெனும் கூட்டத் தோடு விரைந்துநீர் செல்க வென்றே
தோளெனத் துணைபுரிந்த தோழர்கள் எண்ணினார்கள்.

## எழுபத்தோராவது தசகம் – கேசிவதம்

1. கஞ்சனின்உறவாயுள்ளோன் காலனின் கொடுமை செய்வோன்
வஞ்சமாய் உன்னைக் கொல்ல கேசியின் விருப்பைஎண்ணி
கொஞ்சமும் சிந்திக்காமல் உன்றனைக் கொல்ல வென்றே
நெஞ்சத்தில் துணிவுகொண்டே குதிரையின் வடிவில் வந்தான்.

2. விஞ்சயனாயிருந்து மன்னோன் கோகுலம் தன்னில் வந்தே
வஞ்சகம் பலவும் செய்தே வதைத்திடும் கொடுமைபூண்டு
கஞ்சனின் பகைவனான உன்றனைக் காணுமட்டும்
கொஞ்சமும் இரக்கமின்றிக் கொடுமைகள் பலவும் செய்தான்.

3. முனிவனாம் பிருந்தா தானும் முன்னவா உன்னைக்காலால்
இனிமையேயின்றி அன்னாள் உதைத்ததைக் கேள்வியுற்றே
கனிவிலா உள்ளத்தான தாட்சர்யன் காலால்உன்றன்
இனிதுறும் மார்பின்கண்ணே எற்றியே உதைத்திட்டானால்.

4. குதிரையாம் அசுரன் உன்னை உதைக்குமுன் அவனை உன்றன்
முதிர்ந்திடு ஞானத்தாலே முந்திநீ உதைத்துத் தள்ள
எதிர்த்திடும் அரக்கன்மேலும் ஏறிய சீற்றத் தோடு
உதைத்திடும் தொழிலில் மேலும் ஊக்கத்தைக்
கொண்டிருந்தான்.

5. அசுந்தனில் அரக்கன் தன்னை அழிப்பதற்கெண்ணிக்கொண்டு
மிசப்பெரு கையதாக உன்கையை வளரவிட்டே
தொசப்பெறும் வாயை ஆங்கே தூள்தூளாச் செய்துவிட்டாய்
நகைப்பிற்கே உரியதாகும் நன்றிலான் செய்தசெய்கை.

6. மந்திரம் ஏதுமின்றி மகமதும் இயற்றலின்றித்
தந்திரத்தாலே யந்த அரக்கனை அழித்ததாலே
அந்தரம் தன்னிலுள்ள தேவர்கள் ஒன்றுகூடி
உந்தனைக் கேசவன்தான் என்றென்று புகழலானார்.

7. கஞ்சன்பால் நாரதர்தாம் நல்லுரை பலபகன்றே
எஞ்சலில் வாசுதேவன் இன்புறுமைந்த னென்றே
கொஞ்சமும் ஐயமின்றிக் கூறிப்பின் உனையடைந்தே
நெஞ்சினில் அன்பினோடும் நின்றனைத் துதிகள் செய்தான்.

8. தேவர்கள் பலரும்சூழ வானிடை திரிந்த போது
தேவர்கள் தச்ச னான மயன்மைந்தன் வ்யோம னென்பான்
தேவர்கள் தம்மை வாட்டித் தேவர்கள் தலைவ னான
தேவனாம் உன்னைத் தேடி ஓடியே வந்திட் டானால்.

9. கோவலர் கோக்க ளோடு கூடியே செல்லும்போது
ஆவலில் கண்ணைப்பொத்தும் அவ்வகை ஆட்டம்தன்னில்
மேவினன் கோக்களோடு கோவலர் தம்மைச்சேர்த்து
ஓவலில் குகையில்மூட் உடன்சென்றே அவனைக்கொன்றாய்.

10. கோகுலம்தன்னில் வாழும் கோவலர் குறைதவிர்த்தே
ஆகுலம் தனையகற்றி அன்னவர் மகிழ்ச்சிபொங்கி
ஏகுதற்கிசை விலாது உன்னையே சூழ்ந்துசுற்றி
நாகுகள் பசுவைக்கண்ட தன்மைபோல் நின்றிருந்தார்.

## எழுபத்திரண்டாவது தசகம் - அக்ரூர(கமனம்)

1. நாரதர் சொன்ன வார்த்தை செவிப்படக் கஞ்சன்தானும்
நேர்மையே உயிராக் கொண்ட அக்ரூரர்தமை அழைத்து
சோர்வறும் தனியாகந்தான் தொடங்கு வதாகஉன்னை
வேருடன் அழிக்க வேண்டி விடுத்தனன் தூதராக.

2. உன்னையே காணுதற்கு உள்ளத்தில் கொண்டிருந்தும்
நின்னுதல் போன்ற தீயன் கஞ்சனின் தீமையாலே
உன்னையே காணா தேங்கித்தவித்தவன் உன்னைக்கான
நன்னெஞ்சங்கொண்டானாகி விரைந்தனன் உன்னைக் காண.

3. அக்ரூரர் உன்னைக்காண இரதத்தில் ஏறிக்கொண்டு
பக்குவமான தானமாபெரும் இரதத்தைத் தூண்டி
எக்கதி வருமோஎன்ற ஏக்கத்தில் உன்னைக்கண்டு
தக்கதோர் வழியைத்தேடி தவித்தனர் புறப்பட்டார் காண்.

4. வேதங்கள் காண லாகா வித்தகன் நாதன் தன்னை
ஏதுநான்கண்டு கொள்ளல் இணைந்திடத் தழுவிக்கொள்ளல்
வேதனை நீங்க லேது வித்தகன் பேசு வானோ
சோதனை போலு மென்றே துதித்தனர் தொடர்ந்து வந்தார்.

5. உன்னுடைப் பாதம் பட்டே உத்தம மான தான
நன்னரராம் பிரமனோடு சிவனுமே வந்து சேரும்
பொன்னொளிர்பிருந்தை தன்னில் புகுந்துறை தலைம றந்தார்
என்னெனச் சொல்வேன் அந்நாள் அன்னவன் தன்மைதன்னை.

6. நீசென்ற இடங்கள்கண்டே வணங்கினர் உன்தன்பாதம்
மாசறப்பட்டிருந்த இடமெலாம் கண்டு வந்தார்
பாசத்தால் அன்னார்செய்த செயல்களைக் கூறஎண்ணில்
நேசமார் உனது தொண்டர் யாருமே நிகரிலைகாண்.

7. அன்னவுர் உன்துகான மழையினால் அழகுபெற்ற
பொன்னெனத் துலங்கும் ஆயர் பாடியைக் கண்டு கொண்டே
என்னெனப் புகழலாகா உன்னுடைய மாளி கைக்கண்
தன்னையே மறந்தாராகி தாம்வந்து சேர்ந்தாரன்றே.

8. பசுக்கள்பால் கறத்தல் தன்னைப் பார்த்தனை மகிழ்ந்தாய்
ஆங்கே

தசும்புறும் இன்பம் பொங்கத் தமையனோ டிருந்தாய் ஆங்கே
விசும்பெழ நிமிர்ந்த இன்பக் கடலினைத் திறந்திருந்தாய்
பசும்பொன்னின் மேனிதன்னைப் பார்த்தனர் அக்குரூரர்.

9. மாலையில் மாலைதாங்கி மஞ்சட்பட் டதைத் தரித்தே
சோலையின் மலர்கள்போலத் துணைவராம் தமையனோடும்
மேலொரு புனைவிலாமல் மிகமிக எளிமையாகச்
சாலவும் நின்றஉன்னைச் சரித்திர புருஷன்கண்டார்.

10. தூரத்தில் வந்தபோதே துரிதமாய் நடந்துசென்றே
மார்புறத் தழுவியுன்றன் தமயனை உடனழைத்தே
சார்வுறும் அன்பினாலே தக்கவாம் உரைகள்கூறி
நேர்மையின் சிகரந்தன்னை அரண்மனை கொண்டுசேர்ந்தாய்.

12. நந்தகோபருடன் சேர்ந்தேநீ நல்வகை பூசைசெய்தே
சிந்தனை தெளிந்தே ஆயர்செப்பிய உரையைக்கேட்டு
வந்ததோர் செய்திகெட்டே வகைவகையாகப்பேசி
பந்தமே யகன்ற நீயும் பரிவுடன் திகழ்ந்தாயன்றோ.

## எழுபத்து மூன்றாவது தசகம் - மதுரைக்குப் புறப்படுதல்.

1. மதுரைநீ செல்லுதற்கு மனத்தினில் எண்ணங் கொள்ள
இதுவென்ன இதுவென்னென்றே கோபியர் உளமறிந்தே
துதித்தனர் தொழுதா ராகித் துயர்க்கடல் தன்னில்மூழ்கி
விதவித மாகப் பேசி வினயங்கள் செய்து நின்றார்.

2. கருணையின் கடலாய் நிற்கும் நந்தனின் மைந்தன் தானும்
ஒருவரும் துணையி லாமல் உள்ளத்தைக் கொண்டு செல்ல
பெருகிய செய்கை என்னே என்றவர் பிதற்றிக் கொண்டே
தெரிவது யாவதென்றே தேர்ந்திடார் புலம்பு கின்றார்.

3. இரவின்தன் கடையா மத்தில் எண்ணிய பயணம்தன்னை
விரவிய ஊக்கத்தோடும் செய்திட விழைந்தநீயும்
பரவிடும் கோபியர்கள் பதற்றம்தான் தணியுமாறு
கரவிலா நன்பன்தன்னை அனுப்பினை சாந்தம்செய்ய.

4. திரும்பவும் இங்கேவந்து திருவுளப் பாங்கின்வண்ணம்
விரும்பிய வண்ணம் லீலாவினோதங்கள் செய்வேன்மேலும்
வருந்திட வேண்டாவென்றே வாட்டத்தைத் தவிர்க்குமாறு
அரும்பிடும் புன்னகைக்கண் அவர்களுக் குரைக்கச் சொன்னாய்.

5. நீண்டதோர் தூரந்தன்னை நீசென்றே அடையுமட்டும்
பூண்டதோர் அன்பினாலே கோபியர் புறத்தேநோக்கி
மாண்புறும் அழகைக்கண்டே மனந்தனில் மகிழ்ச்சிபொங்க
தூண்டிய தேரி லேறி அண்ணனும் தொடரச் சென்றாய்.

6. கோவலர் வண்டிகள்தாம் கூடியே தொடர்ந்துபோகும்
ஆவலில் கோபியர்கள் அவரவர் இடத்தில்நிற்க
மேவிய சோலைசூழ்ந்த ஆயர்தம் பாடிநீங்கி
தேவரும் போற்றுகின்ற யமுனையை யடைந்தாயன்றோ.

7. காலையின் நியமந்தன்னைச் செல்திட அக்குரூரர்
வேலைபோன்றிருப்பதானயமுனையில் மூழ்கலோடும்
காலையின் கதிரே போலும் உன்றனை நீரின்கண்ணும்
ஞாலம் போல் தேரின்கண்ணும் கண்டனர் நனிவியந்தார்.

8. தன்னைத்தான் மறந்தாராகி தகுமுறை பலவும்போற்றி
பின்னமில் உளத்தராகிக் கடமைகள் யாவும்செய்தே
நன்மைசேர் உள்ளத்தோடு நாட்டத்தை உன்பால் கொண்டே
தன்னையே யுணரா ராகித் தாயெனும் உனைப்பணிந்தார்.

9. புண்ணிய வடிவமான புங்கவன் நீரில் மூழ்க
எண்ணரும் சங்கி னோடும் சக்கரம் கதையி னோடும்
நண்ணரும் மலரும்தாங்கி சேடனின் படுக்கை மீது
புண்ணிய மூர்த்தி யாகப் பூரிப்பாய் உன்னைக் கண்டார்.

10. நீரின்கண் குளிர்ச்சிதானும் மிகுந்ததோ என்றே எண்ணித்
தேரினில் ஏறிக் கொண்டே திருமார்பன் உன்னைக் கண்டார்
வேரினில் நீரேபோல விந்தைசேர் உன்றனன்பை
யார்வலார் கூறுதற்கே என்னவ குருவாயூரா.

# எழுபத்துநான்காவது தசகம் – மதுராபுரி பிரவேசம்

வேறு

1. பகல்நேரம் பாதிசென்று மதுரைநகர் அடைதலுமே
மகிழ்ச்சிபொங்கி
இகல் கடக்கும் நெடுமாலே உனைக்காண நகரத்தின்
மாந்தரெல்லாம்
தகதகென எரித்திட்ட வெய்யிலையும் தாம்சற்றும் கருதாராகி
மிகவிரும்பி உன்றனையே வைத்தகண் வாங்காமல்
பார்த்திருந்தார்

2. உன்னுடைய பாதம்போல் சிவந்திட்டஅழகியரும் உன்னுடைய
மேனிபோன்ற
பொன்னுருவாய்க் கொங்கை கொண்டோர் உன்கண்ணின்
அழகு போல
மன்னுமொரு பார்வை கொண்டோர் மார்பெனவே
ஆரம்கொண்டோர்
உன்னுடைய புன்னகை போல் புண்ணியர்கள் நகையணிந்தே
உன்னைக்கண்டார்,

3. தெருவெங்கும் நிலவுகிற காட்சிகளைக் கண்டுளந்தான்
களித்தகாலை
உருவத்தில் சிறந்தவனாம் துணிவெளுப்போன் துகிலேந்திச்
சென்றபோது
இருஇங்கே இவ்வாடை தாவென்ன மன்னரது தாரேதென்ன
உருவியஉன் வாளாளே தலைகொய்து பரமபதம்
தவிநின்றாய்.

(வேறு)

4. ஆடையைத் தைப்போனங்கோர் ஆடையை யளித்தலோடும்
கோடலில் மனத்தினோடும் அவனுக்கும் மோட்சம் தந்தீர்
வாடலில் மலர்கள் கொண்டே மாலைகள் ஒருவன்சாத்த
தேட்டும் செல்வம் தந்தே சிறப்புகள் பலவும்செய்தீர்.

5. வழியினில் முதுகுகூனி வழிபட்ட ஒருத்திதன்னை
அழிவிலா அழகுபொங்கக் கூனது நீங்குமாறு
கழிபெரும் உவகையோடு கவலைகள் மறக்கச்செய்தே
ஒழிவரும் உள்ளன்போடு உன்னையே போற்றச்செய்தாய்.

6. உன்றனைக் கண்டபேர்கள் உவகையால் கையின்கண்ணே
நின்றதம் நிலைமைக்கேற்ப ஏதேனும் கொண்டுநின்றார்
பொன்றலில் அவர்கள்போல யானங்கு இல்லையாக
இன்றிந்த உலகவாதை எத்தனை சுமப்பேனப்பா!

7. கூனியும் உன்பால் வைத்த உள்ளத்தை மாற்றாளாகி
தேனிலுமினிய உன்றன் சொற்களைக் கேட்களண்ணி
தானங்கு நின்றபோது கூட்டத்தின் இடையேபுக்காய்
வானந்தான் வழுத்திநிற்க தேவகி பால்சுரந்தாள்.

8. அங்கிருந் தனைவ ருந்தான் அதிசயித் துன்னை நோக்கப்
பொங்கிய உவகையோடு பூசையில் இருந்தவில்லை
அங்கிருந்தனைவருந்தான் அதிச நோக்கில் நோக்கப்
புங்கவன் நாணையேற்றி உடைத்தனை புடைத்துநின்றாய்.

9. மறுநாளில் கம்சன்தானும் மாண்பின்றிச் சாவதற்குப்
பெருகிற சகுனமாக வில்லது உடைதலோடும்
உருவிலே பருத்த அன்னோன் உடலெலாம் பதைபதைக்கத்
திருவெலாம் இழந்தற்போன்றோர் நிலையதை
யடையலானான்.

10. நல்லவர் அன்பினோடும் கெட்டவர் வெறுப்பினோடும்
வெல்லரும் அழகைக்கண்டு வியந்திடத் தாமன்தன்பால்
சொல்லினை இராதை உன்னைப் பிரிந்ததோர் துயரந்தன்னை
வெல்வதே தொழிலாய்நின்ற வித்தகா குருவாயூரா.

# எழுபத்தைந்தாவது தசகம் – கம்சவதம்

1. காலையிலே மல்லருடன் போர்புரியும் கருத்தினையே
கஞ்சன்தானும்
மூலைமுடுக் கெல்லாமே பறையறைந்து மொழிந்திடவும்
மற்போருக்குச்
சோலையிலே பசுமையென அண்ணனுடன் களத்தின்கண்
தோன்றிநின்றாய்
சாலவுமே நீவரவும் குவலயா பீடமெனும் யானையது
நின்றதங்கே.

2. பாகனைநீர் கடிந்தவராய் வழிவிட்டே விலகுகெனப்
பகர்தலோடும்
நகமெனும் துதிக்கையினால் யானையது உனைப்பிடித்தே
நலிதல் செய்ய
சோகமின்றி துதிக்கைதனை விடுவித்தே கால்களிலே
புகுந்தாயுந்தன்
ஆகத்தில் படுத்திருந்த கோபியரின் கொங்கையென
மத்தகந்தான் இருந்ததன்றோ

3. கைக்கெட்டும் தொலைவினிலே இருந்துமந்த யானைதனைக்
கொல்லா ராகி
துய்க்கட்டும் உன்விளையாட்டனைவருமே என்றெண்ணித்
துதிக்கையேறி
கைக்கெட்டும் தந்தத்தை உடைத்துதிர்ந்த முத்துக்கள்
இராதையவள் கழுத்தினுக்கு
புக்குயர்ந்த மாலையெனத் திகழட்டும் எனப்புகன்றே
நண்பனிடம் ஈந்தாயன்றோ.

4. தந்தத்தைக் கையின்கண் ஏந்தியநீ மற்போர் செய்ய
விந்தைமிகும் அண்ணனுடன் சென்றிடவும் கண்டவர்கள்
வியப்புமிக்கே
நந்தன்தான் புண்ணியனோயசோதைதான் புண்ணியளோ
நவிலொணாத
சிந்தைசெயும் கோபியரோ அனைவருமோ என்றெண்ணி
மிகமகிழ்ந்தார்.

5. புண்ணியத்தின் வடிவமென ஆயரிடம் நீதோன்றி புரிந்தலீலை
எண்ணுதற்கே இயலாமல் இருந்ததுகான் இன்றுநீ செய்யும்இந்த
கண்கொள்ளாக் காட்சியினால் உன்பெருமை காசினியில்
எங்கும்செல்லும்
மண்ணளந்த மாயவனே எனைக்காப்பாய் குருவாயூர்
மன்னும்கோவே

6. அரசனுடை ஆணையினால் சாணூர மல்லனென்போன்
உன்பால்மோத
உரசியவன் உடம்பெல்லாம் இரத்தமது ஆறாகப்
பெருக்கெடுக்க
உயிரதுவும் ஊசலுறப் பேதமையால் சாணூரன் பதை
பதைத்தான்
பெரும்பிடியில் சிக்கியவன் தவித்திடவே விளையாடி
நின்றாயங்கே

7. பார்த்தவர்கள் குழந்தைகளை மல்லருடன் மோதவிடல்
கொடுமையன்றோ
சேர்த்திடுத லாகுமிந்த தீமைதனைத் தடுத்திடவே முயல்வோ
மென்றே
வேர்த்திடவும் சாணூ ரன்தனை ஓங்கித் தரைதன்னில்
அடித்தபோது
சேர்ந்தங்கே பலராமன் முட்டிகளை வீழ்த்திடவும் பிறமல்லர்
ஓடிப்போனார்

8. புத்தியிலே பேதலித்த கஞ்சனுந்தான் உத்தமரைக்
கொல்லவென ஏவிவிட்டே
மெத்தவே உன்றன்னை விரட்டவெனக்கூறிடலும்
விரைந்துநீயும்
கொத்தவரும் கருடன்மேல் ஏறுதல்போல் அவன்மீதில்
தாவிச்சென்றே
எத்தனையும் பிடிப்பரிய அன்னவனைப் பிடித்தேநீ நகைத்து
நின்றாய்.

9. அன்னவனின் மூட்டுகள்தாம் உடைந்தவன்தான் அவனியிலே
வீழ்தலோடும்
முன்னவன்தான் செய்திட்ட புண்ணியத்தால் பரமபதம்
முன்னினானால்

என்னுறினும் முற்பிறவி தன்னிலவன் உன்றன்னால்
கொல்லப்பட்ட
உன்னதமே யாமஸ்றோ குருவாயூர் கொற்றவனே
உன்தாள்போற்றி.

10. தம்பியர்கள் எண்மரையும் தரைமோதி தகனமாக்கி
நம்பியுனைக் காணவென இருந்திட்ட தாய்தந்தைதமை
வணங்கி
இம்பரிலே புகழ்பெற்ற அக்ரூரன் தனையாளப்
பணித்துபின்னை
உம்பெருமை விளங்கும்வகை மதுரையிலே உத்தர காடுறைநீ
தீர் மன்னோ

## எழுபத்தாறாவது தசகம் உத்தவர் தூது

### வேறு

1. அனைத்தையும் அறிந்திருந்தும் அறியாய் போல் கல்விதனைக்
கற்க எண்ணி
தினைத்துணையும் தீங்கில்லாச் சாந்தீபர் இடத்தினிலே
சென்றுநீங்கள்
மனத்தினிலே அறுபத்துநான்கான நாள்களுக்குள் அவைகள்
கற்றே
இனைத்திருந்த அவர்மகிழ மகன்தன்னை உயிர்ப்பித்தே
இன்பந்தந்தீர்.

2. அன்பினால் உனையடைந்த கோபியர்கள் மனமகிழ அவர்கள்
தந்த
இன்பமதை எண்ணி எண்ணி ஏங்குங்கால் ஒருநாளில்
உன்றன் நண்பன்
அன்பினிலே சிறந்தவனாம் உத்தவனை அனுப்பிவைத்தே
காணச் சொன்னாய்
என்புருகப் பாடுபவர் துயர்தீர்க்கும் குருவாயூர் எம்மான் நீயே.

3. உத்தவர்தாம் மாலையிலே கோகுலத்தை யடைந்தனராய்
நந்தகோப
உத்தமர்பால் உமைப்பற்றிக் கூறிடவும் உவகையிலே
குளித்தெழுந்தார்
எத்தனையும் பேதமிலாக் உன்னையெண்ணும் கோபியர்கள்
ஓடிவந்தே
உத்தமனே உனைப்பற்றி யறிந்திடவே மனந்தனிலே
உவகைபூண்டார்.

4. உன்னைப்போல் உத்தமர் தாம் உடையுடுத்தே
இருந்திட்டாரால்
பொன்னாலும் பூவாலும் பூசனைகள் பலபுரிந்து உறுதி
யெண்ணித்
தன்னிலையை மறந்தவராய்க் கோபியர்கள் புகழ்ந்து
நின்றார்
என்னெனவே புகன்றிடுவேன் உன்லீலை குருவாயூர் ஏற்றங்
கொண்டோய்.

5. தந்தையுடை நலன்கண்டே தனயனிடம் கூறிடவே
வந்திரன்றோ
எந்தமது நிலைசற்றும் எண்ணவிலை அணைப்பாலே எம்மை
எல்லாம்
சிந்தை தெளிவில்லாமல் செய்திட்ட கண்ணனவன் எவ்வா
றுள்ளான்
விந்தைமிகும் அழகிகள்பால் விருப்புற்றான் எங்கே என்றார்.

6. தழுவிளமைக் காமத்தால் கலகிவிட்டே கண்காணாமல்
நழுவிட்ட நாயகனை இனிஎங்கே சென்று காண்போம்
அழுகையினால் உடலெல்லாம் நனைகின்ற செய்கைசெய்த
தொழுகின்ற மேன்மைமிகு தூயவனைக் காண்போமாஎனத்
துவண்டார்.

7. மனமுருகிப் பேசுகின்ற கோபியர்கள் மனந்தன்னில்மன்னுமாறு
புனத்துழாய்தனை யணிந்த புங்கவனே முனிவர்தான்
உறுதிகூறக்
கனத்திருந்த துயர்தணிந்தார் அன்னவர்பால் உன்னுடைய
பெருமையெல்லாம்
மனந்திறந்தே மொழிந்தவராய்ச் சிலகாலம் அங்கிருந்தார்.

8. இரவினிலும் பகலிலும் இயற்றுகின்ற பணியினிலும் உன்னைப்
போற்றித்
கரவில்லா மனத்துடனே கருத்தெல்லாம் இனித்திடவே
தமைமறந்தார்
இரவில்வரும் கனவினிலும் உனைக்கண்டே வரம்பில்லா
இன்பங்கொண்டார்
திருவினுக்கே உரித்தான உன்மார்பைத் தினந்தினமும்
துதிக்கலானார்.

9. உன்னிடத்தில் அன்புகொண்டே இராதையுடை
உயர்குணத்தை உத்தமர்தான் அந்தநேரம்
நின்னுடைய சொற்களினால் ஒருத்தியுடை மனம்பதிய
நிகழ்த்தலானார்
என்சொலிலும் மவுனத்தைக் கொண்டிருந்த இராதையவள்
நிலைதன்னை எடுத்துச் சொல்லி
தன்மனமும் உருகும்வகை சிலபலவும் அவ்விடத்தே
பலபலவாய்க் கூறிநின்றார்.

10. விரைவினிலே வந்தங்கே உம்முடைய விருப்பங்கள் யாவையுமே
தீர்த்துவைப்பேன்
பெருமைமிகு ஆயர்தம் பெண்டுகளே என்கடமை தீர்ந்த
பின்னே
பொருமாதீர் என்றுரைத்த பொன்மொழிகள் யாவையுமே
புகன்றானன்றே
அருமைமிகு முனிவரெலாம் போற்றுகின்ற ஆற்றல்மிகு
தவத்தில் மிக்கோய்.

11. இத்தகைய பத்திதனைஇவ்வுலகில் எவ்விடத்தும்கண்டதில்லை
சித்தத்தில் உமைவைத்தே வழிபாடு நிதநிதமும் செய்துவாழும்
உத்தமராம் கோபியரின் பத்தியைப்போல் உலகெங்கும்
கேட்டதில்லை
நத்திவரும் அடியவரின் துயர்தீர்க்கும் நாயகனே
என்றுரைத்தார்.

## எழுபத்தேழாவது தசகம்
## ஜராசந்தன் படையெடுப்பு

1. உன்றன்னைத் தினந்தினமும் நினைந்துருகி உன்பெருமை
தன்னைக்கூறித்
தின்றிடுமோர் காமத்தால் மனம் வருந்தித் தேம்பிநின்றே
உன்வரவை எதிர்பார்த்தே வீட்டுடனே தனைப்புனைந்து
சைரந்திரியின்
பொன்பரந்த வீட்டுனுக்கே உத்தவரை உடனழைத்துச்
சென்றாயன்றோ.

2. உனைக்கண்டே தன்கொங்கை குலுங்கிடவே மகிழ்ச்சிமிக்கு
புனைந்தவளாய்ப் போகமுறும் நோக்கத்தில் உன்னைக்காணத்
தனியிடத்தே நீயவனைக் கொண்டுசென்று காமத்தைத்
தணித்தியன்றோ
இனிப்பவர்கட் கினியவனே குருவாயூர் எம்மரசே அடிகள்
போற்றி

3. என்னவரம் வேண்டுமென நீகேட்க அன்னவரும் மதிமயங்கி
உன்னைஎன்றும் தழுவுகின்ற உயர்வரமே தருகவென்றாள்
கன்னல்திகர் மொழியாகும் காணாரிய வீட்டினையே
கேட்கவில்லை
பின்னமின்றி அருகிருக்கும் பெரும்பேரும் கேட்காமல்
நின்றாள்மன்னோ.

4. சிலகாலம் அவளுடனே சேர்ந்திருந்தே இன்பம்நல்கி
உலகுபுகழ் புத்திரனாம் உபச் லோகன்தனை யளித்தே
உவகைபூண்டாய்
பலகலையும் நாரதர்பால் பயின்றவனாய்ப் பண்பெல்லாம்
மிகவும்பெற்றே
இலகுமொரு நிலைபெற்றாள் குருவாயூர் கோவே அன்னாள்.

5. அன்புமிகு மக்ருவர் வீடடைந்தே அன்னவர்தாம் பூசிக்க
அன்புகொண்டே
பின்புன்றன் அண்ணனையே பாண்டவர்பால் செலவிடுத்தே
அனவர் எங்கள்
அன்னவர்க்கும் திருதனுக்கும் உள்ளநிலை என்னவென
அறியவெண்ணாப்
பின்னமிலா உரையனைத்தும் கேட்டனையால் குருவாயூர்
பிள்ளாய் நீயே!

6. மருமகனாம் கஞ்சன் செயல் ஜராசந்தன் மனதை வாட்டக்
கருவறுத்தே உமைமாய்க்கச் சூழ்ச்சிபல செய்தானாகி
வருவதனை உணராமல் மதுரையினைச் சூழ்ந்தானால்
மதியேஇன்றி
பெருமையுடன் நீ சென்றே பலபடைகள் அழிந்திடவே
வழியும் செய்தாய்

7. பலராமன் பலத்தாலே அவன்தன்னைப் பாசத்தால்
பிணித்தலோடும்
சிலகாலம் சென்றவனைக் கொல்லவெண்ணிச் சேனையுடன்
வருகவென்றாய்
நிலையாகத் திக்குகளை வென்றதனால் நீள்படைகள்
கொண்டவனாய் நிமிர்ந்துநின்ற
உலகனைத்தும் பயமுறுத்தும் உலுத்தனைநீ அழிக்காமல்
அனுப்பி வைத்தாய்

8. தோல்வி கண்டே துணிவின்றிச் சராசந்தன் துணிவின்றி
இருந்தபோதும்
வேலேந்தும் வேந்தர்களின் ஏவலினால் அறிவிழந்தே
விளக்கமின்றி
சாலவுமே பகைத்தெழுந்து பதினாறுமுறை தோற்றுப்
பரிதவித்தான்
கோலேந்தி அவன்சேனை பலமனைத்தும் குலைத்தாயன்றோ.

9. பின்னொருநாள் சராசந்தன் பதினெட்டாம் முறையாகப்
படையெடுத்தே
மன்னுமொரு போர்தொடுக்க யவனர்கள் மூன்றுகோடி
முன்னிற்க நீஎண்ணிக் கடல்நடுவே துவாரகையை அமைக்கச்
செய்தே
உன்னவர்கள் அனைவரையும் அங்கழைத்து அமைதியுடன்
உறங்கச்செய்தாய்

10. தாமரையின் மாலைதனைத் தரித்தவராய் மதுரைவிட்டே
வந்தஉன்னை
காமத்தால் மதியிழந்த யவனன்தான் துரத்துதலும்
குகையின்கண்ணே
சேமமுற இருந்திடலும் முசுகுந்தர் தமையவன்தான்
கால்களாலே
நேமமின்றி உதைத்திடவே நிர்மூலனமானாகாண் காட்சி
தந்தாய்

11. அரசர்களில் பரம்பரையில் இக்குவாகு மரபினிலே
அவதரித்தோன்
பரவுகின்றேன் பரமபதம் ஒன்றேயான் வேண்டுகின்றேன்
திரணமும் நான் இவ்வுலக இன்பத்தை வேண்டேனென்ன
மருவில்லாய்த் தவம் செய்தே எனையடைக எனப்புகன்றாய்.

12. மதுரைநகர் சென்றடைந்தே யவனர்களின் சேனையெலாம்
மண்ணைக்கவ்வ
அதிரடியால் சராசந்தன் தாக்குதற்கோர் அமயம்தந்தே
துதிமேவும் துவரை நகர்தனை நோக்கித் தமயனுடன்
செல்லலுற்றாய்
கதியாகி வந்தவரைக் காக்கின்ற குருவாயூர் கர்த்தாநீயே.

# எழுபத்தெட்டாவது தசகம்
# ரேவதீ பலராம கல்யாணம்

வேறு

1. தேவர்கள் உலகில்வாழும் சிற்பிகள் சேர்ந்துநின்றே
ஆவலில் அமைத்ததான அழகுசேர் துவரைதன்னை
மேவிடும் அழகுமேலும் மிளிர்ந்திடச் செய்யவைத்தே
ஆவியின் மிக்கோனான அண்ணனின் மணமுடித்தாய்.

2. ரேவதன் மகளாய்நின்ற ரேவதிதன்னை அன்னான்
ஒவலில் அன்புகொண்ட பலராமற்களித்தலோடும்
மேவிய மகிழ்ச்சிபொங்க யாதவர் தம்மைச் சேர்த்தே
ஆவலித் தன்னாள் நீயும் அளவறும் மகிழ்ச்சிகொண்டாய்.

3. விதர்ப்பனின் மகளாய்த் தோன்றி ருக்மணி உனைமணக்க
அதற்கொரு நேரந்தேடி அன்புடன் வழிபாடாற்ற
எதற்குமே அஞ்சானான அண்ணனாம் ருக்மிதானும்
அதமானாம் சிசுபாலற்கே மணம்செய்ய ஆசைகொண்டான்.

4. நீண்டநாள் உன்னையெண்ணி நினைவெலாம் உன்பால்
வைத்தே
தூண்டிய காமத் தீயால் துவண்டனள் தன்கருத்தை
மாண்புகள் அனைத்தும் சேர்ந்த வேதியன் தன்பால் கூறி
ஆண்டகை உன்னிடத்தில் தூதென அனுப்பி வைத்தாள்.

5. வேதியன் தூத னாகி விரைந்தனன் துவாரகைக்கே
பேதித்த உள்ளங் கொண்டோர் அடையொணாப் பதியைக்
கண்டான்
ஆதியாம் உன்னால் அன்னோன் அருச்சனை செய்யப்பெற்றே
சேதியைச் சொல்லுதற்கே சித்தத்தில் தெளிவுபெற்றான்.

6. குண்டினபுரத்தில் வாழும் குலத்தினில் மேன்மை
கொண்டோள்
எண்டிசை போற்றுகின்ற எழில்மிக்காள் ருக்மணிதான்
கண்டுன்பால் கருத்தைச் சொல்லக் கடையனை அனுப்பி
வைத்தாள்
விண்டிட இயலாத்துன்ப வேதனை மிகுந்துள்ளாளால்.

7. உன்னுடை குணங்களென்றன் உள்ளத்தில் பதிந்ததாலே
நின்னிடை மனதை எல்லாம் நிலைத்திடச் செய்துவிட்டேன்
என்னுடை அண்ணன் என்னைச் சிசுபாலற் கீவதற்கே
தன்னுடைய மனத்தின் கண்ணே தகாதன எண்ணி விட்டான்.

8. கைவிட எண்ணினாயேல் கடையனேன் வாழ மாட்டேன்
மெய்யிதுவென்றே இந்த மேதினிக்கழகிகூற
செய்வதொன்றறிந்திலாது சோர்வுடன் வந்தேனென்று
உய்வருள் உந்தன்சித்தம் கலங்கிட உரையும் செய்தான்.

9. நான் கொண்ட காமந்தன்னை நவின்றிடச் சொற்களில்லை
தேனென இனிக்கும் சொல்லால் திருவுளம் குளிரப் பெற்றேன்
நான்வந்தே அவளை இங்கு நலிவின்றிக் கொண்டுவந்து
வானவர் மகிழுமாறு வதுவையும் செய்வேனென்றாய்.

10. சொல்லிய உடனேநீயும் தூயதோர் தேரி லேறி
வெல்லுதற்கரியாய் மேலாம் குண்டினபுரியை நோக்கிச்
சொல்லரும் வேகத்தோடும் தேரது செல்லு மாறு
எல்லரும் அதிசயிக்க ஏற்றமாய்ச் சென்றா யன்றோ.

# எழுபத்தொன்பதாவது தசகம்
## ருக்மணீ கல்யாணம்

1, சேனைகள் அண்ணனோடு குண்டினபுரிக்குச் செல்ல
ஞானமே உருவாம் பீஷ்மன் நன்கனம் உபச ரிக்க
ஆனஉன் கருத்தை யெல்லாம் அந்தணன் கூறக் கேட்டே
தீனமாய் அந்தணர்க்கே திருவெலாம் களிப்ப ஈந்தாள்

2. உலகெலாம் போற்றுமுன்றன் உன்னத மேனி கண்டு
நிலைகொளா நகரமக்கள் ருக்மியின் நேர்மையற்ற
புலைத்தொழில் தன்னை எண்ணிப் புலர்ந்திடுமட்டுமாங்கே
பலப்பல பன்னிப்பேசி பரிதவித் திருந்தார் மன்னோ.

3. உன்னையே எண்ணுகின்ற ருக்மணி மற்றைநாளில்
பொன்னணி பலவும்பூண்டே பொங்கிடும் உவகையோடும்
தன்னுடை தெய்வமான அம்பிகை தனைவ ணங்க
இன்பமே பொங்க எண்ணிஉனை நினைந்தேகினாளே.

4, அரசனின் மகளுமாங்கே அளவிலா மகிழ்ச்சி யோடு
பரவினள் பணிந்தாள் மற்றும் பராபனா தன்னிடத்தில்
முரசொலி முழங்க உன்னை யடைந்திட முறையீ டிட்டே
விரையுறு மலர்கள் தூவி வேண்டுதல் செய்து நின்றாள்.

5. அன்னவள் தன்னைக் காண அரசர்கள் ஆவல் கொள்ள
பொன்மனச் செம்மல் நீயும் பூசைகள் முடித்துக் கொண்டு
வன்னமாய் வருத லோடும் வழிந்தோடும் அன்பி னாலே
என்னுடை யவளென் றெண்ணி எதிர்படக் கண்டா யன்றோ.

6. உலகமே மயங்கி நிற்கும் உன்னத உருவினாளை
பலகலை பயின்றநீயும் பார்த்ததும் அணங்கனாளும்
விலையிலாக் கடைக்கண் வீச்சால் விழுங்கிட நீயுமாங்கே
நிலைமையை மறந்தன்னாளின் அழகிலே நீந்தலானாய்.

7. மதிமுகம் படைத்த நீயும் மாண்புடன் செல்வதெங்கே
இதனையே உரைப்பாயென்றே கரம்பற்றித் தேரி லேற்றி
விதவிதமாக மன்னர் வேதனையோடு காணக்
கதுமெனக் காற்றுபோலக் கடவினை உன்றன்தேரை.

8. இடையன்தான் எங்குசென்றான் என்றுனை இகழ்ந்தா ராகிக்
கடைப்பட்ட மன்னரெல்லாம் யாதவரோடு சேர்ந்து
புடைப்புறு பகுதியெல்லாம் தேடினர் சிங்கந்தன்னை
நடைமெலி நாயெஃ செய்யும் நல்லவர் வாழ்வேபோற்றி.

9. உனை எதிர்த்திடுதற் கந்த ருக்மிதான் விரைத லோடும்
கனைத்திடும் குதிரைபூண்ட தேர்க்காலில் கட்டி விட்டாய்
உனைத்தேற்றி அண்ணன் சொல்ல உடனவன் கட்டவிழ்த்தே
மனைக்குறு மகளாநின்ற ருக்மணி யோடு சென்றாய்.

10. புதுமையாம் இன்பம் காண வெட்கிய பூவையாட்கே
விதுவிதுப்பாகும் வண்ணம் அணைத்தனை தனியேசென்று
புதுமையாய் இன்பம் தன்னை புகட்டினை காமத் தீயின்
வெதுவெதுப்பதனை நீயும் அணைத்திடும் பணியைப்
பூண்டாய்.

11. இன்பத்தின் எல்லைதன்னை எட்டிய நீயும் ஓர்நாள்
துன்பந்தான் கொள்ளுமாறு துயருறும் வார்த்தை தன்னைப்
பொன்னெனும் மனம்படைத்த பூங்கொடி பதறுமாறு
கொன்றிடும் செயலே என்னக் கூறியே கலங்க வைத்தாய்

12. இச்சொல்லைக் கேட்டபோது ஏதுமே செய்வதின்றி
அச்சத்தால் அழலும் நீயும் அமைதியாய் இருக்கச் சொல்லி
மெச்சரும் அன்பினாலே மேன்மைகள் பலவும் செய்தே
இச்சைகள் பூர்த்தி செய்தே இன்பத்தின் எல்லை கண்டாய்.

## எண்பதாவது தசகம் - ஸ்யமந்த கோபாக்யானம்

வேறு

1. சத்ரசித் என்ற பெயர் தாங்கி நின்றோன் தன்னிடத்தில்
சமந்தகமாம் மணியைக் கண்டே
எத்துணையும் என்றனக்கே வேண்டுமென அவனிடத்தே
அம்மணியை யாசித்தாய் நீ
உத்தமனே அவன் மகளாம் பாமையினை உறுதற்கே
உன்மனத்தே உவந்து நீயும்
சத்ரசித்தை யாசித்தாய் போலுமென என்னுள்ளம்
எண்ணும்மாதோ.

2. அவன் தம்பி யதையணிந்தே வேட்கைசெயும் எண்ணத்தால்
வனத்திற்கேக
சவந்தகத்தைச் சிங்கமொன்று மாமிசத்தின் துண்டேனவே
அவனைக் கொல்ல
நிவந்ததொரு கரடியதாம் சாம்பவனும் சிங்கத்தைக்
கொன்றன்த மணியெடுத்தே
உவந்து வந்தே பெண்கரடிக்களித்ததுகாண் உத்தமர்கள்
போற்று தேவே.

௩, மணியை நீ கவர்ந்து கொண்டாய் எனமற்றோர் மயங்கிக் கூற
துணிவுடனே நீயந்த மணிதேடி இறந்திட்ட பிரசேனன்
உடலைக் கண்டே
குணமில்லாச் சிங்கமது மாய்ந்திட்ட நிலைகண்டே
ஜாம்பவனின் குகையைத்தேடி
மணக்கின்ற துளவுடனே நீ சென்றே குகைவாயில்
தனையடைந்தாய்.

4. இராமனையே என்றென்றும் எண்ணி எண்ணி ஏங்கிவரும்
சாம்பவன்தான்
பிரான் பெயரைப் பலகாலும் சொன்னவனாய் உனைக்
கண்டே கோபமிக்கு
தராதலமே நடுங்கிவிடக் கைகளினால் தாக்கிடவும்
அவற்றையெல்லாம்
பாராமுகமய்ப் பார்த்திருக்கிறாய் பாருன்றன்
விளையாட்டன்றோ

5. உன்றன்னை யறிந்து கொண்ட ஜாம்பவன்தான்
கொடுத்திட்ட மணியையேற்று
நன்றியுணர்வோடவன் தன் மகள் கையைப் பற்றியபின்
நளினமோடு
என்றிந்த மணி கிடைக்குமென ஏங்கும் சத்ரசித்தின்
கையில் ஈந்தே
குன்றாத மணிவிளக்காய் நின்றனையால் கோவலர்தம்
குலக்கொழுந்தே

6. மற்றொருவன் பாமையினை மணக்கவென வாக்களித்த
சத்ரசித்தும்
உற்றமணி கண்டதுமே உவந்தவனாய் பாமையுடன்
மணியும் நல்க
பெற்றனை நீ பாமையையே மணியவன் பால் திரும்பத்
தந்தே
உற்ற இந்த மணிமட்டும் நீ கொள்க என உரைத்திட்டாயால்

7. பாமையுடன் இன்பத்தைப் பகிர்ந்து கொண்டு வாழ்கின்ற
காலந்தன்னில்
சேமமுறு பாண்டவர்கள் தீயிடையே கருகியதாய்ச் செய்தி
கேட்டு
நாமமிகு குருச்சேத்ரபூமியதில் அக்ரூரன் சதவன்
மாசொல்லைக் கேட்டே
நேமமிலாச் சததன்மன் சத்ரசித்தைக் கொன்று மனிதனைக்
கவர்ந்தான்.

8. சததன்வன் செயல்கண்டே வருத்தமுறும் பாமைஉனைக்காண்
பதற்கே
இதமிந்த குருநிலத்தை யெய்திடவும் அழித்தவனை
மணியைப்பெற்றாய்

இதனையெல்லாம் கண்டவன்றன் அண்ணனுந்தான்
அமைதியின்று மிதிலையேகி
விதமுறவே கதைப்பயிற்சி சுயோதனற்கே பயிற்றுமொரு
செயலைக் கொண்டார்.

9. உனைப்பற்றிப் பலவாறாய் உறுத்தல்களைச் செய்ததனால்
உணர்ச்சி பொங்கி
கனைத்தெழுந்தே அக்ரூரர் சத்ரசித்தை யழித்திட்டே
மணியைப் பெற்றார்
எனக்கேட்ட அக்ரூரர் மகிழ்ந்திடவே பலசெல்வம்
பாரித்தீந்தாய்
புனத்துழவம் பூண்டவனே அடியவரின் துயர்தீர்க்கும்
குருவாயூரா.

10. பக்தியுன்பால் பதித்திருந்த அக்ரூரன் சத்ரசித்தை
அழிப்பதற்கே
இத்துணையும் முயற்சியினை ஏன்செய்தான்? என்பதனை
அறிவார்யாரே
சுத்தமுள்ள மனத்துறவி எனக்கருவம் கொண்டவனை
அடக்குதற்கே
இத்தனையும் செய்தனையோ உன்னுள்ளம் எவரறிவார்
என்றன்தேவே.

11. பயத்துடனே அக்ருவர் கிருதனுடன் ஓடிவிட மீட்டுவந்தே
அவரிடத்தே
சுயவொளிசேர் சமந்தகந்தான் இருப்பதனைச் சுட்டிவிட்டே
அவரேகொள்ள
நயமிக்க உரை பகன்றே பாமையுடன் இன்பமெலாம்
நயந்து கண்டாய்
பயமிக்கோர் பயந்தெளியப் பரிவுடனே காக்கின்ற
குருவாயூரா.

## எண்பத்தோராவது தசகம் -
## சுபத்ராஉறரணம் முதலிய வருணனம்

1. பாமைபால் அன்புகொண்டே பற்பலவாம் லீலைகளைப்
பலநாளும் பன்னிப்பன்னி
காமமுடன் பாமையையும் உடன்கொண்டே திரௌபதையின்
மணத்திற்கேகி
சேமமுறு அத்தினமாம் நகரத்தில் சிறிதுநாள் மகிழ்வோடு
கழித்தபின்னர்
ஏமமுறும் காண்டவத்தில் இந்திரப் பிரத்தமெனும் நகரங்
கண்டீர்.

2. அழகுமிகும் உன்தங்கை சுபத்திரையைச் சுயோதனர்க்கே
ஈயஎண்ண
பழகுறுமுன் மைத்துனனாம் அருச்சுனனும் முனிவர்களின்
வேடந்தாங்கி
அழகியவள் சுபத்திரையைக் கவர்ந்துசெல்ல பலராம
கோபம்கொள்ள
இழையளவும் துயரில்லா நிலையியற்றி இந்திரப்பிரசத்தைச்
சென்றடைந்தாய்

3. காண்டவமாம் வனந்தன்னை தீக்கிரையாய்ச் செய்தபின்னர்
யமுனைதன்னில்
மாண்புடனே உனைநோக்கித் தவம்செய்த காளிந்தி என்பால்
தன்னை
ஆண்டகையே ஏற்றனையால் துவரைநகர் தனையடைந்தே
அவளுடைய சோதரர்கள்
மூண்டெழுந்த சினத்தோடு சூழ்ந்திடவும் அன்னவளை
மீட்டுவந்தே மணமுடித்தாய்.

4. எழுவிதமாய் வடிவெடுத்தே அயோத்திநகர் தனையடைந்து
இன்பமாகப்
பழுதின்றிச் சத்யாவை மணந்திடவே ஏழுவித காளைகளை
அடக்கிப்போட்டு
அழகுமிகு மவளைநீ ஆறவதாக மணம்முடித்துக்கொண்டாய்
மழகளிறே கேகயனும் சந்தர்த்தனும் தமது மகள்கள் ஈந்தார்.

5. அர்ச்சுனனும் வீழ்த்தரிய மச்சமெனும் குறியதனை நீரில்கண்டு
சர்ச்சையின்றி வீழ்த்திவிட்டே மத்ரமன்னன் மகளான
லக்ஷ்மணையை
கர்ச்சனைசெய் சிங்கமெனப் போய் மணந்தாய் காதலாலே
அர்ச்சனைசெய் குருவாயூர் அண்ணலே மனைவியர்கள்
எண்மராவர்.

6. நினைத்தவுடன் வந்துநின்ற கருடன்மேல் பாமையையும்
ஏற்றிக்கொண்டு
அனைத்துலகும் கலக்கிவரும் நரகனையே காணுமொரு
ஆவலாலே
தினைத்துணையும் தாமதமே இல்லாமல் கோட்டையினைப்
பிளந்தபின்னர்
எனைத்திடமும் இரத்தத்தின் ஆறோட அவ்விடத்தே
இயைந்துநின்றாய்

7. கடல்நடுவில் வசித்திருந்து நகரனுக்குத்துணை புரியக்
கிளம்பிவந்த
உடல்மனித உடலாகச் சிங்கத்தின் தலையுடனே வந்திட்ட
முரணன்தன்னை
திடமுறவேசக்கரத்தை விடுத்தே நீசிரமறுத்தாய் நரகன்தானும்
கெடுகின்ற உளத்தோடோ யானைமேல் தோன்றுதலும்
சிரமறுத்தாய்.

8. பூமகளின் மகனான நரகனுடை மைந்தனெனும்
பகதத்தன்பால்
சேமமுற ஆட்சியை அளித்திட்டே யானைஒன்றை
அவனுக்கீந்து
போம்வழியைக் காணாமல் சிறையடைந்த பதினா றாம்
ஆயிரம்சேர்
காமமுரு பெண்டிர்களைத்துவரை நகர்க்
கனுப்பிவைத்தாய்.

9. தேவுலகமாதர்களும் அதிசயிக்கும் அழகுமிகு
பாமையோடு
தேவுலகம் தனையடைந்தே கற்பகத்தைக் கொண்டுவர
முயன்றபோது
தேவுலக வேந்தனுந்தான் எதிர்த்திடவும் செருக்கதனை
அடக்கிவிட்டு
மூவுலகும் புகழும்வகை துவரை நகர்வாயிலினை முன்னி
நின்றாய்,

10. கற்பகத்தைப் பாமையவள் வீட்டினிலே நட்டுவைத்துப்
பொற்புமிகு கோபியர்கள் பதினரா யிரவருக்கும் இன்பமீந்து
அற்புதமாய்ப் பப்பத்து மைந்தர்களை அவர்க்ட் கீந்தாய்
அற்புதத்தை நாரதரும் அனுதினமும் அகமகிழ்ந்தே
கண்டிருந்தார்.

## எண்பத்திரண்டாது தசகம் - உஷாபரிணயம்

1. அற்புதப் பொருளே அன்பின் உருவே
உருக்குமணி பெற்ற உயர்வுடைப் புதல்வன்
பிரத்தியும்ம னெனும் பேசரும் வீரன்
பிறந்த பத்தாம் நாளுக் குள்ளே
சம்பான் தூக்கி சாதுரி யமாய்
உம்பரில் மறைக்க உடனே யழித்து
இரதி தேவியுடன் இன்புறு நிலையில்
பரவிடும்படியே பதியை யடைந் தனன்.
ருக்மியின் மகனைக் கவர்ந்த னனாகிப்
பக்குவமாக மணமும் முடித் தான்
அவனுடைய மைந்தன் அநிருத் திரன் தான்
நவமுறு மழகுசேர் ருக்மியின் பெயர் தியை
மணந்தே மகிழ்ந்தான் மகிதலம் புகழவே.
இணங்கியே அந்த இனிய விழவிற்கு
வணங்குறும் தமயனொடு வாகுறச் சென்றாய்
விளையாட்டாக விளைந்த சூதில்
களைந்தனன் ருக்மியை உன்றன் தமயனே.

2. ஆயிரம் கைகளுடன் அனைவருமே நடுநடுங்க
அவனிக்கெல்லாம்
தோயிரும் பென்னும்வகை துயர்தந்த வாணன்மகள்
உஷை என்போள்தான்
வேயெனும் தோள் படைத்த அனிருத்தன் தனைக்கனவில்
கண்டாளாகி
நேயமிக நெஞ்சழிந்தே நிலைகுலைந்தே நிதநிதமும்
நினைத்திட்டாளால்.

3. அன்னவளின் உயிர்த்தோழி அரசர்களின் உருவத்தை
வரைந்துகாட்ட
பொன்மனஞ்சேர் அனிருத்தன் வடிவத்தைக் கண்டவுடன்
புளகம் கொண்ட

நின்னிலையை அன்னவள்பால் நீசொல்லக் கேட்டவளும்
அவன்பால் சென்றே
தன்னிலையை மறந்திடவே செய்திட்ட உஷையிடத்தில்
அழைத்து வந்தாள்.

4. நிலவொளியில் காதலினால் நிலைமறந்தே அனிருந்தன்
நின்றபோது
குலைநடுங்கும் கொடுஞ்செயலன் வாணனுக்குத் தெரிநிதிட்லும்
கொல்லவந்தான்
விலையில்லாப் பணிபூண்ட வித்தகனே நாரதரால்
செய்திகேட்டுத்
தொலைத்திடுமோர் எண்ணத்தில் யதுகுலத்தோர் புடைசூழ
மதிலைச் சார்ந்தாய்

5. நகரத்தைக் காப்பதற்கே வரமளித்த பரமசிவன்
கணங்களோடு
புகர்முகத்த வேழமுடன் வந்துள்ள உனையெதிர்க்கப்
பொங்கிநின்றாய்
நிகரில்லா வாணனவன் சாத்தகையை எதிர்த்திட்டே
சமரம் செய்தான்
குசனுந்தான் பிரத்யும்னனுடன் பொரவும் சிவனைநீ
எதிர்த்திட் டாயால்.

6. உன்முன்னே நில்லாமல் உமைபங்கன் மயங்கிடவே
கணங்களெல்லாம் ஓடிப்போக
நன்னிலைசேர் பிரத்யும்னன் கணைகளினால் முருகனுமே
நடுக்கங்கொண்டான்
புன்மையுறு வாணனவன் அமைச்சனையே உன்னுடைய
அண்ணன் கொன்றான்
வன்மை தனை யறியாமல் வாதிட்டால் வலிமைகுன்றி
மடிவாரன்றோ.

7. வாணனவன் ஐந்நூறு விற்களுடன் போர்செய்யவளைத்திடலும்
அவன்செறுக்கை யடக்கலோடும்
நாணமுற்றே உமைப்பணிந்து "உனைவணங்கும்
தொண்டர்களின் சுரங்கள் நீங்கி

தோணுமொரு வீட்டுலகையடைகவென வரங்கள் பல
பெற்றான் அன்றோ
வீணாகச் சிவகணங்கள் விளைத்திட்ட பூசலினால்
வேதனைதான்
அடைந்தவன்றோ.

8. வாணனவன் இருகைகள் தமைவிரித்தே மற்றவற்றை
வீழ்த்திவிட்டே
வீணாகப் போர்புரிந்த சிவன் செருக்கை யாவையுமே
யடக்கிவிட்டு
காணரிய துன்பமுற்ற வாணனை நீவாழ்த்தி வரம்
பலவும்தந்தே
நாணமிகும் உஷையுடனே அனிருத்தன் தான்தொடர
நகரம் சென்றாய்.

### வேறு

9. இந்திரன் தன்னை எண்ணரு முறையும்
நந்தனைக் கவர்ந்த வருணன் தனையும்
பாலனை மீட்டிட இயமன் தன்னையும்
காட்டுத் தீயைக் கடிதில் விழுங்கிட
நாட்டம் கொண்ட அக்கினி தேவனையும்
பிறழ்ச்சிகள் செய்த பிரம தேவனையும்
பாணனின் போரில் பரமசிவனையும்
வென்றனை ஆகவே வியப்புறு மிந்த
அவதாரந்தான் மற்றய வற்றினும்
மேன்மை மிகவே மேவிடுமன்றோ.

### வேறு

10. வேதியர் சாபம் பெற்ற வேதனை கொண்டநிருகன்
ஓதரும் பேற்றையெய்த உற்றதோர் வழியைச் செய்த
நீதியின் உருவே உன்னை வேதியர் வாழ்த்த நின்றாய்
ஆதியே குருவாயூரின் அண்ணலே போற்றி போற்றி.

## எண்பத்து மூன்றாவது தசகம் - பௌண்ட்ரகவதம்

வேறு

1. உன்னுடைய தமயனவன் கோகுலத்தில் பெண்களுடன் லீலைசெய்ய
நன்னிலைசேர் யமுனைதனை யழைத்திடவும் வராததனால் மதுமயக்கத்தால்
தன்னுடைய கலப்பையினால் நதிதடத்தை மாற்றிபல லீலை செய்தார்
இன்னல்மிகு பவுண்டிரனும் உன்னிடத்தே ஒரு தூதன் தனை விடுத்தான்.

2. நாரணனாய் நானிந்த நாநிலத்தில் அவதரித்தே நடமாடுங்கால்
வேறொருவன் என்சின்னம் தனைஅணிந்தே திரிந்திடுதல் விந்தையன்றோ
சோர்வுற்றால் என்பதவி தனைக்கூடச் சுரண்டிடுவார் என்றேயந்த
கோரமுறும் அரக்கனுடைத் தூதுவன்தான் கூறிடலும் நகைத்தாய் மன்னோ.

3. தூதனவன் சென்றபின்னர் யாதவர்கள் புடைசூழப் பவுண்டரனைக் காணச்சென்றாய்
காதினிலே குண்டலமும் மார்பினிலே சூடுவைத்த கவுத்துபத்தின் வடிவந்தானும்
தீது மிகு கழுத்தினிலே கவுத்துபத்தின் குறியாக மணியொன்றுந்தான்
பேதமிகு பட்டாடை இடுப்பினிலே பின்னிடவும் அவனுடைய உடலைக் கண்டாய்,

4. இரும்பினால் இயன்ற அவன் சக்கரத்தைச் சுதர்சனத்தால் வீழ்த்திவிட்டு
அரும் கின்ற வியர்வையிலே அவனுடைய சேனைதனை அழித்துவிட்டே

விரும்புகின்ற அவன்தோழன் காசிமன்னன் சிரத்தினையும்
காசியிலேவிழச் செய்தாயால்
கரும்பினுமே இனிமைமிகு சொல்லழக
காசினியின் உயிரேநீதான்.

5. அறிவின்மை காரணத்தால் தானேதான் பரம்பொருளென்
றகந்தைகொண்டே
செறிவின்றிப் போர்த்தொடுத்த பவுண்டரகன் சாயச்ய
நிலையைச் சேர்ந்தான்
அறிவரிவதால் உன்பெருமை ஆன்றோரின் உளந்தனிலே
அமைந்து நின்றோய்
நிறைவடிவே நினைக்கின்றோர் பெறாத பொருள்
நின்றதுண்டோ.

6. காசிராசன் மைந்தனவன் சுதட்சிணன் சிவன் தன்னைத்
துதிசெய்த உனைக் குறித்தே
நேசமிலா அபிசார யாகந்தான் நிகழ்த்திட்டே
வாணாசூரன்
பாசமிலா யாகத்தில் பயந்திடு கணங்கள் தமை
அபிசார அங்கியோடும்
ஆசையிலாய் உனையழிக்க அகத்தெண்ணி அன்றவனும்
ஏவினானால்

7. பனையளவு கால்கொண்டே பாருலகை யழிப்பதுவாம்
ஆபிசார
நினைவரிய தேவதைகள் நிலைகண்டும் நிலை சற்றும்
நிமிர்ந்து நின்றே (கலங்காமல்
தினையளவும் சோர்வின்றிப் பகடையினை உருட்டினையால்
திருவின் கேள்வ
அனைத்தும் நீ அறிந்ததனால் அசைவின்றி சுதர்சனத்தை
அனுப்பி வைத்தாய்.

8. ஒளிபடைத்த சுதர்சனந்தான் அவ்வேளை அபிசாரந்
தன்னையாங்கே
உளங்கலங்கச் செய்திடலும் நேராக சுதட்சிணனை
அடைந்ததாகி
களங்கமுறும் அவர்தன்னை எரித்திட்டே கடுகளவும்
இரக்கமின்றி
உளங்கவரும் காசியையும் உருக்குலைய எரித்திட்டே
ஓய்ந்ததன்றே.

9. விவிதனெனும் பத்தனவன் நரகனுடை அமைச்சனெனும்
விதமாய்த் தோன்றி
புவிதனிலே துன்பங்கள் புகுவித்தே நரகனை நீகொன்றதனால்
துவரைவந்து
அவியாத உன்நகரை அழிக்கவென உருவெடுக்க
அங்கே சென்று
புவிபுகழும் உன்னண்ணன் ஒருநொடியில் அவனுயிரைப்
போக்கினானே.

10. இலக்கணைமயாம் சுயோதன் மகள் கவர்ந்த சாம்பனைத்
சிறையிலடைத்திடலும் கண்டே (தான்
கலக்கமின்றி உன்னண்ணன் அத்தினாபுரியதனைக்
கலங்கச் செய்தான்
குலக்கருவம் கொண்டவனாம் சுயோதனன்தான் பூண்டோடும்
குலைய எண்ணி
குலத்துயர்ந்த யாதவரை அனுப்பவில்லை குருவாயூர்
கொற்றவா நீ.

## எண்பத்து நான்காவது தசகம் - குருட்சேத்ர சமாகமம்

1. சூரிய கிரணந்தான் சூழ்ந்திருந்த காலையே கிருதவமன்
துவரைதனில் இருக்கச் செய்தே (பிரத்யும்னர்
ஆரியனே யாதவர்கள் பெண்டிர்கள் உனைச்சூழ அளவில்லா
அன்பினோடு (மிகப் பெரிய
நேரியதாம் சமந்த பஞ்சகமி என்றுரைக்கும் இடத்திற்கே
சென்றாயன்றோ (விருப்பினுடன்
பேரதுவும் சொல்லரிய பெரும்பொருளே குருவாயூர்
பெரும நீயே. (உறைந்தருளும்

2. மக்களுடை நலன்கருதி மாண்புமிக நீராடி அந்நீரைப்
புனிதமாக்கி
தக்கவராம் அந்தணர்க்குத் தானங்கள் பல வழங்கித்
தகுதியோடு
மிக்கவராம் பாண்டவர்கள் கவுரவர்கள் உடன்கூடி
அளவளாவிப்
புக்கவராம் உறவினர்கள் புடைசூழ அவ்விடத்தே
இருந்தாயன்றோ!

3. உன்னிடத்தில் பத்திகொண்ட திரௌபதியும் நீ பலரை
செய்தி தன்னை (மணந்திட்ட
உன்னிப்பாய்க் கேட்டவளாய் உளமகிந்தே உவகையுடன்
உன்பால் பேசி
நன்மைநிறை பெண்டிருடன் நயமான பல உரைத்தே
நலங்களாய்ந்து
தன்னிலையைத்தான் மறந்தே மகிழ்ச்சியினில்
தகைமை மிக்கோய். (திளைத்தனளால்

4. ஆயர்களை அணுகிநின்றே நலம்பலவும் அவர்களிடை
அளவளாவி
நேயமுடன் உன்னிடத்தே மனந்தன்னைப் பறிகொடுத்த
கோபியரை அருகழைத்து
மேயநலம் அத்தனையும் கேட்டறிந்தாய் அனைவரினும்
மேன்மை மிக்கோய்
தூயவர்க்குத் தூயவனே குருவாயூர் தோன்றலே
துணை நீயே தான்,

5. உனைப் பார்த்த அளவினிலே கோபியர்கள் கச்சையெலாம்
கழன்றுபோக
பனைத்திருந்த பூரித்த பாரித்த கொங்கைகள் முன்பார்த்த
பரிசயத்தால்
எனைத்தொன்றும் செய்வதின்றி வைத்த கண்ணை
ஏந்தல் நீயும் (வாங்காமல்
மனத்தினிலே நினைத்தவனவாய்க் கண்களையே
சுழல விட்டாய். (அவ்விடத்தே

6. பகைவரிடம் போர் செய்யப் பலமுறையும் சென்றதனால்
பரிவிருந்தும்
தகைமை மிகு முங்களை நான் காண்பதற்கே இயலவில்லை
பொருத்திருங்கள் என்று கூறி
நகைமுகத்தாள் இராதையினைத் தழுவிடவும் அவளங்கே
தனைமறந்தாள்
பகைவனுக்கும் அருள்செய்யும் பண்பார்ந்த குருவாயூர்ப்
பாலனே நீ

7. கோபியரைத் தனியாக அழைத்தேகி அவர்களுக்கு
மனமாரச் சுகமளித்தே
கோபியர்காள் பரமசுக சிதானந்த ஆன்மாவாய் உள்ளத்தில்
நானுஉளேன்காண்
சோகையுறு நீங்களதை உள்ளத்தில் தெளிவாகக்
கொள்ள வேண்டும்
பாபமிலா வழிகாண நும் வாழ்வை மேற்கொள்வீர் இன்று
என்றுரைத்தாய். (முதல்

8. உத்தவர் தம் உபதேசம் கோவியர் தம் உள்ளத்தில்
ஞான ஊற்று
அத்தனையும் ஆக்கிடினும் உன்மொழிகள் அன்னவரின்
உள்ளந்தன்னில்

எத்தனையும் பேதமிலா இன்பநிலை தனையாக்கி
ஏற்றம் நல்க
உத்தமனே உனைத் தொழுதே உவகையினால் உள்ளமெலாம்
உவந்து நின்றார்.

9. வசுதேவர் முனிவர்கள்பால் நற்செயல்கள் செய்வதற்கே
யாகமொன்றை
விசும்பிலுள்ளோர் வியக்கும் வகை செயவேண்டும் என வினவ
அவருமாங்கே
பசுமையுறு மேனியனாம் கண்ணன்தான் இங்கிருக்க
யாகம் ஏனோ
வசுதேவா! என்றார்கள் ஆனாலும் விருப்புதிடனே
யாகம் செய்தார்.

10. யாகந்தான் நடக்கையிலே மூன்றான மாதத்தில்
உறவினோரும் யாதவர்கள்
பாகந்தான் கொண்டவராய்ப் பரிவோடும் பாசத்தால்
உடனிருந்தே
சோகந்தான் இல்லாமல் பண்டேபோல் இன்பமிகச்
சூழ்ந்திருந்தே
யாகந்தான் முடியுமட்டும் உடனிருந்தே அன்பாலே
உனைப்பணிந்தார்.

## எண்பத்தைந்தாவது தசகம்
## ஜராசந்த வதமும் இராஜசூயயாகமும்

1. மகதத்தின் மாபெரிய மன்னனெனும் சராசந்தன்
மாண்புமிக்க
அகந்தனிலே அமைதியிலா அரசர் பலபேர்களையும்
சிறையில் வைக்கப்
புகலிடமாய் உனைக்கருதித் தூதொன்றை அன்னவர்கள்
புகவிட்டாரால்
அகலிடத்தான் உனைப்பார்த்தே அவர் நிலைகள்
அனைத்தும் சொன்னான்.

2. மகதமன்னன் ஜராசந்தன் தனையழிக்க நீயெண்ணிப்
புறப்படுங்கால்
அகந்தனிலே குழப்பமுற நாரதரும் தருமர்செயும்
இராச சூய
மகமதனை உமக்குரைக்க இரண்டினையும் ஒன்றாகச்
செய்வதற்கே
அகங்குழம்ப வந்தவனும் யாகத்தில் அத்தனையும்
ஆகுமென்றான்.

3. உன்னுடைய பத்தினிமார் அனைவரையும் உடன்
இந்திரப் பிரத்தம்
கொண்டே
மன்னியதும் தருமருனை மகிழ்வுடனே வரவேற்று
தம்பிமார்கள்
உன்னதமார் வீமனுடன் அருச்சுனனை உன்னுடனே
செலப்பணிந்து
பொன் மயமார் மகதத்தை வென்றிடவே புகன்றிடலும்
புறப்பட்டாயால்.

4. மகதத்தின் தலைநகரை மூவருந்தான் சென்றடைந்தே
சராசந்தன் தன்னைக் கண்டே
அகந்தன்னில் வீமனுடன் போர்செய்ய அவனை வெல்லும்
வழியும் கண்டாய்
இகந்தன்னில் வழிபடுவோர் இடர்தீர்த்தே எந்நாளும்
குருவாயூரில்
சுகமருளும் பெருமானே உன்பெருமை யாரறிவார்
துயரம் தீர்ப்போய்.

5. அளவற்ற போர்செய்யும் அழிப்பரிய சராசந்த
அரசன் றன்னை
உளமாறக் கொல்லவென எண்ணினையால்
வீமனுக்குச் சாடைகாட்டி
இளகாத மனத்துடனே குச்சியொன்றை இரண்டாகப்
பிளந்துகாட்ட
மளமளென வீமனுந்தான் அழித்திடலும் மன்னரெல்லாம்
விடுதலையால் மகிழ்ந்தாரன்றோ.

6. தருமருடை யாகத்தில் மன்னரெலாம் பணியாளர்
போன்றாராகித்
திருமிகவே பலப்பணிகள் செய்தார்கள் வேதியர்
பாதந்தன்னை
அருமையுடன் கழுவியபின் அருச்சனைகள் பலப்பலவும்
செய்தாயன்றோ
தருமருடை பெருமையினைச் சாற்றறிதால் பெருமானே
குருவாயூரா.

7. யாகத்தை முடிக்கையிலே தருமர்தான் முதற்பூசை
உனக்கே செய்ய
யோகத்தில் உள்ளவர்கள் முனிவர்கள் யாவருமே
உவந்தாரன்றே
மாகத்தில் உள்ளவர்கள் மலர்மாரிதனைப் பெய்தே
மகிழ்ச்சி கொண்டார்
ஆகத்தில் திருமகளைக் கொண்டவனே குருவாயூர்
அழகு தேவே.

8. சேதிமன்னன் சிசுபாலன் சிறுமையுற்றே முனிவர்களும்
    மன்னருந்தான் இருக்கும்போது
சாதியிலே தாழ்ந்த இந்தச் சிறுவனுக்கோ பூசனைகள்
    சாற்றிவைத்தல்
நீதிஇலை என்றவன்தான் வாளுருதப் பாண்டவரும்
    கோபமிக்குச்
சேதிமன்னன் தனைப் போருக்கழைத்திட்டார்
    தேவதேவே,

9. அன்பர்களைக் காத்தருளித் துன்பகற்றி
    அமைதிகாண
வன்பர்களை மாய்க்கின்ற வாகான
    குருவாயூர் கொற்றவா நீ
துன்பத்தைத் தானாகத் தேடிய அச் சிசுபாலன்
    தன்னையன்று
உன்றனது சக்கரத்தால் சிரமறுத்தே உயர்பதவி
    தனையளித்தாய்

10. யாகந்தான் முடிந்ததன்பின் தருமனையும்
    உன்னையுமே பலரும் வாழ்த்த
மேகங்கள் மறைத்தல் போல் அறிவினையே
    பொறாமையது மறைத்தலாலே
வேகமுறு மயனமைத்த மண்டபத்தில் மதிமயங்கிச் [சுயோதனுமே
    தரைதன்னை நீரா யெண்ணிச்
சோகமுடன் நீரினையே தரை எனவே
    தவறாக எண்ணி வீழ்ந்தான்.

## எண்பத்தாறாவது தசகம்
## சால்வவதமும் பாரதப்போரும்

1. உருக்குமணி திருமணந்தான் நிகழ்ந்ததன்பின் சால்வ
ஈசனையே வேண்டிநின்று [னென்பான்
பெருக்கெடுக்கும் சினத்தாலே விமானந்தான் பெற்றிட்டே
துவரைநகர் தனையடைந்தே
கருக்கொண்ட போரதனில் ப்ரத்தியும்னன் யாதவரின்
அவனைத் தாக்கி [துணைகொண்டே
பெரும்போரை இருபத்து ஏழுநாள் செய்தபின்னர்
கலங்கி நின்றான். [பேதமையால்

2. நீயங்கே வந்திருந்து நண்பர்கள் சூழ்ந்திடவும்
நிலைகுலைந்த
பேயவனைக் கட்டுக்குள் கொண்டுவந்தாய் பிறந்தவனின்
கொடுமையாலே
மாயத்தால் உன்தந்தை போல் செய்தே மாய்த்திடவும்
மயக்கம் கொண்டாய்
தூயவனே குருவாயூர் தொன்மையனே தொண்டரெலாம்
போற்றும் தேவே.

3. விமானமதாம் சௌபனத்தைக் கதையதனால்
உடைத்துத் தள்ளிச் [மோதியவன்
சமானமிலாக் கொடியவனை அழிக்கவெனச்
தந்த வக்ரன் [சார்ந்திடலும்
குமாரனெனும் உனைஎதிர்த்தே கௌமோதகி
இறந்துபட்டான் [எனுங்கதையால்
சமாதிநிலை சார்ந்தனனால் சருவேசா குருவாயூர்
சார்ந்தகோவே.

4. சூதாட்டப் போரதனில் துரெளபதைதான் துகில்வேண்டித்
துதித்தகாலை
நீதிக்கே தலைவனென நின்றவனே ஆடைதனை
நீளத்தந்தாய்
ஆதியெனும் சிவனம்சத் தூர்வாசன் செருக்கடக்க
அற்றைநாளில்
ஓதரிய நீரையுண்ட முனிவர்கள் பசிதீரப் பெரியதொரு
உத்தி கண்டாய்

5. போர்செயவே பாண்டவரும் கெளரவரும் முனைந்தவராய்
உதவிவேண்ட
சாருமுன்றன் படையெல்லாம் துரியனுக்கே தந்தருளி
நீ மட்டுந்தான்
நேர்மையுடன் பாண்டவர்பால் நின்றிடவே
இசைவு தந்தாய்
போர் மூளுமுன்னதாத் தூதுசெல்ல வீடுமரும் துரோணருடன்
உயர்ந்தோர் போற்றக்
கேடதனை எதிர்நோக்கும் சுயோதனன்தன் கீழ்செயலால்
விசுவ ரூபம் கொண்டாய்.

6. அருச்சுனன்தான் போர் முனையில் அனைவரையும்
கொன்றுபோட
விருப்பமின்றித் தேரிநின்றே கீழிரங்க வித்தகனே
அவனுக்கன்னாள்
பொருப்புள்ள புங்கவனே கொல்பவர்யார் கொலைதன்னைச்
செய்வார்யாரே
அருத்தியுடன் அனைத்தையுமே என்னிடத்தில் விட்டிடுவாய்
என்றாயன்றோ.

7. பத்தியிலே சிறந்தவராம் வீடுமரும் பூபாரம்
தன்னைத்தீர்க்க
யுத்தத்தில் நாள்தோறும் பலப்பலராம் வீரர்களைக்
கொன்றாராக
உத்தமனாம் அர்ச்சுனன்தான் சோர்வடையப் படைதன்னைத்
தொடமாட்டேன் என்றநீயும்
நத்திவரும் விடுமார்பால் சக்கரத்தை ஏவுதலும்
வணங்கி நின்றார்.

8. பாகதத்தன் போர்க்களத்தில் நாரணனாம் அத்திரத்தை
விட்டபோது
ஆகத்தில் தாங்கியன்று பார்த்தனைநீ காத்தனையால்
அமர ரேறே.
வேகமுறு சக்கரத்தால் சயத்ரனை அழித்து கன்னன்
அரவுக்கணை
தொடுத்தபோது
சோகமுற அருச்சுனனின் முடிமட்டும் போய்விடவே
தேரினையே
அழுத்தி விட்டாய்,

9. பாரதப்போர் தொடங்கியதும் பலராமன் யாத்திரையை
மேற்கொண்டாரால்
சோராத பலராமர் சூதபௌராணிகர் தாமும் சிறப்பதனைச்
செய்யவில்லை
ஆராத கோபத்தால் கொன்றெழுந்தே அவர்மைந்தர்
தமையவர்தம்
இடத்தமர்த்தி
ஊர்பலவும் சுற்றிவந்தே சுயோதனன் தான் போர் செய்யா
நிலையைக் கண்டார்.

10. இந்தநிலை கண்டதுமே பலராமர் துவரைநகர்
தனையடைந்தார்
அசுவத்தாமன்
நிந்தையிலா உபபாண்டவர் தம்மைக் கொன்றிடலும்
அருச்சுனன்தான் அவனைக்கொல்ல
உந்தனது கட்டளையைப் பிறப்பித்தாய் அசுவத்தாமனவன்
கணைவிடுத்தே உத்தரைதன் வயிற்றிலுள்ள
விந்தைமிக்க உன்னருளால் கருக்காத்தே
அவள் வயிற்றில் புகுந்தாயன்றோ.

11. தன்னுடைய இச்சையினால் இறந்திடவே வரம்பெற்ற
வீடுமனும் தகுதியோடு
உன்னதமாம் பலவுரைகள் தருமருக்கே உரைத்திட்டே
உன்னைப்போற்றித்
தன்னுயிரை உன்னடியில் சமர்ப்பித்தார் நீயங்கே
தருமருடன் சேர்ந்துநின்றே
நன்னிலையால் அஸ்வமேத யாகங்கள் மூன்றியற்றித்
துவரைநகர் அடைந்தாயன்றோ.

# எண்பத்தேழாவது தசகம் - குசேலோபாக்கியானம்

வேறு

1. சாந்திப முனிவர் தம்பால் உன்னொடும் சார்ந்து கற்ற
ஏந்தெழில் குசேல னென்பான் எல்லையில் பத்தி பூண்டு
சாந்தமே வடிவ மாகி மனையறம் நடத்த லானான்.
போந்தவர் யாவருக்கும் புகலருள் பொற்பே போற்றி.

2. இல்லவள் குசேலர் போல இல்லாத காரணத்தால்
பொல்லாத வறுமை போக்க உன்றனை யடையு மாறு
நல்லவன் குசேல னுக்கு நவின்றனன் பற்றற் றானும்
சொல்வதை யறியா னாகிச் சேர்ந்தனன் இருந்தான் மன்னோ

3. பசியினால் வாடு கின்ற சுசிலையின் பரிவு கேட்ட
கசிவுளங்கொண்டா ரான குசேலரும் ஆசை யற்றே
இசைவுடன் சுசீலைதந்த அவல்தனை முடிந்துகொண்டு
பசுக்களின் தலைவனான உன்றனைப் பார்க்கவந்தான்.

4. துவரையாம் நகரடைந்தே உருக்குமணி வாழுகின்ற
நவமுறு மாளிகைக்கண் நண்ணியே வியந்து நின்றான்
பவமறு வைகுந்தத்தை அடைந்ததோர் பான்மைபோல
அவமறுத்தானு முன்றன் வரவேற்பால் மயங்கி நின்றான்.

5. பூசனை பலவும்செய்த பூர்வீகம் அனைத்தும் கேட்டாய்
ஆசானுக் கென்றன் னாளில் விறகினைச் சுமந்துகொண்டே
பேசரும் மழையில் நீங்கள் அடைந்திட்ட துன்பமெல்லாம்
நேசமாய்ப் பேசிநின்றே பழயன நினைந்தீ ரன்றோ.

6. அவலினைக் கொடுப்ப தற்கே அஞ்சிய குசேலன்தன்பால்
தவலரும் அன்பினாலே தாவியே அதைப்பிடுங்கி
அவலினைப் பிடியெ டுத்து உண்டலும் திரும கள்தான்
தவலரும் செல்வம்தந்தாய் இதுவொன்றே போது மென்றாள்.

7. அடியருக் கடிய னான நீயவர்க் கன்பு காட்டிப்
படிவரை வழியும்விட்டாய் பரிந்துநீ நல்க வில்லை
அடியவன் குலேசன்தானும் அதுபற்றிக் கேட்டா னில்லை
உடனாகத் தன்னூ ருக்குச் சென்றிட உகந்தான் மன்னோ.

8. வாய்திறந் தவனைக் கேட்டால் வாய்த்திடு மனைத்து மீவான்
சேய்பல கொண்டுள் ளாளாம் மனைவிக்கு என்ன சொல்வேன்
தாயினும் அன்புகொண்ட தக்கவன் தன்னைக் கேட்க
வாய்வர வில்லை என்றே குசேலன்தான் எண்ணிச் சென்றான்.

9. பொன்மய மாகி நின்றும் பொற்பமர் இல்லங் கண்டே
என்னிது வழிதான் நீங்கி வந்தோமா என்றே எண்ணி
நின்னிலை கொண்ட வீட்டின் உட்புறம் தாடும்போது
பொன்னணி பூண்டாள் நிற்கும் மனைவியைக் கண்டு
நின்றான்.

பலவித மணிகளாலும் பாங்குற அமைந்ததான
இலகுறும் இல்லந்தன்னில் இருந்திட நேர்ந்தபோதும்
உலகிடை யுள்ளதான வாதனை நீங்கப் பெற்றே
நலமுற உனைவணங்கி நற்பதம் எய்தினானே.

## எண்பத்தெட்டாவது தசகம்—மற்ற லீலைகள்

வேறு

1. அன்னையவள் இறந்திட்ட அறுவரையும் காணவென
ஆவல் கொள்ள
அன்னையுடை இச்சையினை நிறைவேற்ற மாவலியால்
வணங்கப் பெற்றோர்
பின்னையுந்தான் இரண்யாட்சன் பெற்றெடுத்தோர்
வசுதேவர் மைந்தர்தம்மை
அன்னைக்கே காட்டியபின் அன்னவரை அவர் வாழும்
இடத்தில் விட்டாய்.

2. அந்தண ரோடரசன் தன்னை ஒருசேர ஆதரிக்கச்
சிந்தையிலே எண்ணிநீயும் சிரமமே சற்றுமின்றி
பந்தமில் முனிவர் கூட்டம் பரிவுடன் உன்னைச் சூழ
நிந்தையில் மிதிலை நோக்கி நிமிர்ந்தனை நடந்தா யன்றோ.

வேறு

3. இரண்டாக உருவெடுத்தே இருவரின் மனைபுகுந்தாய்
பெருமையாய் உபசரித்தே பழங்களை ஈதல் பெற்றே
பெருமகிழ் வுடனே நீயும் உண்டனை அவர்களுக்கே
உருமொரு வீடுபேற்றைத் தந்தனை குருவாயூரா

4. துவரையில் அந்தணன்தான் தம்மக்கள் இறந்தாராக
அவமுற்ற வேளைதன்னில் விதியுடை அமைதிகூறு
அவமதித்திட்ட பார்த்தன் செருக்கெலாம் அடங்கச் செய்தே
அவனுக்கும் ஞானந்தன்னை அளித்தனை குருவாயூரா

5. அந்தண்ணன் ஒருவனுக்குப் பிறந்தவர் அனைவருந்தான்
சொந்தமே இன்றிச் சாவ துயரத்தால் வெந்தபோது
நிந்தனை இல்லாய் உன்றன் கடைப்பிள்ளை யிறந்தால் தீயில்
வெந்துநான் மடிவே னென்றே அர்ச்சுனன் சூளுரைத்தான்

6. அந்தணன் மகனுமாங்கே இறந்திட அருச்சுனன்தான்
விந்தையாய் இயமன்தேவர் இவர்கள் பால்போருக் கேகி
நொந்தனன் மீண்டுவந்தே தீதனில் மூழ்கப் போக
வந்தனைக் குரியோய் நீயும் சென்றவண் தடுத்து நின்றாய்

7. அர்ச்சுன னோடுதேரில் மேற்றிசை நோக்கிச் சென்று
இருளது சூழ்ந்த காலை தேர்ச் சக்ர ஒளியினாலே
இருள்தனைப் போக்கி யாங்கே விசையன்தான் காணுமாறு
அருள்நிறை வைகுந்தத்தை அடைவுறக் காட்டி நின்றாய்

8. அரவ மாம் அணையின் மீதே வைகுந்தந் தன்னிலன்று
விரவிய மணிகள் ஆடை செய்யவன் துணையிருக்கப்
பரவிடும் வடிவினோடு பரமனாய் இருந்து காட்டி
நரனென நீயு முன்னை நன்முறை தொழுதாய் மன்னோ

9. உன்னிடம் கொண்டிருந்த அந்தணன் குமரர் தன்னை
நன்னிலை அந்தணன்பால் நகைமுகத் தோடனுப்பி
மன்னிய மகிழ்ச்சி கொண்ட அந்தணன் உனைவணங்கித்
தன்னிடம் சேர்ந்துகொண்டான் தாயெனும் குருவாயூரா

10. பலபல விளையாடல்கள் பாவையர்க் களித்து நீயும்
இலகிடும் இடைக்குலந்தான் தழைத்திட இனிமை செய்தாய்
உலகினின் உனை வணங்கும் உத்தமர்க் கருளைத் தந்து
நிலவிடும் குருவாயூரா நிதமும் நான் பணிகின்றேனால்

11. நாரதர் உனைப் பணிந்தே துவரையில் வதிந்திருந்தார்
நேரெதிர் இல்லாரான வசுதேவர் நாரதர்பால்
யாருமே அறிஞானம் பெற்றனர் உத்தவர்தாம்
பேரருள் பெற்றுநின்றார் பெம்மானே குருவாயூரா

12. கண்ணனாய்த் தோன்றிநீயும் கஞ்சனை வதைத்து நின்றாய்
புண்ணியா நீயும் தீயவர் தமையழித் தாய்
எண்ணிய கோபிமார்கள் எல்லோர்க்கும் இன்பமீந்தாய்
நண்ணிய எனக்கு முன்றன் அன்பருள் நல்க வேண்டுகின்றேன்.

## எண்பத்தொன்பதாவது தசகம்—வருகாசுர வதமும் விஷ்ணு பரத்வமும்

வேறு

1. உன்னிடத்தே எண்ணமதை உவந்தளித்தோர் செல்வந்தான்
விரைவினிலே எய்தலில்லை
நன்னிலையில் உள்ளவர்க்கே நாளுந்தான் அருள் செய்வோர்
அவர் கொள்ளும் கருவந்தானோ
உன்னதமாய்ப் பொருளளித்தே வீட்டுலகை
உவப்புமிக ஈகின்றாயால்
என்னென்றே உனைப்புகழ்வேன் குருவாயூர் புங்கவனே
ஈசா உன்னை.

2. மகிழ்ச்சியுடன் கோவத்தை உடனுடனே யடைகின்ற
அயனுடனே ஈசன் தன்னை
இகழ்ச்சியுறும் சிலபேர்கள் ஏத்திடுவர் இதன் தன்மை
என்னவெனச் சொல்வேன் யானும்
புகழ்ச்சியிலா விருகன்தான் காட்டாவான் புண்ணியனே
பொற்புமிக்காய்
அகமெல்லாம் நிறைந்தவனே குருவாயூர் அண்ணலே
அருள்வாய் நீயே.

3. அன்றொருநாள் விருகனுந்தான் நாரதர்பால் தான்வணங்கும்
தெய்வம் கேட்கக்
குன்றெனவே நிமிர்ந்திட்ட தோளானும் உன்பெயரை
கூறானாகி (அவனுக்குக்
வென்றிகொளும் முப்புறத்தான் பெயர்கூற அவனுந்தான்
விரைந்து சென்றெ
நன்றெனவே சிவன்தன்னை மனந்தனிலே எப்போதும்
நாடினானால்

4. கடுந்தவந்தான் செய்தாலும் காட்சிதனை யளிக்காத ஈசனது
கடுமை நோக்கி
உடனடியாய்ச் சிரமறுத்தே யாகத்தில் போடுதற்கு
முனையும் வேளை
[உறுதியுடன்
திடமிக்கோன் முன்பாக ஈசனவன் தோன்றுதலும்
எண்ணி நின்றோன்
(தீமையையே
உடனே ஓர்வரங் கேட்டான் என்கைதான் சிரமீதில்
இறக்க வென்றான்
(பட்டவர்கள்

5. அரக்கன் தான் வரம்பலிக்குமாவென்று சிவன் தலைமேல்
வைப்பதற்கு
(கைதன்னை
இரக்கமிலாச் செயல் செய்ய ஈசனுந்தான் எத்திக்கும்
ஓடிப் பின்னர்
வரக்கருணை வள்ளலெனும் உன்னுடை வைகுந்தம்
வருதல் கண்டே
இரக்கமுடன் சிறுவனுருக் கொண்டரக்கன் முன்தோன்றி
நின்றாயன்றே.

6. அரக்கனிடம் அவ்விடத்தே பூதத்தின் சொற்கேட்டே
அலைகின்றாய் நீ
உருக்கமுடன் சொல்வதைக்கேள் உண்மையதில்
இல்லை இல்லை
(கொஞ்சமுந்தான்
கருக்கொள்ளும் உண்மையினைக் காணவெனில் உன் தலையில்
கைவை என்ன
இரக்கமிலான் கைவைத்தே எரிந்திட்டான் சிவனுக்கும்
நீயே தேவன்.

7. சரசுவதி நதிக்கரையில் தவம் செய்யும் முனிவர்கள் அன்றொரு
தவத்தில் மேலோர்
(நாள்
அரனரியா அயனா வென்றவர்களுக்குள் தீராத
ஐயம் கொண்டே
பிரமனையே அணுகிடலும் சினந்தவராய்ப் பின்னரவர்
சாந்தங் கொண்டார்
அரன் தன்னை அணுகிடவும் பிருகுதனைத் தண்டிக்க
உமை தடுத்தாள்.
(முயன்றிடவும்

8. உன்றனையே நாடினார்காண் நீயுமங்கே திருமகளின் மடிமீது
தலையை வைத்து
வென்றவனைக் கண்டுகொளா நிலைகண்டே வியப்படைந்து
காலாலே இடறலோடும்
நின்றனது அடிச்சுவடு என்னிடத்தே அழகாக எப்போதும்
நிலைக்குமென்றாய்
குன்றெடுத்த தூயவனே குருவாயூர் கோயில் கொளும்
குலக்கொழுந்தே.

9. சரசுவதி நதிக்கரையைச் சார்ந்தவராம் முனிவரர்கள்
உன்னைச் சார்ந்தே
பரவியுன்றன் பதம்பணிந்தே பரமபதம் தன்னைச்சாரும்
பதவி பெற்றோர்
பரவுபவர் பவம்தீர்க்கும் குருவாயூர் பவித்திரனே
உனைப் பணிந்தேன்
விரவிவரும் பிறவிகளில் விரவாத மேனியையே அடியேற்கும்
விளம்புவாயே.

10. வந்திகளால் வழிபாடு செயப்படுவோய் வேதங்கள் உன்னை
வாழ்த்துகூற (எண்ணி
நிந்தையிலாச் சச்சிதானந்தமெனும் நின்மலனே கோபியர்கள்
மகிழ்ச்சிமிக்குச்
சிந்தையிலே நினைப்பவனே குருவாயூர் கொற்றவனே
உனைப் பணிந்தேன்
எந்தனது இடர்தீர்த்தே இன்பங்கள் அனைத்தையுமே
எனக்கீவாயே.

# தொண்ணூறாவது தசகம்—ஸ்ரீ கிருஷ்ண பரத்வம்

1. விருகனுடன் பிருகுமுனி மோகினியும் அம்பரீஷர்
கதைகள் தம்மில் (போன்றோரின்
பெருமை மிகும் உன்தன்மை பேசரிதாய் நின்றதுவால்
பெருமை சான்றோய்
உருவருவாய் உலகெல்லாம் நிறைந்துநின்ற பெரியோனே
குருவாயூரில்
பெரியோர்கள் பணிந்திடவே நிற்கின்ற பெரியோனே
பெறவிழைந்தேன். [உன்பாதம்

2. ஐந்துருவாய்க் கூறுகின்ற அழகுமிகு வடிவங்கள் உன்றனுடை
வடிவமன்றோ
பந்தமற நோற்பவர்கள் வணங்கிடவே பரமபதம்
தருவோய் நீயே
தொந்த மற்றோர் தொழும் ஈசன் நீயன்றிவேறொருவர்
உண்டோ இங்கே
சொந்தமெனப் பணிபவர்கள் துயர்தீர்க்கும் குருவாயூர்
கோமானே நீ.

3. உன்னுடைய சத்துவமிகும் குணத்தாலே உயர்வுடைய
விண்டுவென உரைப்பா ருன்னை
பொன்னாடை புனைந்தவனாம் அயனுந்தான் சத்துவத்தில்
இராசசம்தான் மிக்கானவன்
மன்னிநிற்கும் கயிலையில் வாழ் மகேசனவன் சத்துவத்தில்
தாமதந்தான் மிகுந்திருப்பான்
இன்னிலையில் உனையன்றி உலகிடையே
பணிந்திடவே உரியோர் யாரே.

4. மும்மூர்த்தி நிலைகடந்த உன்தன்னை மகேசனென
உரைத்தல் கேட்டேன்
எம்மூர்த்தி யாயிடினும் உனையன்றி உலகத்தில்
இயல்வதில்லை

செம்மையறு சிவனென்று செப்புதலும் நினையன்றிப்
பிறரை இல்லை
எம்மையெலாம் ஆள்கின்ற குருவாயூர் ஏற்றமிகு
தேவதேவே,

5. சங்கரரும் மற்றவரில் உன்றனையே போற்றி செய்தே
வணங்கினாரால்
பொங்கிவரும் பூரிப்பாய் ஆயிரமாம் திருநாமம் உன்றனுக்கே
புகன்று நின்றார்
தங்கு தடையில்லாமல் உனைப்பணிந்தே பெருநிலையைத்
தானடைந்தார்
எங்கோவே குருவாயூர் ஏந்தலே என்னோயை
இன்றே தீர்ப்பாய்.

6. மந்திரங்கள் சொல்லிடுவோர் உன்பெயரை முதற்கண்ணே
மதித்தே சொல்வர்
எந்தவித செயல்செயினும் உன்பெயரே ஏற்றமுற
ஓதுவார்கள்
நந்தலிலாப் பிரணவத்தில் நீயுள்ளாய் என்றாலே
நானென்ன சொல்லாகும்
வந்தவர்கள் குறைதீர்க்கும் குருவாயூர் வாழ்பவனே
என்னைக் காவாய்

வேறு

7. உன்றனைப்போற்றி யென்றும் உயர்ந்திடு புராண மெல்லாம்
பொன்னெனப் போற்றல் கண்டேன் மும்மூர்த்தி தங்களுக்குள்
உன்றனில் பெரியோ ரில்லை உலகெலாம் நீயேயன்றோ
என்றுமே வைகுந்தத்தை எல்லோரும் வாழ்த்தக் கண்டேன்.

8. அயனவன் நேரில்காண அமைவதும் பாகதத்தில்
வியன்மிகு இரண்டாம்கந்தம் விளம்பிடும் மேன்மைகொண்டு
பயமரு மன்பர் போற்றும் உன்னுடை நாமந்தன்னை
துயரற மாதவர்தாம் புராண சாகரத்தில் சொன்னார்.

9. சிவனையே எண்ணுவோர்கள் அவனையே யடைவரென்றே
பவமறும் வியாசரன்று பகன்றனர் உண்மைதன்னை
மிகமறந் துரைத்தா ரேனும் மேலவ உன்னையன்றி
இகந்தனில் எவருமில்லை என்னுடை குருவாயூரா.

10. நடந்ததைக் கூறும்தன்மை அதற்கொரு பொருத்தம் சொல்லல்
நடந்ததற் கெதிராய்க் கூறல் நாட்டிடை திகழ்தலுண்டாம்
திடமுறு ஸ்காந்தம் போன்ற நூல்களில் உமதுதன்மை
உடன்பாடேஇன்றி மாறாய் உரைத்திட லாயிற்றன்றே.

## தொண்ணூற்றேராறாவது தசகம் – பக்தியின் மேன்மை

1. உன்னிடம் பத்திகொண்டோன் உன்னையே போற்றல்
(செய்வோன்
பொன்மனம் படைத்தோ னாவான் பொதுவுறு நிலையில்
(நிற்பான்
மன்னிய சித்தத் தோடு மதிதெரிந் துயர்வு கொள்வான்
என்னிலை வந்தபோதும் சமமென எண்ணி வாழ்வான்.

2. மனத்தாலும் வாக்கி னாலும் உடலாலும் மாய னேநான்
இனத்திடைச் செய்யு மெல்லாம் உனக்கென அடிப்பணிந்தேன்
புனத்திடை நாயையுண்டு போகினும் உன்னை எண்ணும்
மனத்தினன் உயர்ந்தோன் ஆவான் மற்றவர் உயர்ந்தோ
(ரில்லை.

3. பயமென்றன் மனத்தின் கண்ணே படிந்திடின் மாயைதன்னால்
நயந்திடப் படுவதாகி ஒளியின்றி நலிந்து போகும்
பயம்போக்கி உள்ளத்துள்ளே பண்புகள் பலவுமாக்கி
நயமிகு வாழ்வைத் தாராய் நாரண குருவாயூரா.

4. பத்தியால் செல்வருக்குச் செல்வம்தான் சேர்வதேபோல்
உத்தமகுணங்கள் சேரும் அவருடன் சேருகின்ற
நித்தியவாழ்வை நீயும் அருளிட வேண்டிநின்றேன்
மெத்தவே அவரு ரைக்கும் மேன்மைகள் சேரவேண்டும்,

5. உன்னிடம் பத்தி கொண்டே உன்னையே பாடிப் பாடி
தன்னிலை மறந்தா னாகிப் பித்தன்போல் அலைந்தலைந்து
உன்னெண்ணம் தவிர மற்ற எண்ணங்கள் தோன்றாவண்ணம்
என்னையும் அடியனாக்கி ஈன்றதாய் போலக்காப்பாய்

6. ஐவகைப் பூதந்தன்னை அவைசேர்ந்த உலகந்தன்னைக்
கைவகை வஞ்சகத்தால் கடுமையே செய்வோர்தம்மை
உய்வகை யருளுகின்ற உன்னுடை வடிவமாகத்
தெய்வமே வணங்குகின்றேன் தேவன்உன் அருள்கிடைக்கும்

7. மனத்தினை உனக்குத்தந்தே மதிமயக் குறுதலின்றி
மனமுன்றன் பொருளே யானால் மறவாமல் உனைத்து
(திப்பேன்
கனத்திடும் துன்பம் இன்பம் கவலைகள் யாவுமற்ற
மனத்தினை அருளவேண்டும் குருவாயூர்மாயவா நீ.

8. உனையன்றி உலகமில்லை என்றதோர் உண்மைதானும்
தினையேனும் என்னிடத்தில் இல்லையே யானபோதும்
உனைப்போற்றும் தொண்டர்தம்பால் தொண்டுகள்
(பலவும்செய்ய
உனைப்போற்றார் தம்மைக்கண்டே இகழ்ந்திடா
(நிலையைத்தாராய்

9. மாயைதான் உலகிலுள்ளோர் மதிதனை மறந்தாராகித்
தூய நன்னிலையைக் காணாத் துன்பத்தை யெய்தச்செய்யும்
மாயையோஉனக் கடக்கம் மாயவா மாயைஎன்னை
மாய்த்திடா வகையருள்வாய் குருவாயூர் மாயவாநீ.

10. உயிர்க்குலம் உலகின்கண்ணே உற்றிடும் துன்பங்கண்டே
வியர்ப்புற அத்துன்பந்தான் என்னையும் விரட்டா வண்ணம்
உயிர்குலம்காக்கும் தேவே உன்னைநான் வேண்டுகின்றேன்
அயர்ப்புறா வகையில் காப்பாய் அண்ணலே குருவாயூரா.

# தொண்ணூற்றிரண்டாவது தசகம்

1. வேதங்கள் விதிப்பதான விதிமுறை யாவுமுன்றன்
நீதியின் நிழலினுக்கே நிதமும்நான செய்துநிற்பேன்
பேதங்கள் தோன்றாலாயின் பேதையேன் அதனையுன்றன்
சோதனை என்றேஎண்ணி உன்பதம்தன்னில் சேர்ப்பேன்.

2. வேதத்தின் புறம்பாப்பூசை வித்தக வடிவமான
பேதமே நீங்கிநிற்கும் உன்றனைக் கல்லின்கண்ணோ
பேதித்த மண்ணின்கண்ணோ மலர்தூ விப்பூசைசெய்ய
வேதனே எனக்கருள்வாய் வித்தகா குருவாயூரா.

3. மக்கள்தாம் உனைநினைந்தே மாண்புறு பூசைசெய்யார்
திக்கிலா ராகிநிற்கும் செயலைநான் என்ன சொல்வேன்
எக்காலும் உனைப்பூசிக்கும் அந்தணர் மனத்தின்கண்ணே
மிக்க நின்புகழை எண்ணார் மேலவா எனக்கருள்வாய்.

4. உன்னிடம் பத்திகொண்ட உத்தமர்தம்மைத் தீயோர்
தன்னையே மறந்தாராகத் தாறுமாறாகப் பேசி
உன்னத நிலையை யெய்தும் உபாயத்தை மறப்பர்மன்னோ
நன்னிலை யருளிஇந்த நானிலம் உய்யச்செய்வாய்.

வேறு

5. கிருதயுகம் வரும்போதில் வெள்ளைநிற முனிவனென
(உனைப்பணிந்தே
வருகின்ற திரேதத்தில் யாகத்தில் அவிபெய்தே உனைபணிந்தே
பெருமைமிகு துவாபரத்தில் வாளுடனே கதைதாங்கும்
(வடிவில் காண்பார்
நிருணமாய்க் கலியுகத்தில் துதிப்பாடல் பலபாடி
(துதிக்கின்றார்கள்.

வேறு

6. கலியுகம்தன்னில் உன்னைத் துதிப்பாடல் பாடிக்கொண்டு
கலியின்றி நிற்பதாலே மற்றைய யுகத்தர்தாமும்
கலியுகம்தன்னில் வந்து பிறந்திட நினைக்கின்றார்கள்
கலியுகம்தன்னில் வந்த கடையனேற் கருளுகண்டாய்

7. பத்தியால் திளைத்திருப்போர் திராவிட தேசந்தன்னில்
உத்தமராகித் தோன்றி உன்புகழ்பாடுவார்கள்
மெத்தவே உண்மையென்றே மேவலர் சொல்லக்கேட்டேன்.
உத்தமா என்னைக்காப்பாய் உவந்தருள் குருவாயூரா.

வேறு

8. கலியென்ற புருடன்தான் தருமமெனும் தேவதையை
[வாட்டும்போது
நிலைபெற்ற புகழுடைய பரிட்சத்தும் வாளோச்சிக்
[கொல்லவில்லை
கலி செய்யும் கொடுமைகளால் சேவைகள்தாம் விரைவினிலே
கலிபுருடன் எனையணுகாத்திறமளித்தே பரிப்பதில்லை
[துணையிருந்து என்னைக்காப்பாய்.

9. கங்கையுடன் கீதையதும், காயத்ரீ, துளவமுடன் சந்தனந்தான்
பங்கமில்லா சாலக்கிராமம் பூசையெனும் எட்டுமேதான்
எங்கெங்கும் நிறைந்த உனையடைதற்கே ஏற்றவென
[முனிவரெல்லாம்
பொங்கிவரும் உணர்வாலே புகன்றிடுவர் அந்தநிலை
[பெறவருள்வாய்

10. மனத்தின்கண் உன்னையன்றி மற்றவரை மதியாராகிச்
சினத்திற்கே இடங்கொடாச் சீராளர் தமக்கென்றும்
[துணைநீயன்றோ
மனத்தகத்தே மற்றவற்றை மதியாதார் தம்துயரை
[மாற்றிநீயும்
உனைத்தொன்றும் பாவாத்தில் விளைந்திடினும் யாவையுமே
[போக்குவாயே.

## தொண்ணூற்றுமூன்றாவது தசகம்
## பார்ப்பதெல்லாம் குரு

### வேறு

1. உன்னிடம் பத்தி பூண்டே உற்றவர் தமைம றக்கும்
தன்னிலை மறப்பதான தனிவழி தன்னைத் தாராய்
என்னிலை யுற்றபோதும் நீயன்றி வேறெண் ணாத
புன்மையில் நிலையைத் தாராய் குருவாயூர் புங்கவா நீ.

2. பசியொடு தாகங்கொண்டே பாரினில் அலைந்து நிற்கும்
கசிவிலா உயிர்கள் உன்னைக்காணவும் கூடும் கொல்லோ
பசிதாகமெலாமறந்து பரமனாம் உனைத் துதித்தால்
விசும்பிடை யுயர்ந்ததான வியன்பதன் பெறுவான் மன்னோ.

3. உன்னுடை கருணைதன்னால் உலகிடை இயலாதுண்டோ
என்னுடை செயல்களெல்லாம் பஞ்சபூதங்கள் தம்மால்
நன்னிலையடையக் கற்றேன் நாளுமே உன்னையன்றி
என்னுடைத் துணைவரில்லை குருவாயூர் கோயில்
[கொண்டோய்

### வேறு

4. நீரினுடைத் தம்மைபோல் நிச்சலமும் நெருப்பினுடைக் தன்மை போல
[குற்றமற்ற
பாரினிடை உயிர்எல்லா உடலிடையும் உலவுவதை கவலைசோர்வு
[உணர்ந்திடுவேன்
சேர்வதெல்லாம் உடலுக்கே உயிர்க்கில்லை சூரியன்தான் வேறுவேறாய்த்
]ஒன்றெனினும்
பார்ப்பவர்க்குத் தோன்றுதல்போல் ஆன்மாவும் உடல்களிலே தோன்றக் காண்பேன்.
[பலவாக

5. வேடனால் இறந்திட்ட தன்குஞ்சு தனக்காக உயிர்விட்ட
புறாவைப்போல
மூடனாய் இல்லாமல் மலைப்பாம்பு கிடைத்தனை உண்டுவிட்டு
வாழ்தல்போல
கேடுதரும் கலகத்தில் மூழ்காமல் உன்பாதம் சிந்தைசெய்யும்
நிலையை நல்காய்
பாடுபட்டுச் சேமித்தே அழிந்திடுவோர் பரிதாபம் அடையாத
பண்புதராய்

6. பெண்யானை குழியிடையில் தள்ளிவிட அவதியுறும்
ஆண்யானைபோல்
பெண்களிடை மயங்காமல் பணத்தாசை கொள்ளாமல்
அற்பமுற வாழ்ந்திடாமல் [மானைப் போல்
உண்ணுகின்ற உணவிற்காய்த் தூண்டிலிலே விழுமின்போல்
பிணங்களைப்போல் ஆசையற்று [ஆகாமல்
கண்ணிருந்தும் குராப்பட்சியடைந்ததுபோல் துன்பந்தான்
காப்பாய்தேவே, [அடையாமல்

7. சின்னஞ்சிறு குழந்தையைப்போல் சலனமிலாச் சிந்தையுடன்
இருப்பேனாக [தீமைநீங்கி
கன்னிகையின் கையில் மிஞ்சும் ஒற்றை வளை என்னவுந்தான்
அனைத்தும்விட்டே [உலகிடையே
உன்னுமொரு பொருள்மீதில் சித்தத்தைச் செலுத்தல்போல்
உன்னை எண்ணி
மன்னுமொரு எலிவளையில் பாம்புறைதல் போலவுநான்
[என்றென்றும்
வாழ்வேனாக.

8. நீபடைத்த உலகந்தான் உனையடைதல் சிலந்தியின்பால்
கற்பேனாக
தாபமிகு குளவியினால் உனைநினைந்தால் உன்னுருவம்
என்பதனை கற்பேனாக [பெறலாகும்
மாபெரிய உடலதுவும் மலமாகச் சாம்பலென மாய்ந்திடினும்
உருவாமன்றோ [இதுவுமொரு
தாபமெல்லாம் விட்டுவிட்டே அதைநினைந்தால் வைராக்யம்
துணிவை நல்கும், [தோன்றிநின்றே

9. உடலின்பால் உண்டான மதிமயக்கம் நீங்கிடவே உவந்தருளி உன்பால்சேர்ப்பாய்
திடனில்லா மனத்தவர்கள் மனைவியென மக்களென திரிகின்றார்கள் [அறிவிழந்தே
உடலதுவும் இறந்தபின்னர் தீ தனக்கோ நாய் தனக்கோ உணரார் யாரும் [உரியதென
உடலிடத்தே அவயவங்கள் தம்பாலே இழுப்பதன்றி யாவரையும் இழுப்பதில்லை. [உன்னிடத்தே

10. உள்ளத்தில் உனைநினைக்கும் எண்ணந்தான் என்னிடத்தில் உறுதியாகப் [இல்லையெனில்
பள்ளத்தில் நீரெனவே பரிந்துன்பால் அன்புகொளும் செய்வாய் மன்னோ [பத்தனெனச்
எள்ளத்தனைகூட தீதில்லா வேதியனாய்ப் பிறந்த என்னை வாழ்க்கைதன்னில் [ஈனமுறும்
தள்ளிவிட எண்ணாதே குருவாயூர் கொற்றவனே அன்பருளம் தங்கும்தேவே.

## தொண்ணூற்று நான்காவது தசகம்
## தத்துவஞானமும் பக்தியும்

1. ஆசைதனை விடுத்தவர்கள் குருவினுடை யுபதேசம் [பெற்றவராய்
உன்னைக் காண்பார்
ஈசனெனும் உன்னிலைதான் உள்ளமுயிர் தனின்வேறாய்
உறுவதன்றோ
பேசரிய உன்வடிவம் உன்றன்னால் கற்பிக்கப்
பட்டதாகும்
ஆசகன்றோர் உன்றன்னைப் பெரியவனாய்ச் சிறியவனாய்
அறிவார் மன்னோ.

2. குருதுணையால் சீடனென்போன் அறிவென்னும் நெருப்பாலே
எரித்தபின்னர்
வருகின்ற செயல்தாமும் உடல் உலகவாதனையும்
இல்லையாக
திரும்பவுமே ஏதுமின்றி அறிவென்னும் நெருப்பெரிந்த
அடைவே நீதான்.
விரும் பியுனைப் பணிவோர்கள் வினைதீர்க்கக் குருவாயூர்
விளங்குதேவே.

3. துன்பங்கள் துடைத்திடவே உனையடைதலல்லாமல் [மார்க்கந்தான்
வேறொன்றில்லை.
இன்பமுற ஆறுவித உபாயங்கள் ஆறுவித கன்மங்கள் [தமையடைவாய்
இயற்றினாலும்
நன்முறையால் வேதங்கள் கூறுகின்ற மார்க்கங்கள் [அவையனைத்தும்
நாடினாலும்
உன்னைவந்தே அடைகின்ற உபாயங்கள் யாருக்கும் எந்நாளும்
உறுவதில்லை.

4. உன்னுடைய உலகத்தின் பயமில்லா உலகமது உணர்ந்திடினே வேறுமுண்டோ
தன்னுடைய உலகததில் பிரமனுந்தான் அமைதியுடன் வாழவிலலை [நாடோறும்
இன்னிலையில் நரகத்தில் உழல்வோர்கள் நல்வாழ்வை நலிவப்போமோ [நாடுதலும்
மன்னுகின்ற இன்பத்தை யாம்பெறவே குருவாயூர் மன்னவனே எமக்கருள்வாய்.

5. உன்மயமாய் இருக்கின்ற என்றனக்கே பந்தமுடன் வீடதுவும் இல்லை இல்லை
உன்னுடைய மாயையினால் பந்தங்கள் மோட்சங்கள் கனவுபோலாம் [அடைந்திடுதல்
மன்னுமொரு பாசமுடன் அஃதின்மை இவ்விண்டின் தன்மை அஃதே
இன்பமுற மாந்தர்கள் உடலென்னும் மரத்தினின்றும் பழங்களையே உண்கின்றார்கள். [விஷயமெனும்

6. வீடுபெறும் நிலையிதுதான் என்றற்கோர் விளக்கத்தைச் சொல்வதனால் பயனொன்றில்லை
நாடுகின்ற நிலையற்றோன் என்செய்வான் மனந்தன்னைத் புத்தியன்றி பிறிதொன்றில்லை [தூய்மைசெயப்
தேடரிய பத்தியைநீ எனக்கருள்வாய் அனைத்தையுமே உன்றனக்கே கொடுத்துவிட்டேன்
பாடுபட்டே குருவருளால் உனையடையும் பாக்கியத்தை பாலிப்பாயே. [என்றனுக்கே

7. ஒலிவடிவாம் வேதங்கள் உச்சரித்தே உனையடைய முயற்சிப்பார்கள் [உலகினர்கள்
கலியுகத்தில் கண்கண்ட தெய்வமே கன்றீனாப் பசுவதனைக் காப்போர் ஒப்பர்
உலகெல்லாம் வடிவான உன்புகழை நாமத்தை அவதாரப் பெருமைதன்னை
பலகாலும் புகழ்ந்துரைக்கும் பாங்கினையே பாவியேன் வழியை நல்காய். [அடைந்திடவே

8. நான்உன்றன் நிலையாவும் அறிந்ததிலை யானாலும் உன்னையன்றி
மேன்மையுறும் தெய்வத்தை எண்ணவில்லை உன்றனையே நாளுமெண்ணிப்

பான்மையுறு நால்வகையாம் படிகளினால் உனைத்துதித்தே
வணங்குகின்றேன்
ஆன்மீக உணர்வதனால் உன்னையே வழிபடவும்
அருளுவாயே.

9. அடைகின்ற பொருளெல்லாம் உன்றனுக்கே அர்ப்பணிக்கும்
அமைதிதாராய் [ஆர்வமுறும்
இடையின்றி உன்றனுடைய ஆலயத்தைப் பெருக்குமொரு
உவந்துதாராய் [உயர்பணியை
உடலதனில் சூரியனாய் அக்கினியாய் வேதியனாய்
உலகமானாய் [உருவெடுத்தே
மடமையினைப் போக்கிடுவோய் உனைவணங்கப்
பாலிப்பாயே. [பத்தியெனும் யோகத்தைப்

10. புண்ணியமே வடிவான கோபியர்கள் உனைப்பணிந்தேகூறிய
புனிதம் பெற்றார்
எண்ணரிய பெரும்பேற்றை யாதவனே அவர்க்களித்தே
ஈந்தாயன்றோ [ஏற்றமெலாம்
மண்ணிடையே உனைப் பணிந்தேன் குருவாயூர் மாதவனே
மாண்புமிக்க [அடியேற்கும்
நண்ணரிய பரமபதம் தனையளித்தே யாண்டருள
நாளும் நாளும். [வேண்டுகிறேன்

## தொண்ணூற்றைந்தாவது தசகம் — தியான யோகம்

1. உலகந்தான் தோன்றுமிட மாய்நின்றாய் உலகத்தின்
நீதானங்கே [தோற்றத்தில்
இலகுமொரு இரண்ய கர்ப்ப உருவுடனே சமஷ்டியுயிர்த்
வியஷ்டியாகி [தத்துவமாய்
தொலைவில்லா மாயையுருக் கொண்டவனாய் விளங்கிடும் நல்
தோன்றல் நீயே
மலமறுத்தே முக்குணத்தில் சத்துவத்தால் மற்றவற்றை
கருள்வாயே. [மாய்க்கவெனக்

2. சிலநேரம் இராஜசமும் தாமதமும் தலைதூக்கி உலகியலில்
செல்லும்போது
உலகியலில் மனம்செல்லா உன்னதமாம் நிலைதன்னை
உறுதல்இல்லை [நானென்றும்

பலப்பலவாம் சிந்தைகளைப் பாரினிலே விடுத்திடவே
நிலையையுற்றே [பக்குவாம்
இலகுமுன்றன் திருவடியே பெறும்வழியை அன்னத்தின்
தெரிவித்தாயால் [வடிவெடுத்தே

3. கிரியைகளின் வேற்றுமையால் பெறக்கூடும் சாதனங்கள்
பலவும் உண்டு
கிரியைகளால் சிற்றின்பம் பதவிபல கிட்டிடினும் நிலைத்துள்ள
சுகமே இல்லை
பரவிவரும் பத்தியினால் பணிவதொன்றே பாருலகில்
சிறந்ததென்றே [என்றென்றும்
குருவடிவாய் உத்தமருக்குபதேசம் செய்தவனே குருவாயூர்
கோயில் கொண்டோய்.

4. பத்தியினால் உனைப்பரவிப் பணிந்திடுவோன் உலகத்தின்
நீங்கப்பெற்றே [பரிவெல்லாம்
சுத்தமுறு மடுவிலுள்ளோன் எல்லாமே நீரெனவே துணிவுடனே
தன்மனத்தே எண்ணல்போல
அத்தனையு உன் உருவாய் உன்செயலாய் அமைதியுடன்
அடைவாயெண்ணி [அகந்தனிலே
சித்தமறும் வீடதுவும் சிறிதெனவே சிந்தைசெய்யும்
சேருவானே. [சிறப்பதனில்

5. பொறியுணர்வான் உன்தொண்டன் புவிதனிலே தன்னிலையை
துன்பங் கொண்டே [இழந்தவனாய்த்
வெறிதாக நேர்ந்தாலும் உன்துணையால் வேதனைகள்
விளக்கமுடன் உன்னைச் சேர்வான் [நீங்கிடவே
நெறியறிந்தோர் பாவங்கள் பத்தியினால் நீறாக நீசெய்யும்
நியதி என்னே
குறிகுணங்கள் கடந்தவனே குருவாயூர் கோயில்கொளும்
கோமான்நீயே. [எங்கோவே

6. சித்தத்தில் கசிவுடனே உடலின்கண் சிலிர்ப்புறவே
சிந்தலின்றி [ஆனந்தக்கண்ணீரைச்
சித்தந்தான் சுத்தியுறச் சிறிதேனும் வழியுண்டோ
நீங்கிவாழ [சிறுமையெலாம்
பத்தியிலான் தவத்துடனே வித்தைபல கற்பதனால் பலனேதும்
பாரிலில்லை
உத்தமனே கண்மைபோல் உன்புகழை உரைப்பதனலாம்
உய்யுமன்றோ. [உயிர்களெல்லாம்

7. சுகமான இருக்கையிலே அமர்ந்திருந்தே உடலதனைச்
சோர்வுநீங்கி [இதயந்தான்
மிகுமந்த சித்தத்தைப் புருவநடு வதன்கண்ணே மேவிடவே
கீழ்மேலாகத் [மண்டலங்கள்
தகுதியுரு சூரியனும் சந்திரனும் அக்கினியும் எனச்சொல்லும்
தியானம் செய்தே [சிந்திக்கும்
வெகுவாக நீருண்ட மேகமெனும் உன்னுடைய மேனிதனைச்
மேன்மை தாராய்

8. நீலநிற மேனியுடன் குண்டலங்கள் புன்னகையால்
கவரும் நேர்மை [உள்ளத்தைக்
ஞாலமெலாம் புகழ்கின்ற கவுத்துபமும் வனமாலை
நிலத்தைக்காத்தே [நீண்டுள்ளகைகளொடு
கோலமுறும் வயிறுடனே மஞ்சள் பட்டாடையுடன் அழகுமிகு
குலவி நின்றே [தொடைகளுடன்
ஓலமிடும் மறைகாணாத் தாமரைபோல் பாதங்கள்
உனைப்பணிந்தேன். [தனைப்பெற்ற

9. உனை எண்ணும் உணர்வாலே உச்சிமுதல் பாதம்வரை
சிந்தை செய்தே [உன்னுருவைச்
தினையளவும் பேதமின்றிச் சிந்தனையை உன்னுடை
நிற்பேன் [முகந்தனிலே நிறுத்தி
மனமெதிலும் செல்லாத மாண்புமிகு தன்மையினை
மகிமை காண்பேன் [எய்தியுன்றன்
எனைத்தொன்றும் நீயென்றே எண்ணிடுவேன் ஏக்கமிலா
உன்னைக் காண்பேன். [மனந்தன்னில்

10. சிந்தையிலே நாள்தோறும் உனையெண்ணும் வேளைகளில்
வந்துசேரும் [சித்தியெலாம்
சிந்தைமிகும் சித்திகளால் நினையடைய லாவதிலை
துயரம் நீப்போய் [நேயமுடன் அன்பர்கள்
விந்தைமிகும் உன்னுருவம் அல்லாமல் வேறொன்றும்
விரும்பமாட்டேன் [என்னாளும்
வந்தவரை வாழ்விக்கும் வள்ளலே குருவாயூர் வாழ்கின்ற
வாழ்வருள்வாய். [வரதனே

## தொண்ணூற்றாறாவது தசகம்—விபூதி யோகம்

1. என்றென்றும் முழுமுதலாய் இருப்பவனே அட்சரத்தில்
அமைதி கொண்டே (அகரமெனும்
பொன்றாத மந்திரத்தில் ஓங்கார மாய் நின்றே மன்னர்களின்
போற்றப் பெற்றே (மதுவாகிப்
நன்றுணர்ந்த பிருகுவுடன் நாரதராய்ப் பிரகலாதன்
நாமமுற்றே (தேனுவெனும்
துன்றிவரும் கருடனுமாய் அனந்தனெனக் கங்கையெனத்
துலங்குகின்றாய் (தூய்மையுறத்

2. வேதியரில் மாவலியாய் யாகங்கள் தமில் ஜபமாய் வீரர்களில்
விளங்கி நின்றே (அர்ச்சுனனாய்
ஓதிவரும் பத்தர்களில் உத்தமராய் வலிவுடையோர் வலிவாகி
வீரியரின் வீரமாகிச்
சோதியுறும் குருவாயூர்ச் சுந்தரனே உன்பெருமை
எல்லை இல்லை (தனக்கென்றோர்
ஆதியந்தமாய் என்றும் உனைத்தவிர இவ்வுலகில் வேறு
யாவை சொல்வாய். (பொருள்

3. வேதத்தின் விதிகளிலே விதித்தருளும் வருணங்கள் செய்கின்ற
விதிகள் தம்மைப்
பேதமிலா உன்றனுக்கே உரித்தாக்கி அவற்றையெலாம்
செய்து பின்னர் (தியாகங்கள்
ஆதியந்த மற்றுயரும் வேற்றுமைகள் சற்றுமிலா
அழகு கண்டே (அமுதமயமாய் நிற்கும்
சோதிவடிவான உனதுருவொன்றே உலகிடையே நிலைக்கு
சோர்வு தீர்வார் (மௌனச்

4. ஞானமுடன் கன்மமதும் பத்தியெனு மிம்மூன்றும் உனை
சாதனங்கள் (யடையும்
மோனமுடன் உலகியலை வெறுத்தோர்க்கே ஞானயோகம்
சித்திக்குங்காண்

தானென்ற அகந்தையின்றி பத்தியுடன் பணிபவர்க்கே
ஆன்ம யோகம் (என்றென்றும்
ஊனமிலா அன்புடனே பற்றின்றி உனைப்பணிவோர்க்
பத்தியோகம். (கென்றென்றும்

5. மனிதனென உருவெடுத்தோன் புண்ணியத்தால் ஞானமுடன்
உன்பால் கொள்வான் (பத்தியதை
புனிதமுறு சுவர்க்கமுடன் நரகத்தில் புகுவோர்கள் மனித
பிறப்பதற்கே (ரெனப்
இனிதெனவே நினைத்திடுதற் கிதுவொன்றே காரணமாம்
எங்கள் கோவே
மனிதனெனும் தோணியினால் பிறவியெனும் கடல் கடக்க
மார்க்கம் தாராய்.

6. கேவலமாம் ஞானத்தால் பல பிறவி எடுத்திடினும்
கிட்டாதாகும் (உனையடைதல்
ஆவலினால் கன்மங்கள் தமைச்செய்வோர் உனையடைய
யடைய வேண்டும் (பலபிறவி
ஓவலிலாக் கன்மமெனும் யோகந்தான் வீடடைய நெடுந்
உள்ளதன்றோ (தொலைவாய்
ஆவலுடன் உனைப் போற்றும் பத்தியெனும் யோகமதே
அமைவதாகும். (உனையடைய

7. கேவலமாம் ஞானமொன்றே உனைக்காணத் துணைசெய்யா
வியாசர் சொன்னார் (தென்றன்னான்
மேவுமொரு பிரமத்தின் தத்துவத்தைக் கேட்டறிந்தே பத்தி
வீடு காண்பான் (கொண்டோன்
தேவையுறும் பத்தியதும் பல்காலும் முயலாமல் யாவருக்கும்
கிட்டா தேனும்
ஆவலினால் பயிற்சிசெய அனைவருக்கும் அதுகூடி என்னாளும்
அமைதி செய்யும்.

8. கருமமெனும் மார்க்கத்தில் விருப்பில்லா நிலைபெற்றேன் உன்
நாளும் போற்றி (நாமம்
விருப்பங்கள் தனைவிடுக்கும் வகையறியேன் உன்னிடத்தில்
விடுத்துக் கொண்டு (பற்றுகளை
பெருத்ததொரு பத்தியினைப் பெற்றிடவே வரமருள்வாய்
பெரியாய் என்றும்
பொருத்தமுற உள்ளத்தில் நீயிருக்கப் பற்றுக்கள்
ஓடுமன்றோ. (எனைவிடுத்தே

9. வேதியன்தான் விதிவசத்தால் செல்வமெலாம் சென்றுவிட
ஏதுமின்றிச் (வேதனைதான்
சேதமுறக் காரணமாய் நிற்பதுதான் மனமொன்றே
சிந்தை தன்னில் (என்றவனாய்ச்
வேதனையே இல்லாமல் உனை எண்ணித் தன்செயல்கள்
உனையடைந்தான் (தமை மறந்து
சாதனைக்கு வழிவகுக்கும் என்தலைவா அடியேற்குன்
வழியைத் தாராய். (காந்தமிகும்

10. முன்னொரு நாள் ஐலன் என்போன் ஊர்வசிபால் மிகமோகம்
மதிமறந்தே (கொண்டதனால்
பன்னெடுநாள் காமத்தைத் துய்த்தவனாய்க் காமத்தின்
கடிந்தானாகி (தன்மைதனைக்
முன்னவனே உனையடைய முனைந்தவனாய்ப் பத்தியுடன்
முத்தி பெற்றான் (துதித்தவனாய்
என்றனுக்கும் உன்னருளை ஈந்திடுவாய் எல்லோர்க்கும்
ஈசா நீதான். (இரங்கியருள்

## தொண்ணூற்றேழாவது தசகம்—மார்க்கண்டேய சரித்ரம்

1. ஞானமொடு சிரத்தையதும் கர்த்தாவும் இருப்பிடமும்
ஆகாரபேதம் தாமும் (சுகமும் கர்மமுடன்
தீனமுறு முக்குணத்தால் தாழ்வாகி நடுவாகி சிறந்தனவாம்
திளைத்தலுண்டாம் (தன்மையுடன்
மோனமுறும் சிந்தையுடன் சேவித்தல் முதலான செயல்
தொண்டாய்ச் செய்தே (களையுன்
ஈனமுறு பிறவிதனை நீங்கியே நின்பாதம் எய்திநான்
பெற இருக்கச் செய்வாய்.

3. மனந்தன்னை உன்னிடமே மன்னிடுமோர் வகைசெய்து
உனக்கேயாகி (மாபெரிய செயலனைத்தும்
மனந்தனில் உனை எண்ணும் தொண்டர்களைச் சேவிக்கும்
மன்னும் வண்ணம் (சேவைகள்தாம்
இனமான சீவன்கள் எவற்றிடமும் ஒத்ததொரு ஏற்றமிகு
குணமும் கொண்டே (இனிமை சால்
புனமான துழாயணிந்த உன்பதமே போற்றி செய்யும்
பெறுதல் வேண்டும். (புண்ணியத்தைப்

3. உனையடையும் வழிவகைதான் உதிக்கின்ற மட்டுமுனை
குளிர வாழ்த்தி (உருகி உளம்
தினையளவும் பிசகாமல் தினம் தினமும் உன் பெயரை
திரும்பச் சொல்லி (மனத்தின் கண்
புனைந்துள்ள உன்வடிவைப் போற்றுமொரு செயலன்றி
செயலுமின்றி (மற்றுமொரு
நினைந்துனது பதமலரை யடைகின்ற நீண்டதொரு
நீயருள்வாய்! (பத்தியினை

4. பத்தியினை யான்பெறவே ஆயுளுடன் நோயில்லா வாழ்க்கை
அருளவேண்டும் (தனை
உத்தமனே மருந்திற்குப் பால்போல உன்னுடைய தரிசனந்
உதவ வேண்டும் (தான்

நித்தமுனைப் பூசித்த மார்க்கண்டன் ஓராண்டில் யமயத்தை
ஓட்டி விட்டான்
அத்தகைய பதமெனக்கே அருளுகென அடியேனும் பலகாலும்
யாசிக்கின்றேன்.

5. மார்க்கண்டர் புஷ்பபத்ர நதிக்கரையில் உமைப்போற்றி
வந்த்ர காலமட்டும் (ஆறுமன்
சோர்வின்றித் தவம்செய்ய இந்திரனும் அவர்தவத்தைக்
துணையோராக (கலைத்திடவே
வாரணிந்த மென்முலையார் தேவர் உலகத்திலுறை
அனுப்பலோடும் (வனிதையரை
சோர்வற்ற மார்க்கண்டேயர் துவாளாமல் இருந்தாரால்
துயரம் தீர்ப்போய். (உலகவரின்

6. நாராணனாய் நீ தோன்றி மார்க்கண்டன் தனைப்போற்றி
ஏற்றானில்லை (வரமளிக்க
பார்புகழும் உன்னுடைய மாயையினால் தோன்றுகின்ற
பார்க்க எண்ணி (வடிவத்தைப்
சேர்ந்கிட்ட பக்தியினால் உனைத் துதிக்கும் திருவரத்தைக்
கேட்டுப் பெற்றான்.
யாரறிவார் உன்பெருமை அச்சுதனே குருவாயூர் அமர்ந்துள்ள
அமரரேறே.

7. நீ மறைந்த வேளையிலே காற்றாலும் மழையாலும்
பொங்கலோடும் (கடலெல்லாம்
போம்வகைதான் காணாமல் மார்க்கண்டன் பத்துக்கோடி
நீரின் கண்ணே (ஆண்டுகளாய்
ஆமுறையை யறியாமல் தவிக்கையிலே ஆலிலையில் குழந்தை
நீ மிதந்து (யென
போகின்ற பொழுதினிலே கட்டை விரல் சுவைத்திருந்த
புனிதம் கண்டார்.

8. உனைக்கண்டே மயிர் சிலிர்த்து உனைத்தொடவே
(விரைந்திடிலும்
உனது,மூச்சு
மனமாயையற்றவரை உள்ளிழுக்க உலகங்கள் அத்தனையும்
மகிழ்ந்து கண்டார்

உன்னுடைய விடுமூச்சில் வெளிவந்தே வெள்ளத்தில் உழன்றவர
வாடும் வேளை
புன்னகைசேர் கடைக்கண்ணின் பார்வையினால் மறுபடியும்
தவமே செய்தார்.

9. முப்புறமும் எரித்தவராம் சிவனங்கே முனிவர்முன்
தோன்றிநின்று
ஒப்பரிய வரமாக என்றென்றும் நிலைத்திருந்து உலகெல்லா
போற்றுகின்ற
செப்பரிய பரந்தந்தார் திரிமூர்த்தி வடிவாக அவ்வேளை
நீதான்நின்றாய்
எப்பொருளும் ஆட்டுவிக்கும் ஈசனெனும் இன்பநிலை
உண்மையன்றோ.

10. மூன்றாக விளங்குகின்ற மூவுலகில் சத்தியமாம்
உலகின்கண்ணே
சான்றாகப் பிரம்மனுடை உலகுடனே விண்டுலகும் கயிலாய
ஒன்றின்மேல் ஒன்றாய் நிற்கும்
தோன்றாத மாயைதான் தொடராத வைகுந்தம்
(துதிக்கும்வ
தோன்றுமன்றோ
ஆன்றோனே அவ்வுலகில் சத்துவமாய் நிற்பாய்நீ குருவாயூர்
அமர்ந்த கோவே.

## தொண்ணூற்றெட்டு

1. படைத்தளித்துத்

ஓங்கிநின்றே
கிடைத்திடுதற் கப்பாலாய் தேவர்களும் முனிவர்களும்
(அறியாத

கீர்த்தி கொண்டாய்
நடைமுறையில் உலகியலில் நாடோறும் உழல்கின்ற
நானிலத்தோர்

உனைக் காண்பாரோ
கொடைவள்ளல் எனநின்று குருவாயூர்தனில் வருவோர்
குறைகள் தீர்ப்போய் (யாவருக்கும்

2. பிறப்புடனே கன்மங்கள் பெயரதுவும் குணதோஷம்
(பிறவின்றிப்

பெரியோனாகி
உறப்பெற்ற உலகியலை நன்குணர்ந்தே மாயையினை
அனுசரித்தே

ஏற்றுக்கொண்டு
மறப்பரிய வடிவங்கள் தாங்கிநின்றே மாபெரிய சக்தியென
மற்றவர்கள்

போற்றிசெய்ய
பிறப்பிறப்பே இல்லாத பெருமானே குருவாயூர்ப் பிஞ்ஞுகனே
உன்னுடைய

பெருமையென்னே.

3. உலகத்தில் உள்ளபொருள் எதுவுமில்லை என்கின்ற
உயர்ந்ததொரு

தன்மை கொண்டே
இலகுகின்ற எஞ்சிநிற்கும் பொருளெதுவோ அதுதான்நீ
எனஉரைக்கும்

அமைதிகேட்டேன்

மலமறுக்கக் குருவாயூர் மகிழ்ந்துறைந்தே வந்தவர்கள்
(வாதனையை
தீர்த்துநிற்கும்
குலக்கொழுந்தே உனைத்துதித்தேன் குறையெல்லாம்
(தீர்த்தென்னை
ஆட்கொள்வாயே

4. மாயையுடை பிரதிபலிப்பால் தத்துவங்கள் பூதங்கள்
(பொறிபுலன்க
அனைத்தும்கொண்டே
தூயதொரு படைப்பினைநீகனவினுக்கு ஒப்பாக உவப்புடனே
படைக்கின்றாயால்
மேயதொரு ஆமைதான் ஐந்துறுப்பை அடக்குதல்போல்
(வையத்தை
உன்னுள் கொண்டே
ஆயனெனும் குருவாயூர் அண்ணலே ஒளிவடிவாய் ஆன்மாவி
வடிவாய் உள்ளாய்.

5. உலகினுக்குக் காரணமாய் உள்ளவன் நீ எனஉலகம்
(உனைப்பற்
உரைக்கக் கேட்டேன்
இலகிடுமவ் வேதாந்தம் புருஷனை மூலமுறும் பிரகிருதியுடன்
பரம்பொருளின் தன்மையாக
பலப்பலவாய் புகன்றிடினும் அவற்றையெலாம் படைக்கின்ற
பண்புகொண்டோய்
நிலவுமுன்றன் திருவடியை நினைத்தின்ப வேட்கையிலே
(நிதநிதமு
பணிதல் செய்வேன்.

6. சத்துடனே அசத்தாகிச் சதசத்தாய் உறுதியுறக் கூறவரும்
அவித்தைதானும்
இத்தரையில் கயிறதுதான் பாம்பாகும் நிலைபோல
(மாந்தரிடை
இருக்குமன்றோ
அத்தனையும் செய்கின்ற அவித்தைதான் வேதாந்த
(அனுபவத்தா
வித்தையாகி
நத்திவரும் இல்வாழ்வை அழிக்கின்ற கோடாரியாய்
நாளும்காக்கும். (உலகிடைசே

7. உண்மைதனை ஆயுங்கால் உன்
குடத்தின்கண்ணே
திண்மையுறு மண்போல எங்கெங்கும்
விளங்குமன்றோ
கண்ணயர்ந்தே கனவு கண்டோன்
கயிற்றுக்குள்ளே
உண்மைநிலை புலப்படல்போல் ஞானந்தான் உறறவுடன
உண்மை தோன்றும்

8. சூரியன் தான் உதித்திடலும் அங்கியவன் எரித்திடலும்
வாயுதானும்
வீரியத்தால் வீசுதலும் அவரவர்தங் கடமைதனில்
விளங்கித் தத்தம்
காரியங்கள் செய்வதுவும் பதவிகளில் ஏறிப்பின் இறங்குவதும்
கர்த்தனே உன்
நேரியன்ற பார்வையினால் நிகழ்வதுகாண் குருவாயூர்
நேரியோனே

9. முக்குணத்தின் வடிவான மூவுலகைத் தோற்றுவித்தே அ. உ. ம
என்றுரைக்கும்
தக்கதொரு ஓங்காரமாய் நின்றே மும்மூர்த்தி
வடிவமாகி
மிக்ககலை மூன்றான வேதங்கள் போற்றிடவே மூவகையாம்
அவத்தைதன்னை
தக்கபடியறிபவனும் மூன்றடியால் மூவுலகை அளந்தவனும்
ஆகிநின்றாய்

10. மூவகையாம் காலத்தும் வேறின்றி நிற்பவனே சத்தியமும்
துலங்குமுன்றன் (சுத்தமுமாய்த்
தேவடிவம்தன்னைத் தினம் தொழுகின்றேன் அவ்வடிவம்
வேட்கையோடும் (பந்தங்கள்
யாவருமே போற்றுகின்ற இரண்டற்றே மாறின்றி
ஆதாரமாகி நன்றே (குணங்களொடும்
மேவுமொரு காரணந்தான் இல்லாமல் மாசற்றே முனிவர்கள்
பரவற்பாற்றே

11. சக்கரந்தான் பன்னிரண்டு ஆரக்கால் முன்னூற்று
முறையுடைத்து (அறுபதெனும்
எக்காலும் இடையின்றிச் சுழன்றுவரும் உலகினையும்
இழுத்துச்செல்லும்
புக்கதொரு புகலிடமாய் உன்னடிகள் நம்பிநின்றேன்
துன்பம் நீங்கித்
தக்கவழி காணவருள்பாலிக்க வேண்டுகின்றேன்
தமியனேனே. (உன்றனையே

## தொண்ணூற்றொன்பதாவது தசகம்— வேதஸ்வரூபம்

1. உலகமெலாம் மூவடியால் அளந்தவனே உலகமெலாம்
தாங்குந்தேவே
உலகத்தில் உண்டாகும் தூசுகளை உள்ளபடி
அளக்கல் ஆமோ
இலகுமொரு பரமபதம் தனையடைந்தே முத்தியெனும்
மலரின்கண்ணே
நிலவுகின்ற மகரந்தத் தேன் சொட்டும் வைகுந்த
நிலையைக் கண்டேன்.

2. ஆதியெனும் பெருங்கடவுள் அனைதையுமே படைத்தருளும்
அழகுமூர்த்தி
பேதமறச் செல்வங்கள் படைத்திடுமப் பேதமிலாப்
பெரியோன்தன்னை
நீதியுடன் யாகத்தில் பூசிப்போன் கண்ணன் புகழ்
நிதமும் சொல்வோன்
வேதனைகள் நீங்கிடவே அருள் நிறைந்தே பரமபதம்
மேவுவானே.

3. துதிபாடும் கவிஞர்களே வேதத்தின் சாரமெனும் உங்களுடை
விருப்பிற்கேற்ப
கதியெனவே காட்சிதரும் பெருமானின் பெருமைகளைப்
பாடிநிற்பீர்
மதிபடைத்தீர் அவன் புகழை மனதாரப்பாடுங்கள்
மனதில் கொண்டே
விதிபடைக்கும் வித்தகனை வாழ்த்தலன்றி வேறொன்றும்
உலகில் இல்லை.

4. தருமத்தைக் காரணங்கள் துணைகொண்டே
தருவோனாகி
விருப்பமுடன் இந்திரனின் தோழனுமாய்
பணியாள்போல
அருத்தியுடன் முனிவரெலாம் புகழ்கின்ற பரமபதத்
தலைவனாகிக்
கருக்கொள்ளும் உயிர்க்கெல்லாம் உயிரானான்
கழல்கள் போற்றி

5. உன்பெருமை யதன்முடிவை உணர்ந்தவராய்ப் பிறந்தவர்கள்
பிறப்பவர்கள் யாருமில்லை
மன்னுமொரு வழிகாண மாயவனே உன்பெருமை
பலகாலும் மனதிற்கொள்வேன் மண்ணிடையே
பின்னமுறும் மூவுலகிற் கப்பாலாம் வைகுந்தம் தனிலுறைந்தே
உலகமெலாம் காக்குமுன்னை
என்னென நான் ஏத்திடுவேன் புகழ்ந்துரைக்கும்
எவையென்றே அறியேன் கண்டாய்[வாழ்த்துரை தாள்

6. படைப்பதனில் முதல்தோன்றிப் பாங்குபெற்ற நீரதனில்
பள்ளிகொண்டாய்
இடைப்பட்ட சீவன்கள் உன்னிடமே வந்தடைந்து
ஒன்றித்தோன்றும்
நடைசிறந்த நாபிதனில் தாமரையின் ஒரு மலர்தான்
தோற்றிற்றன்றே
கிடைப்பரிய மலரதனை திக்கெல்லாம் இதழ்களென
கர்ணிகையாய் உரைப்பாரன்றே. [மேருவுவினைக்

7. உலகத்தீர் உமக்கொன்று கூறுகிறேன் விண்டுதான்
தலைவனாவான் [உலகத்தின்
பலகற்றீர் அவனுருவம் இதுவென்றே அறிவொண்ணா
உம்பால் உண்டு [மாயையதும்
விலகவரும் பனிபோல மாயையினால் மறைவுண்டே
பொழுதுபோக்கி [வீணாகப்
அலைகின்றீர் யாகங்கள் பலசெய்தே அமைதியின்றி அகிலத்தில்
அதைஎன் சொல்வேன்.

8. கணக்கற்ற தலைகளுடன் கைபலவும் பலபாதம் பெற்றுயர்ந்த
கண்ணா நீதான்
இணக்கமுடன் உலகாயும் அப்பாலும் இயங்கிடுவாய்
இருப்பாய் நீயே [சித்தத்தில்
உணக்கலுறும் உடலாக உள்ளமென உயிர்க்குலங்கள்
உள்ளே யுள்ளாய்
வணக்கங்கள் செய்வோர்கள் வரம்பெறவே வாழ்த்துகிற
வள்ளல் நீயே.

9. மூன்றான உலகத்தில் முழுத்தெய்வமாயிருந்தும்அவற்றிக்குளும்
அப்பாலாகி
தோன்றாத ஞானவடிவெடுத்துள்ளாய் உன்னுடைய ஒருபகுதி
உலகமாகும்
ஆன்றஉன்றன் பரமபதம் மற்றவையாம் அறிந்தவர்கள்
உரைக்கும் உண்மை
சான்றோனே குருவாயூர் சருவேசா உயிரெல்லாம் காப்பவனே
வணங்குகின்றேன்.

10. கண்ணுக்குத் தோன்றாத உன்னுடைய உண்மையுரு
காணவில்லை [மாந்தர்களால்
புண்ணியனே கண்ணனெனப் புலப்படும் உன் உண்மையுரு
புலன்விருந்து
எண்ணரிய இவ்வுருவே எந்நாளும் என்மனதில் இலங்கிநிற்கும்
இன்ப ஊற்றாம்
உண்மைநிலை யான் பெறவே உயர்கதியை யடைந்திடவே
உதவுவாயே. [என்றனுக்கே

## நூறாவது தசகம்
## கேசாதி பாதாந்த வருணனை

1. காயாம்பூ வண்ணத்தைக் காண்கின்றேன் அமுதத்தை பருகுகின்றேன் [அள்ளியள்ளிப்
தோய்கின்ற உள்ளத்தே குழந்தை உருமறைந்திடவும் காணப்பெற்றேன் [காளையுரு
சேயாக யான்நின்றே நாரதரும் அழகிகளும் சூழ்ந்துநின்று துதிகள்பாட
வாயாரத் தொண்டர்கள் பரவிடவே வரமெல்லாம் தருகின்ற வடிவம் கண்டேன்.

2. உன்னுடைய கூந்தல்தான் மிகவடர்ந்தே மிகக் கருத்து சிவப்பெற்றே [நன்றாக
பொன்மயமாம் சிரோமணியும் மயிற்பீலி அழகாகச் சுற்றியுள மகிமைகண்டேன்
நன்னிலையில் பளபளக்கும் நாமமுடன் மதிபோன்று ஒளி வதனங் கண்டேன் [படைத்த
என்னவனே குருவாயூர் தனில்உறைந்தே எல்லோருக்கும் எங்கள்தேவே. [அருளுகின்ற

3. கருணையெனும் கடலதனின் அலைபோலும் புருவத்தால் காட்சிதந்தாய்
கருமைநிற இமைகளுடன் தாமரையின் இதழொத்த கவலைதீர்த்தாய் கண்களினால்
வருகின்றோர் அனைவருக்கும் வாழ்வருளும் குருவாயூர் வணங்குகின்றேன் [வள்ளலுனை
கருவினிலே வாராத நிலைதன்னைக் கருணையால் கடையனேற்கே. [காட்டிடுவாய்

4. உயர்ந்ததுவாய் விளக்கமுறும் மூக்குடனே காதுகளில் குண்டலங்கள் [ஒளிவீசும்
அயர்ந்தவர்க்கே இன்பமருள் பல்வரிசை கோவையென அழகு இதழ்கள்தாமும் [கொளும்

மயர்வகற்றி உனையடையும் மார்க்கங்கள் பலவளிக்கும்
முகமும் கண்டேன்
துயர்துடைக்கும் தூதுவனே துணைநீயே தொன்மையினும்
குருவாயூரா. [தொன்மையுறும்

5. கைகளிலே மணிகளினால் கங்கணங்கள் தமைப்பூண்டு
தம்மைச்சேர்த்தே [நகவரிசை
வையமெலாம் மயங்கவெனக் குழலதனை வாய்வைத்தே
இன்பம்சேர [வகைவகையாம்
மெய்சிலிர்க்க இசையிசைத்தே உலகமெலாம் நாதத்தில்
மேன்மைகொண்ட [மிதந்திடவே
உய்வருளும் உன்வடிவை என்னாளும் உவப்புடனே கண்டிடவே
உதவுவாயே.

6. மார்பிலணி கவுத்துபத்தால் விளங்குகின்ற மணிக்கழுத்தும்
ஸ்ரீவச்சத்தால் [அழகுமிகும்
சோர்வகற்றும் முத்துவடம் தன்னாலும் துலங்குகின்ற
மார்பினோடும் [மேன்வையுறும்
ஆர்வமுடன் மலர் பலவால் அன்பர்தரும் மாலைகளால்
அன்புப்பார்வை [அலங்கரிக்கும்
சேர்கின்ற ஆபரணம் ஆனதொரு மாலையையும் தினமும்நான்
காணவேண்டும்:

7. சந்தனத்தின் மணத்தாலே சார்ந்தவர்கள் உள்ளங்கள்
கவர்ந்தோனாகி [அனைத்தையுமே
நிந்தையிலா மும்மூன்று உலகங்கள் உன்னுள்ளே நின்றிருந்தும்
நிலவப்பெற்றே [சிற்றிடைதான்
இந்திர நீலக்கல்மேல் பொன்போலப் பட்டாடை இன்பமுடன்
இணையப்பெற்றே
வந்தவர்க்கு வரமருளும் பொன்னரைஞாண் பூண்டவனே
அடிகள் போற்றி. [பெருமாளே

8. தொடையழகை உரைக்கவெனில் பளபளப்பாய்த்
காதல் கொள்வாள் [திருமகள்தான்
தொடையதுதான் உலகினையே மயக்கிவிடும் என்றெண்ணிப்
மூடிநிற்கும் [பட்டாடை
மடைதிறந்த வெள்ளம்போல் கருணையினை அன்பர்க்கே
முழந்தாள் கண்டேன் [வழங்கிவரும்
உடையவனே உன்னுடைய கணுக்கால் உள்ளத்தைக்
உவப்பிலாழ்த்தும். [கொள்ளைகொண்டே

6. பாதங்கள் பலசெய்தே பரிதவிக்கும் பக்தர்களின் பாவங்கள்
நீக்கவரும் பாதசேவை
தீதான அஞ்ஞானக் கடலதனில் அன்பர்கள் மூழ்குங்கால்
நுனிக்கால் கொண்டே [கூர்மமென
ஆதரவால் அன்னவரின் இதயத்தில் ஒளிபரப்பும் நகவரிசை
கொண்டுயர்ந்தே நளினமேவும்
ஓதரிய விரல்களையும் கண்குளிரக் கண்டுகொண்டேன்
உயர்ந்தவனே குருவாயூரா.

10. உன்னுடைய உறுப்புகளில் உயர்ந்ததுவும் முனிவரெலாம்
உணர்வுபொங்கி [உவப்புற்றே
அன்புடனே வாழ்த்துவதும் பேரின்பம் தனைக் கொடுத்தே
பெருமைநல்கி [அன்பருக்குப்
இன்பமெலாம் யாவருக்கும் என்னாளும் எப்பொழுதும்
ஈந்துநின்றே [எல்லையற
துன்பங்கள் துடைக்கின்ற தூய்மைமிகும் உன்னுடை பாதமலர்
துணையாமன்றோ.

11. என்னாலே உன்வடிவை உன்புகழை உரைத்திடுதல்என்னாளும்
எளியதன்று
பொன்னாடை புனைந்தவனே ஆயிரத்தின் மேலாகப்
அன்புருக அர்ச்சித்தேன்காண் [பாக்களினால்
என்னுடைய வினை தீர்க்கும் ஏந்தலே நாராயணன்தான்
இந்தநூல் நாராயணீயம் [இயற்றியதால்
மன்னுகின்ற இன்பமெலாம் வையமெலாம் பெற்றிடவே
வேண்டிநின்றேன். [வரமருள

ஸ்ரீமந் நாராயணீயம் முற்றிற்று.

1991-ஆம் ஆண்டு செப்டம்பர் எட்டாம் நாளுக்குச் சரியான பிரசோற்பத்தியாண்டு ஆவணிமாதம் இருபத்து மூன்றாம் நாள் ஞாயிறு அமாவாசை திதியில் மொழிபெயர்ப்பு முற்றுப்பெற்றது.